# தமிழ் உணர்ச்சி

(கட்டுரைகள்)



யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்

கார்த்திகேயினி பிரசுரம்
இராமசந்திரபுரம் :: புதுக்கோட்டை ஸ்டேட்

## பதிப்புரை

யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் தமிழர் முன்னேற்றத்திற்கே தவம் புரியும் பெரியார். அவர் அருளிய நூல்களில் மிகச் சிறந்ததொன்று தமிழ் உணர்ச்சி; இந்நூல் முதற்பதிப்பு வெகு விரைவாகச் செலவானது; நூற்றுக்கணக்கான தமிழர் மறு பதிப்பை எதிர்பார்க்கின்றனர். தமிழுணர்ச்சி இரண்டாம் பதிப்புரிமையை எமக்கு அளித்த யோகியாருக்கு நன்றி; இப் பதிப்பில் ஆசிரியர் சரித்திரப் பகுதிகளைத் திருத்திப் புகுத்தியதுடன், சில புதிய கட்டுரை களையும் சேர்த்திருக்கிறார். தமிழ் உள்ளமட்டும் இந்நூல் தமிழருக்கு வீர வுணர்ச்சியும் செய லெழுச்சியும் தந்து விளங்கும். உரிமைபெற்ற இந்தியாவில் பெருமைபெற்ற தமிழகம் சீரோங் கிப் பொலிய இந்நூல் சக்தி தந்து நிலவுக. இந்நூலின் உரிமை ஆசிரியருக்கே. எந்தாய் வாழ்க!

இராமசந்திரபுரம்
22—10—47 } கார்த்திகேயினி பிரசுரம்






# தமிழ் உணர்ச்சி

## க. தமிழாலயம்

**பை**ந்தமிழ்க் காதலர் வருக! இதோ, தமிழாலயம்; இக்கோயில், உலகத்தோற்றத்துடன் தோன்றியது. மனித மரபு, முன்பு இங்கேயே தோன்றியது. இக்கோயிலின் பெரும் பரப்பில் ஒரு பகுதியைக் கடல் விழுங்கியது. எஞ்சி நிற்கும் இத் தொல்பெருங் கோயிலைத் தங்கமணிக் கோயிலாக்குவோம். இதற்கு ஒரு வெற்றிக்கோபுரம் எழுப்புவோம்.

தமிழன்பீர், உங்கள் கைகளுக்கு அல்லும் பகலும் வேலையுள்ளது; உங்களாவியின் ஒவ்வொரு மூச்சும் இத் தமிழ்க் கோயிலின் அருட்பணிக் காகுக! இயற்கலைகள், நுண்கலைகள், சிற்பம், பண், பனுவல், பரதம், கூத்து, இலக்கியங்கள், அருள், பொருள், ஆற்றல், அழகு, வீரம் ஆகிய இவை இலங்கும்படி இவ்வாலயத்தைப் புதுக்கியமைப்போம்; சாதிச் சண்டை, சமயப் பெரும்போர், வாது வழக்கு, வேற்றுமை, பொறாமை, சிறுமை, அகந்தை, வறுமை, மடமை, சோம்பல் முதலிய வற்றை இதனின்றொழிப் போம்; தடைகளைத் தகர்த்து முன்னேறுவோம். நாம் தமிழன்னையின் அருள்வீரர்! தனது மனத்தி லுதித்த வடிவைச் சிலையிற்செதுக்கும் சிற்பி, அதே குறிப்பாகக் கருத்தூன்றி, அக்கம் பக்கம் பாராது பேசாது, வேலை செய்கிறானன்றோ? அதுவே தொழில் யோகம்! அம்மாதிரிப் புதிய தமிழகத்தை யாக்குவோம்!

## தமிழம்மை

புகை யொழிக, பண்பு வளர்க. நாமனைவரும் தமிழம்மையின் வீரச் செல்வர்களென் றுணர்வோம். இங்கு எத்தனையோ சமய வகுப்புகளிருக்கலாம்; ஆனால், தமிழகத்திற் பிறந்த ஒவ்வொருவருக்கும் தமிழன்னை பொது; தமிழ் பொது; தமிழ்ப்பணி பொது; தமிழகம் பொது. "**வந்தே மாதரம்**" என்னும் வணக்கத்தால் நாட்டியக்கம் எவ்வாறு முன்னேறியது என்பதை அனைவரும் அறிவர். தமிழர் ஒருகுலப் புதல்வராக முன்னேற வேண்டின், **தமிழம்மை வணக்கம்** இன்றியமையாதது. இதோ, தமிழ்த் தெய்வம் விளங்குகிருள்! எந்தாய் வாழ்க, எந்தாய் வாழ்க! வாருங்கள் சிற்பிகளே, தமிழன்னைக்கு ஒரு பொன் மணிச் சிலை சமைப்போம்;

அரனருட் புதல்வி அருங்கலைச் செல்வி
வரனருள் முதல்வி வாழிய தமிழ்த்தாய்!
அறிவனல் விழியாள்; அமுதக் கதிர்விரி
முழுமதி முகத்தாள்; மோகனக் காந்தம்
வீசிடும் அழகி; மின்னெனத் தெறிக்கும்
பொலிநகை முத்தம் பொழிந்திடு வாயாள்;
தவச்சுடர் காந்துந் தணல்மணி முடியாள்;
மணியினும் பொன்னினும் அணிபெறுங் கோடி
வாடா நறும்பா மாலைக ளணிந்தாள்;
தென்னா டெல்லாந் தன்னா டாகப்
பாண்டிநா டென்னும் பளிங்கணை யமர்ந்தாள்;
வைகையும் பருணியும் மலரடிச் சிலம்பாம்;
இலங்கை யன்னம் இணையடி தாங்க
வீற்றிருக் கின்ருள், வீரர்க் கிறைவி!
எழுதா மறையாம் இன்னிசை பிழியும்
காவிரி யாழைக் கைத்தலம் பிடித்தாள்;
அறமும் வாய்மையும் அருளும் விளக்கும்

வெற்றிக் கதிர்க்கொடி விண்ணுற வுயர்த்தினள்;
சிவனார் குலந் திருக்கரங் கொண்டாள்;
இயலிசை நாடக வியன்கலை யணிந்தாள்;
முருகவேள் மயில், 'இது முகில்' எனத் தோகை
விரிநடம் புரியுஞ் செறிகுழற் பாவை,
ஐந்திணைச் செல்வம் அளித்திடும் அரசி;
எட்டுத் திசையும் இசைபரந் தொலிக்க
வார்கடல் முரசம் வாழிய வென்னக்
*கார்வரை யிருபுறம் கைலாகு கொடுக்கப்
பொன்னும் பச்சையும் பூவுங் கனியுங்
குலுங்குஞ் சோலைக் குளிர்நிழ லிருந்தாள்!
தமிழீர் வணங்கீர், தரணியீர் வணங்கீர்
அறிவுத் தெய்வம், அருளொளித் தெய்வம்,
அழகுத் தெய்வம், அருந்தமிழ்த் தெய்வம்!
எந்தாய் வாழ்க, எந்தாய் வாழ்கவே!

அன்பீர், இந்தத் தமிழ்த் தெய்வத்தை நமது உள்ளக் கோயிலில் ஒளிபெற நாட்டுவோம்! ஓவியப் புலவீர், காவியப் புலவீர், இத் தமிழ்த் தெய்வத்தை அமுதக் கோலால் அழகுற எழுதுமின், அமுத மொழிகளால் இனிதுறப் பாடுமின்! இந்தத் தமிழம்மையை அன்பு அறிவு அருள் அழகு அணி கலை காவியம் ஓவியம் சிற்பம் முதலியவற்றால் வழிபடுமின்! இதுவே நமது முதற்கடமை. தமிழம்மையை உள்ளக் கோயிலில் வைத்து அன்புமலர் சொரிமின்! அவளருளாலே அனைத்தும் நலமாம். உண்மையான கலை வளர்ச்சியால் அவளை ஆயிரக் கணக்கான அன்பர்கூடி இசை பாடி வழிபடுக! நமது தமிழகக் கோயில்களில், இத் தமிழம்மை சந்நிதி விளங்குக; அவள் சந்நிதிமுன் முத்தமிழ்க் கலைமன்றம் பொலிக! அதில் ஆயிரக்கணக்கான தமிழ் மணிகள் அருங்கலை பயில்க! தமிழன்பர், தம்

*மேற்குத் தொடர்ச்சி மலை, கிழக்குத் தொடர்ச்சி மலை

குழந்தைகளுக்குத் **தமிழம்மை, தமிழாயி, தமிழப்பன், தமிழ் முருகன்** என்று பெயரிடுக! இதனால் தமிழுணர்ச்சி பெருகும். 'நான் தமிழன்; தமிழர் அனைவரும் தமிழ்த் தாயின் மைந்தர், எனது உடன்பிறந்தார்' என்னும் உணர்வு உள்ளந்தோறுங் கனல்க! '**எந்தாய் வாழ்க!**' என்னும் மந்திரம் தமிழுலகெங்கும் ஒலிக்க! இதுவே, தமிழர் செய்யும் முதல் வேலை.

## உ. தமிழர் நாகரிகம்

**த**மிழாலயத்தில் உலாவுவோம்: தமிழர் நாகரிகம் வீரதீரம் அருளன்பு அறிவுப்பெருக்கம் செங்கோன்மை தொழிற்புலமை வளமை வண்மை முதலியவற்றைத் தெரிந்துகொள்வோம். சுற்றிலும் எத்தனை அழகிய கோயில்கள்! இவற்றில் பல கல்வெட்டுக்கள்! அவை நம் வீரர் மன்னர் வித்தகப் புலவர் புகழை விளக்கும். இக் கோயில்களில் கண்ணையும் கருத்தையும் கவரும் பல சிலைகளும் சிற்பச் செல்வங்களுங் காணப்படுகின்றன; அவை தமிழரின் கலைத் திறனை நன்கு விளக்குவன. இக்கோயில்களில் திருவாய்மொழி, தேவாரம், திருவாசகம், பெரிய புராணம், திருப்புகழ், தாயுமானர் பாடல் முதலியவற்றைக் கேட்கிறோம். அவை உள்ளஞ்சிலிர்க்க உயிரில் பாய்ந்து நம்மைப் பரவசப் படுத்துகின்றன. அருளும் அழகும் ஆழ்ந்த பொருளும் பொருந்திய இந்தத் தெய்வமணி வாக்குகளே தமிழரின் நாகரிகச் சுவடிகள். இவையே தமிழ்ச் சமுதாயத்தை உண்டாக்கின. திருச்சி, திருப்பதி, பழனி போன்ற கோயில்கள், மலைமீது கட்டப்பட்டுள்ளன. அவை தமிழரின் சிற்பப் புலமையை விளக்கும். காளத்தி, சிதம்பரம், காஞ்சி, தஞ்சை, திருவரங்கம், மதுரை, திருநெல்வேலி, இராமேச்சுரம்

கோயில்கள் தமிழரின் ஒப்பற்ற கடவுளுணர்வையும் கலைச் சுவையையும் விளக்குகின்றன. இக் கோயில்களை அமைத்த சிற்பிகளின் பெயர்கள் நமக்குத் தெரியவில்லை. மேனாட்டில் என்றால், இத்தகைய அருங் கலைப் புலவருக்குப் பெரிய வரலாறுகள் எழுதியிருப்பர்.

தமிழர், அழகையும் அறிவையும் வணங்கி, அருளொளியைத் தேடும் இயல்பினர். சாதாரண மன்னரைப் பாடும் பாட்டுகள் தமிழருக்கு பொருட்டன்று; மன்னர்க்கும் மன்னனை இறைவனைப் போற்றும் அருட்பாடல்களையே தமிழர் விரும்புவர். கேவலம் சில போர்களை வென்று புகழ்பெற்ற மன்னர் வீரர் வரலாறுகள், தமிழர் மனத்தைக் கவரவில்லை. பரிசிலுக்குப் பாடிய பாக்கள் தமிழர் உள்ளத்தை அள்ளவில்லை. யாதினும் கொடியது அகப்போர்; அதை வென்று, மனதை இறைவனிடம் வைத்து, அவனருளால் அவன்புகழ் பாடிய கடவுட் புலவர் திருவாக்குகளே தமிழரைக் காந்தம்போற் கவர்ந்தன. தமிழர் மக்களை "நடமாடும் கோயில்க"ளென மகிழ்ந்தனர்; எல்லாரும் ஒரு குலம் என்றுணர்ந்தனர். "ஒன்றே குலமும், ஒருவனே தேவனும்" "யாதும் ஊரே, யாவரும் கேளிர்" என்பது தமிழர் கொள்கை. வாழ்வையெல்லாம் தமிழர் இந்தக் கடவுளுணர்வைச் சுற்றியே அமைத்தனர்.

இன்றும் ஒரு கோயிலை யொட்டியே மாந்தர் வாழ்வு அமைந்திருப்பதைத் தமிழ்நாட்டிற் பல இடங்களிற் காணலாம். எத்தனையோ அரசர் செல்வர் வீரர் இக் கோயில்களுக்குச் சிறப்புச் செய்தனர். அக்கால மன்னர் அளித்த பட்டயங்களையும், அவர்செய்த திருப் பணிகளையும் கோயில் தருமகர்த்தாக்கள் இன்றும்

காட்டுவர். இத்தகைய திருப்பணிகளாலும் காணிக்கைகளாலும் அக்கால மன்னரும் வீரரும் தம்மைக் கடவுளுக்கு உரிமை யாக்கலே பெருமையெனக் கருதினர். செல்வர் தமது பொருளைத் தந்தனர். உடல்பொருள் ஆவியெல்லாம் அளித்து, அன்புறுதியுடன் இறைவனுக்கு ஆளாவதே வாழ்வின் நோக்கமெனத் தமிழர் கருதினர். "கற்றதன் பயன் கடவுளைத் தொழுதல்; பிறவிப்பயன் இறைவனை யடைதல்" என்று தமிழ் மறைகள் முழங்குகின்றன. அறிவு புலமை ஆற்றல் அனைத்தையும், இறைவனுக்கும் அறவினைகளுக்குமே தமிழர் பெரும்பாலும் செலவிட்டனர். ஈகைக்கும் பொதுநலத்திற்கும் கடவுளன்பிற்கும் அறிவிற்கும் ஏற்றபடியே தமிழுலகம் மாந்தரை மதித்துப் பெருமை செய்யும். பழங்காலக் கவிகள் நல்ல தருமவான்களைப் புகழ்ந்து பாடினர்.

கோயில் வழிபாடு, திருப்பணி, கலையழகு, தேர்த் திருவிழா, வாகனம், பாட்டு, வாத்தியம், நடனம் அன்பர் உருக்கம், கோயிலுக்கு வருவோர் உடுக்கும் உடைகள், அவர் நடைமுறை இவற்றைப் பார்த்துத் தமிழரின் நாகரிகத்தைக் கணிக்கலாம். தமிழ்நாட்டில் விசுவகர்மாக்கள், சிற்பிகள், தட்டார், கருமார், சித்திரர், நாவலர், பாவலர், பாடகர், நால்வகைக் கருவிகளும் நன்கு தேர்ந்தவர், நடனப் புலவர், அருண்மறை யோதுவார், மந்திரர், மருத்துவர், அணி மணி செய்வோர், பட்டு பஞ்சு மயிர் ஆடை நெய்வோர் மிகச் சிறந்து விளங்கினர். அறுபத்துநான்கு கலைகளும் தேர்ந்த எத்தனையோ அறிவாளர் இங்கே துலங்கினர்என்பதற்குச்சான்று நமது கோயில்களே. முற்கால மன்னரும் செல்வரும் ஏற்படுத்திய கட்டளைகள் இன்றும் கோயில்களில் நிறைவேறிவருகின்றன.

கோயிலிற் போடும் விளக்கு முதல் பெரிய தேர்த் திருவிழா வரை, எல்லாம் தமிழ்நாட்டுத் தருமவான் கள் வைத்த திட்டப்படியே நடந்துவருகின்றன. அவை ஒவ்வொன்றும் தமிழர் நாகரிக விளக்கமே.

சைவ வைணவக் கோயில்கள் மட்டுமன்று; ஜைன மந்திரங்கள், புத்தஸ்தூபாக்கள், இஸ்லாமிய மசூதி கள், கிறிஸ்துவச் சர்ச்சுகள், திருமடங்கள் முதலிய புனித நிலயங்களும் தமிழர் வரலாற்றைக் கூறும். தமிழன்னை தனது சமரசக் கரங்களால் சித்தாந்த வேதாந்த த்வைத விசிட்டாத்வைத அத்வைத, ஜைன பௌத்த இஸ்லாமிய கிறிஸ்துவ ஜாரதுஷ்ட்ர பிரம ஞான சமரச சன்மார்க்க சுத்த சங்கக் குழந்தை களைத் தாங்குகிருள். மற்றெந்த நாட்டையும் விடத் தமிழ் நாட்டில் சமயச் சண்டைகள் மிகக் குறைவு. சமயத்தின் பெயரால் அதிக இரத்தம் சிந்தாதது தமிழ் நாடே!

சமரச முழக்கம் தமிழ் நாட்டிலேதான் எழுந்தது. உலக ஒற்றுமைக்கான **பிரமஞான சங்கம்,** அருட்சோதி வள்ளலாரின் **சுத்த சமரச சன்மார்க்கச் சங்கம்**, சுத்தான்ம யோகத்தில் மாந்தர் உள்ளொற்றுமையுடன் தெய் விக வாழ்வு வாழச்செய்யும் **அறவோர் திருக்கூட்டம்** முதலியவெல்லாம், தமிழ்நாட்டிலேயேவேரூன்றியுள் ளன. **தோமா** முனிவர் (St Thomas) முதன் முதல் கிறிஸ்து **சுவிசேஷங்** கொண்டு (Bible) சென்னைக்கே வந்தார். இக்காலம் எப்படியிருப்பினும், எதிர் காலத் தமிழகம் உலகிற்கு அறிவொளி காட்டும் என் பதில் தடையில்லை; தமிழ்நாடு சர்வ சமரசாலயம். தமிழ்க் கோயில்களில் கலைமகளும் திருமகளும் வெற்றிநடம் புரிகின்றனர். இவற்றைத் தவிர, ஆங் காங்கே கிராமங்களில் வில்லடிச்சான், ஐயனர், காளி

கறுப்பன், வீரன் கோயில்களைக் காணலாம்; இவையெல்லாம் அக்காலத்தில் தமிழ் வீரர் தொழுத இடங்கள். இரவில் இங்கே வீரர் போர்க்கலை பயின்றனர். இக்கோயில்களில், வில் வாள் ஈட்டி முதலிய போர்க்கருவிகளைக் காணலாம். சில திருவிழாக்களிலும் போர் விளையாட்டுகள் நடப்பதுண்டு. இவையெல்லாம் தமிழர் வீர வாழ்விற்கு அறிகுறிகளாம்.

ஆங்காங்கு இன்று காணும் மன்னர் அரண்மனைகள் தமிழரின் வீரவாழ்விற்கும், ஆட்சித் திறமைக்கும் அறிகுறியாவன. தஞ்சாவூர் அரண்மனையிலுள்ள ஆயுதச்சாலையை நோக்குக: எத்தனை விதமான போர்க் கருவிகள் தமிழரால் கையாளப் பெற்றன! சரபோஜி மன்னன் தர்பார் செய்த இடத்தைப் பாருங்கள்! எத்தனை இராஜதந்திரிகளும் கவிகளும் கலைஞரும் பாடகரும் நாடகரும் அந்த அரச முன்னிலையை அலங்கரித்தனர்! இவ்வாறே, மதுரை இராமநாதபுரம் சிவகங்கை புதுக்கோட்டை எட்டையபுரம் அரண்மனைகள், சென்னைப் பொருட் காட்சிசாலை முதலிய இடங்கள், தமிழரின் வீரப் பெருமைக்கும் ஆட்சித் திறனுக்கும் சரியான அத்தாட்சிகளாக விளங்குகின்றன. தமிழர் வீரரை நன்குமதித்தனர்; அருட்கவிகளுக்கும் கடவுட் பெரியார்களுக்கும் கோயில் கட்டி வணங்கினர். பெரியார் சமாதியின் மீதெழுந்த கோயில்கள் பல. இவ்வாறு, கட்டிடங்கள் சமாதிகள் பட்டயங்கள் சிலாசாசனங்கள், பிறநாட்டு யாத்திரிகர்கள் எழுதிய குறிப்புகள், பழைய நூல்கள் இவற்றால் நமது நாட்டு வரலாறு கிடைக்கிறது.

## ரு. பண்டுலகும் பாரதமும்

முற்காலத்தில் நமது நாடு இமைய மலையைப் போன்ற கம்பீரத்துடன் நாகரிக வுலகை ஆண்டு

நிலவியது. முப்புறங்களிலும் கடல் முரசார்க்க, வட புறம் இமயக் கோட்டை சூழத் தனிச் சிறப்புற்ற நமது நாடு, தன் இயற்கை எல்லைக்குள் தனது ஒப் பற்ற நாகரிகத்தை வளர்த்தது. நீர் நில வளமும், ஒழுக்கமும், தொழில் மேன்மையும், வாணிகச்சீரும், கல்விப் பெருக்குங் கொண்டு நம் நாடு பழைய உலகின் அரசியாக விளங்கியது. முப்பது நூற்றாண் டுகள் சுதந்தரமாகச் செல்வம் பொலிந்தது நம் நாடு. பார சீகர், செமிடிக் ஜாதியார் (Semetic Race), கிரேக்கர், எகிப்தியர், உரோமர், தார்த்தாரியர், சீனர் முதலிய முந்துலகின் ஜாதியார் அனைவரும், நம் நாட் டைப் போற்றி, அதில் உலவி அதன் புண்ணிய நாகரி கத்தைக் கடல்கடந்து கொண்டுசென்றனர். உலகின் கண்களை நம் நாடு காந்தமெனக் கவர்ந்தது. சீனமும் எகிப்தும் கிரேக்கமும் உரோமும் இன்னும் முற் காலத்துலகின் முதன்மையான நாடுகளும், நமது இந்தியாவை நன்குமதித்தன. நம் நாட்டின் ஞான வொளி உலகெங்கும் பரவியது. புத்தர் பிறந்த நாட்டைச் சீனர்கள் அடிக்கடி வந்து வணங்கி, வியந்து புகழ்ந்து, மனித சமூகத்திற்கு நமது புனிதப் பெருமையைக் காட்டியுள்ளனர். சிக்கந்தரும் கிரேக்கரும், நம் நாட்டுக் கலைவளத்தைத் தம் நாட்டிற்குக் கொண்டு சென்றனர். அன்னியர் நமது நாகரீகத்தில் ஒரு சிறி தையே கண்டு பெரிதாக எண்ணி மகிழ்ந்தனர். பாரசீக தரயஸ், சிந்துநதி வரையிலும் படைநடத்தி நமது நாகரீகத்தை ஏற்றான். கிரேக்க இஸ்லாமிய நாகரீகங்களும், மேல்நாட்டு நாகரீகமும் நம் நாட்டிற் பரவிக் கலந்தன. ஆதலின் நம் நாட்டுச் சிறப்பு, உலகிலுள்ள பல நாட்டாரின் குறிப்புகளில் காணப் படுகிறது. மௌரிய இந்தியா மகஸ்தனுடைய குறிப்பு களில் புகழ்பெற்றுத் திகழ்கின்றது. பாஹியன்

ஹியான்சாங் முதலியோர் நமது இந்தியாவை அறக் கடவுளின் கற்பகச் சோலையாக மதித்துத் தமது குறிப்புகளில் துதித்திருக்கின்றனர். கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டு பிடிக்கு மட்டும் நமது பாரத தேசமே கடலரசியாயிருந்தது; உலகெங்கும் கப்பல் வாணிகம் நடத்தியது. மௌரியர் ஆட்சியிலும் பாண்டியர் ஆட்சியிலும் கப்பல் தொழிலும் வாணிகமும் உச்ச நிலை பெற்றன. அசோகன் கடற் கொள்ளையை நிறுத்தினன்; தன் கப்பல்களில் பிக்ஷுக்களை அனுப்பி, உலகிற்கு ஞானவொளி பரப்பினன். அவன் மகன் மஹேந்திரவர்மன் இலங்கைக்குக் கப்பலிற் சென்று தர்மப் பிரசாரம் செய்தான். கி. மு. 200—கி. பி. 200ல் இந்தியாவுக்கும் சீனத்திற்கும் இடையே உள்ள தீவுகளெல்லாம் நமது ஆட்சியிலிருந்தன. இந்தியக் கப்பல்கள் ஐரோப்பாவுக்கும் சென்றன. சதவாகனரும் தமிழ் வேந்தரும் பெரிய பெரிய கப்பல் விட்டனர். சதவாகனர் நாணயங்களில் கப்பல் போட்டனர். குப்த மன்னர் காலத்தில் (கி. பி 240—250) கிழக்கே போர்னியோ, மேற்கே உரோம் வரையில், நமது கப்பல் வாணிகம் ஆட்சி பெற்றிருந்தது. ஃபாஹியன் '**நந்தி**" என்னும் நமது கப்பலிலேயே சீனத்திற்குத் திரும்பினன். கி. மு. 800 முதல் கி. பி. 1200 வரையில், இரண்டாயிரம் ஆண்டுகள் நமது நாடு உலகக் கடல்களை ஆண்டது.

11–15–ஆம் நூற்றுண்டில், **அல்புரோனி** போன்ற இஸ்லாமியக் கவிகள், இந்தியாவைப் பாடியுள்ளனர். வேனிஸைச் சேர்ந்த **மார்க்க போலன்,** நந்தமிழ் நாட்டை ஆழ்ந்து கவனித்திருக்கிறான். 16–18–ஆம் நூற்றுண்டில், முகல் அரசாட்சியையும் அக்பரின் ஆட்சித் திறனையும், **அயின் அக்பாரி, அக்பர் நாமா** என்ற இரு நூல்

களிலும் காண்கிறோம். மேற்கண்ட குறிப்புகளெல்லாம் நம் நாட்டின் கப்பல் தொழிலைப்பற்றித் தெளிவாகச் சொல்லுகின்றன.

கி. பி. 200 முதலே, திராவிடர் வாணிகத்தில் மிகவும் மேன்மை யடைந்திருந்தனர்; மேல ஆசியா, கிரேக்கம், ரோம், எதிப்து, சீனம் முதலிய நாட்டினர், திராவிடக் கப்பல்களை எதிர்பார்க்கும்படி வியாபார வுலகில் அத்துணைக் கீர்த்தி பெற்றனர்! இந்திய யானைகள், சிரியா மன்னர் செய்யும் போர்களில் விளங்கின. முற்காலத்தில் இந்தியாவிற்கும் எகிப்திற்கும் நடந்த வியாபாரத்தைக் குறித்துத் **தோலமி** (Ptolemy) என்பவர் எழுதி வைத்துள்ளார்.

**பர்மா**வும், **பெகு**வும் திராவிடரால் வெல்லப் பட்டன. பெகுவினருக்கு "தாலாங்" என்ற பேர் வழங்கப்பட்டது. தமிழர் **பக்கோ**வை வென்றதற்கு அடையாளமாக இன்றும் அங்கொரு வெற்றித் தூண் உள்ளது. (பக்கோ=கேதாரம்).

வங்காளத்திலிருந்த பௌத்தர், சீனம் கொரியா ஜப்பான் முதலியவிடங்களிற் குடியேறினர். கி. பி. 500-ல், **விஜயன்** என்ற வங்காள மன்னன் 700 பேர்களுடன் இலங்கையிற் குடியேறி, அதற்குச் **சிங்களத் தீவ**ெனப் பெயரிட்டான்.

சீனர் இந்தியரை மிக்க வணக்கமுடன் நன்கு மதித்தனர். கி. பி. 548-ல் '**உ**' என்ற சீன மன்னன், உஜ்ஜினியிலிருந்த பாரமதி என்ற ஓர் அந்தணனை அழைத்துப் போற்றினன். கி. பி. 433-ல் சந்நியாசிகளும் பிக்ஷுக்களும் அடங்கிய "**நந்தி**" என்னும் ஒரு பெரிய கப்பல் காண்டனுக்கும் (Canton) சென்றது. கி. பி, 526-ஆம் ஆண்டில், **போதி தாமன்**

என்ற துறவி, புத்தமதப் பிரசாரத்திற்காகச் சீனத்தரசனால் நான்கிங்கிற்கு (Nanking) அழைக்கப்பட்டான். **போதிதாமன்** என்ற **தென்னிந்திய பிக்ஷு** சீனருக்குப் புத்தமதோபதேசம் செய்துவிட்டு, ஜப்பானுக்கு வந்து, ஷோதோகு (Sho-to-ku) என்ற அரசனால் வணங்கப்பெற்றானம்.

**லோயாங்** என்ற மாகாணத்தில் 3,000 ம் இந்து சந்நியாசிகளும் 10,000–ம் இந்தியக் குடும்பங்களும் இருந்தனவாம். கி. பி. 730–ஆம் ஆண்டு தொகுக்கப் பட்ட **திரிபிடகம்** என்ற பௌத்த நூலில், இந்தியாவிற்கும் சீனத்திற்கும் இருந்த சமய வுறவுகள் நன்கு விளக்கப்பட்டுள்ளன.

7-ம் நூற்றாண்டில் சாளுக்கியரும், சோழரும் ஜப்பானியரோடு வியாபாரம் செய்தனர். **ஈத்செங்** என்ற சீன யாத்திரி, தாமரலப்தி யென்னும் துறை முகத்தில் வந்திறங்கி, நாட்டைச் சுற்றிப் பார்த்துப் பலகுறிப்புகள் எழுதியுள்ளான். (கி. பி. 673). கி. பி. 720-ல் **வஜ்ரபோதி** என்ற பிக்ஷு சீனத்திற்குச் சென்று சீனருக்குப் புத்தமத தந்திரங்களைக் கற்பித்தான்.

கி. பி. 736-ல் **போதிசேனன்** என்ற பௌத்த சந்நியாசி, ஜப்பான் தேசத்துக் குருமாருக்கு **ஆரியம்** கற்றுக் கொடுத்தான். இந்தியாவை, ஜப்பானியர் "**தென் ஜீகு**" (Ten Jiku) என்று அக்காலத்தில் அழைத்தனர். முதன் முதல் இரண்டு இந்தியர்களே ஜப்பானுக்குப் பருத்தியைக் கொண்டு சென்றனர்.

அருண்மொழித் தேவன் என்ற இயற்பெயருடைய **ராஜ ராஜ சோழன்** (கி. பி. 985—1012), தென்னாட்டில் முதன்மை பெற்ற முடியரசனாக விளங்கினான் ;

அவன் சேரனைக் கப்பற் சண்டையில் தோற்கடித்தான்; இலங்கையைத் தன் இணையற்ற கடற்படை கொண்டு வென்றான்; சென்னை இராஜதானி மைசூர், கலிங்கம், ஈழ நாடு (இலங்கை) முதலியவற்றின் முடிமன்னனாக விளங்கினான். அவன் காலத்தில் தமிழ்நாடு கப்பல் வாணிகத்தில் முதன்மை பெற்றது. ஒரிஸா, குஜராத்து, பீஹார், வங்காளம் முதலியவிடங்களில், அவன் புகழ் விளங்கியது. ஈழும் லட்சத் தீவுகள், மேலத் தீவுகள், அந்தமான் நிக்கவாரத் தீவுகள் (Nicobors), பெகு முதலியவற்றை அவன் கடற்போரில் வென்றான்.

இராஜேந்திர சோழன் (கி. பி. 1012—1032) இந்தியாவின் பெரும் பகுதியை ஆண்டான். சீயம், மலாயா, சாவகம், பர்மா முதலிய நாடுகளில், தமிழ்க் கொடி நாட்டினான். இவன் சிறந்த சிவபக்தன். தனது அரசு முழுதும் தேவார திருவாசகங்கள் முழங்கச் செய்தான். இவன் காலத் தமிழகம் கடலரசியா யிருந்தது.

நமது தமிழ்நாடு பண்டுதொட்டே வியாபாரவுலகிற்கு நாயகமாய் விளங்கியது; தமிழ் மொழிகள் பல பிறநாட்டு மொழிகளுடன் கலந்தொலிக்கின்றன.

நமது தமிழ் நூல்களில், யவனத்தினின்று கொண்டு வரப்பட்ட கள்ளைப் போற்றியிருக்கிறது. தொண்டி, முசிரி, நாகை, காரைக்கால் முதலியவிடங்கள் சிறந்த வியாபார ஸ்தலங்களாகச் சொல்லப்பட்டுள்ளன. சேலம் ஜில்லாவிலுள்ள **வாணியம்பாடி**யில் விலையுயர்ந்த இரத்தினங்கள் அகப்பட்டனவாம். தமிழ்நாடு முத்துக்குப் பேர்போனது. மிளகும், முத்தும், இரத்தினமும், வைடூரியமும் தமிழ் நாட்டினின்றே ஏற்றுமதியாயின. **அலாரிக்** என்பவன்

உரோம் நாட்டைப்படையெடுத்தபோது, அவனுக்கு 3000-ம் பவுண்டு மிளகு கொடுத்துச் சமாதானம் பெற்றனராம். யவனரும் மிலேச்சரும் நமது தமிழரசருக்குச் சேவகம்செய்தனர். **நெடுஞ்செழியன்** காலத்தில், உரோம் வீரர்கள் தமிழ் மன்னரின் வாயிற்காப்பாளராக இருந்தனர். பண்டை நூல்களில், கிரேக்கரும் உரோமரும் **யவனர்** எனப்பெற்றனர். கி. பி. நான்காம் நூற்றூண்டு வரையில், யவனர் வாணிகத்தால் தமிழகம் குபேர நாடானது. அலெக்சாந்தரின் பூகோள ஆசிரியரான **தோலமி (Ptolemy)** எழுதிய **உலக நூலும்**, ப்ளீனி **(Pliny)** யின் **இயற்கை வரலாறும் (Nature-History)**, பெரிப்ளஸ் **(Peripuls)** எழுதிய **பிரயாண நூலும்**, பாண்டியரும் சோழரும் செய்த வாணிகப் பெருக்கத்தைப் பரக்கப் பேசுகின்றன.

சிலம்புச் செல்வத்தில் **புகார்** நகரின் வாணிகச் சிறப்பை விரிவாகக் காண்க. நீலகிரியில் சோதிக்கப் பட்ட சில புதையல்களில், உரோமரின் மண்பாண்டங்கள் காணப்படுகின்றன. "இந்தியாவே இரத்தினத் தாய்" என்று **பிளினி** சொல்லுகிறுன்.

தூர தேசங்களினின்று இறக்குமதி செய்யப் பட்ட குதிரைகளை நம் தமிழ் நூல்கள் புகழ்கின்றன. மாணிக்கவாசகர் தொண்டித் துறைமுகத்தில் இறக்குமதியாகும் குதிரைகளை வாங்கவந்த வரலாற்றை நேயர்கள் அறிவார்கள். சோழர் கப்பல், கங்கை, ஐராவதி நதிகளிலும், மலையாளத் தீவுகளிலும் உலவின. நாகபட்டினத்தினின்று சாவகத் தீவிற்கு **(Java)** நமது கப்பல்கள் தினந்தோறும் போய்க்கொண்டிருந்தன. இலங்கைக்கும் இந்தியாவிற்கும் நடுவிலுள்ள மணிபல்லவத் தீவைக் குறித்து **மணிமேகலை** வர்ணிக்கிறது.

அக்காலத்தில், **கலிங்கம்** எவ்வகையிலும் சீர் பெற்று விளங்கிற்று. அது வியாபாரத்திற் சிறந்து விளங்கியதல்லாமல், குடியேற்றத்திலும் ஏற்ற முற்றது. சாவகத் தீவில் கலிங்கர் குடியேறினதற்குப் பல சான்றுகளுள்ளன. சாவகத் தீவினர் மொழியில் பல தமிழ்ப் பெயர்கள் கலந்தொலிக்கின்றன. வடமொழியையும் சாவகர் வணக்கமுடன் மதித்தனர். சாவகத் தீவினின்று பல இந்தியக் கப்பல்கள் சீனஞ் சென்றன. பெகு, கம்போதியா, சாவகம் முதலிய விடங்களில், இந்திய பௌத்தர் குடியேறினர். "மசூலிப்பட்டணத்தினின்று வங்காளம், அரக்காணம், பெகு, சையாம், சுமத்தரா, கொச்சின் சீனம் முதலிய விடங்களுக்கும், மேற்கே மடகாஸ்கர், ஆர்மஜ் முதலிய விடங்களுக்கும் கப்பல்கள் சென்றன" என்று **தாவெர்னிகர்** என்னும் அறிஞர் சொல்லுகிருர். சாவகத் தீவில் வழங்கும் உள்நாட்டுக் கதைகளிலும் இந்தியர் குடியேறியதைப் பற்றிக் கூறப்படுகிறது.

அனபாய குலோத்துங்கன் சீனத்திற்குத் தனது தூதரை அனுப்பினன். **ராஜராஜன், அனபாய குலோத்துங்கன்** இருவரும் "**ஷீ லீ லோ லோ சூ, லோ டி அன் காலோ**" என்ற பெயருடன் சீன நூல்களில் விளங்குகின்றனராம். நம் நாட்டிலேதான் முதன் முதல் சாயத்தொழில் உண்டானது. இங்கு வாட்களுக்கான உருக்குகளும் வெளிநாடுகள் வியந்து வாங்கும்படி மிகுதியாகச் செய்யப்பட்டன. தமிழகம் இரும்புத் தொழிலிற் சிறந்திருந்தது.

முன் சொன்னவற்றையெல்லாம் ஆராயுமிடத்தில், நமது நாடு செல்வச் சிறப்புற்று, உலகின் துறைமுகங்களையெல்லாம் ஆண்ட பெருமை புலப்படும்.

நம் நாட்டின் முன் வளமையையும், பின் வறுமையையும் எண்ணினால் மனம் திடுக்கிடுகிறது!

இஸ்லாமிய இந்தியாவும் கப்பல் தொழிலில் முதன்மை பெற்றிருந்ததற்குப் பல சான்றுகள் இருக்கின்றன. ஒன்பதாவது நூற்றாண்டிற்கு முன்னரே அரபியருக்கும் இந்தியருக்கும் வியாபாரப் போக்குவரத்து ஊக்கமுடன் நடந்தது. பாக்தாத்திலுள்ள காலிபா, அலெக்சாந்திரியாவை வியாபாரத்தின் முக்கியத் துறைமுகமாக வைத்துக்கொண்டார். ஏலம், கிராம்பு, சந்தனம் முதலிய வாசனைச் சரக்குகள் தமிழகத்தினின்று மிகுதியாக ஏற்றுமதியானதென்று பல இஸ்லாமியப் பிரயாணிகள் சொல்லியிருக்கின்றனர். ஸிந்து தேசத்தை வென்ற **இபின் காசிம்,** இந்தியப் படகுகளிலேயே ஸிந்து நதியைக் கடந்தான். பதினோராம் நூற்றாண்டில் விளங்கிய **'அல்புரோனி'** என்பவர், மலையாளக் கரையில் நடந்த ஏராளமான கப்பல் வாணிபத்தைப்பற்றி எழுதுகிறார். மடகாஸ்கரில் **(Madagascar)** குப்த மன்னர், வெள்ளை ஹூணர் முதலியவர்களின் காசுகள் கிடைக்கின்றன. சாவகத் தீவிலுள்ள வியாபாரிகளுக்கு மடகாஸ்கரில் பேசும் பாஷை தெரிந்திருந்தது.

கி. பி. 1273—1381 ஆம் ஆண்டுகளில், இந்தியாவிற்குப் பல பிரயாணிகள் வந்து, நமது கப்பல் தொழிலின் மேன்மையைக் குறிப்பிட்டிருக்கின்றனர். தெமாஸ்கஸைச் சேர்ந்த **அப்துல்ஃபேதா (Abdul Feda), மார்க்கபோலன்** முதலியோர் அவர்களுள் முதன்மையானவர்கள். மார்க்கபோலன் நமது இந்தியத் தொழிற் சிறப்பை வியந்து எழுதியுள்ளான்: அரபிக்கடற்கரையிலுள்ள **காயற்பட்டினம்** என்னும் துறைமுகத்தில், மேற்கிலிருந்து வரும் கப்பல்

களெல்லாம் சேர்ந்தன. அவற்றில் குதிரைகள் இறக்குமதியாயின. அரபியா, பாரசீகம் முதலிய நாடுகளினின்று ஆண்டுதோறும் 10,000-ம் குதிரைகள் இறக்குமதியாயின. கொல்லத்தினின்று, பாரசீக அரேபிய வியாபாரிகள், இஞ்சி மிளகு நீலம் முதலியவற்றை வாங்க வந்தனர்.

இந்தியக் கப்பல்கள் மலையாளத்தினின்று ஃஜான்ஜிபாருக்கு (Zanzibar) 20-நாட்களில் சென்று, மூன்று மாதங்களில் திரும்பின.

முகம்மது துக்ளக் சீனத்திற்குத் தனது தூதரை அனுப்பினார். 15-ஆம் நூற்றாண்டில் வசித்த அப்துல் ராஃஜக் (Abdul Razzac) என்பவர் கள்ளிக்கோட்டையை "உலகிற் சிறந்த துறைமுகங்களுள் ஒன்றெனக் கூறுகிறார். சாவகம் மலாக்கா சுமத்ரா முதலிய கீழிந்தியத்தீவுகள், இந்தியர்கள்வசமிருந்தன வென அல்புகார்க் என்றபோர்த்துகீசியன் சொல்லுகிறான். குஜராத்தின் கப்பல்தலைவன் போர்த்துகீசியரைக் கப்பற்சண்டையில் தோற்கடித்தான் (கி. பி. 1521-ல்) இப்படியே, முகமதியர் காலத்தில் கப்பல் தொழில் செழித்திருந்ததற்குப் பலசான்றுகள் காண்கின்றன.

அக்பருக்கு முன்னே சிறப்பாகக் கப்பல் முயற்சிகளொன்றும் முகல் இந்தியாவில் இருந்ததில்லை. 1528-ம் ஆண்டு கங்கை நதியில் கன்னோசியினருகே, பாபர் ஒரு கப்பற்சண்டை செய்ததாகமட்டும் தெரிகிறது. அக்பர் காலத்திலேதான் இந்தியக் கப்பல் தொழில்கள் ஓங்கியிருந்தன. கப்பல் தலைவன் நக்கோடா, முதன்மையான மாலுமி தண்டெயில், கப்பல் சாத்திரி மாலிம் எனப் பெயர் பெற்றப் பல கப்பல் நிபுணர் இங்கே விளங்கினர். இவ்வாறு, நமது நாட்டினர் யந்திர

நாகரிகம் வருமுன்னர், எவ்வளவு வாணிப முன்னேற்றம் பெற்றிருந்தனர்! அவர்கள் இரத்தம் நமது நரம்புகளில் ஓடுகிறது. இக்காலத்தில் முன்னினும் தொழில் வாணிபச் சாதனங்கள் ஆயிரம் மடங்கு விசாலமடைந்துள்ளன. இனியும் நம்மவர் உறங்கலாமோ? "திரைகடலோடித் திரவியந்தேடுக" தமிழ் வணிகர்!

## ௩. பழந் தமிழர்

நமது தமிழகம் மிகவும் சிறப்புவாய்ந்த ஒரு பழம் பெரும் நாடு. குமரிமுனைக்கப்பாலும் அது நீண்டு பரந்து கிடந்ததாகச் சரித்திர ஆராய்ச்சியாளர் இப்பொழுது கண்டு பிடித்திருக்கின்றனர். குமரிக் கண்டம் என்று அது சொல்லப்படுகிறது.

"பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள" **(சிலப்பதிகாரம்)**

இதனால், மேற்சொன்ன பழந் தமிழகமாகிய குமரிக் கண்டம் இருந்ததென்பதும், அது கடல் கொள்ளப்பட்டது என்பதுந் தெரிகின்றன. **அடியார்க்கு நல்லார்** உரைப்படி, பன்மலைநாடு பஃறுளி யாற்றைத் தெற்கே கொண்டது. ஏழுதெங்கு நாடு, ஏழுமதுரை நாடு, ஏழுமுன்பாலை நாடு, ஏழுபின்பாலை நாடு, ஏழு குன்ற நாடு, ஏழுகுணகாரை நாடு, ஏழுகுறும்பனை நாடு ஆகிய நாற்பத்தொன்பது நாடுகளுடன், குமரிக் கொல்லம் முதலிய பன்மலை நாடு காடு நதி பதி, நீர்க் குமரி எல்லாம் கடலுக்கு இரையாயின. அதைப் பற்றி இப்போது கவலைப்பட்டுப் பயனில்லை; இனிப் பஃறுளியாறு ஒரு துளியும் நம் வயல்களிற் பாயாது. காலவெள்ளத்தின் போக்கைக் கண்டறிவார் யார்? நம் முன்னேயுள்ள தமிழ்நாட்டைச் செல்வச்சித்திர மாளிகை யாக்குவோம்.

முன் சொன்னதினின்று, 'தமிழர் தமிழ் நாட்டுக்கே யுரியவர்; வேறு எங்கிருந்தும் வந்து குடியேறினவர் அல்ல' வென்று தெரிந்துகொள்வோம். 'ஆதி மனிதர் உண்டானதே திராவிட நாடு என்று புலவர் ஆராய்கின்றனர்.

தமிழர் இன்ன மக்கள் வகையைச் சேர்ந்தவரென்று கண்டுபிடிக்கப் பலர் பலவிதமாக ஆராய்கின்றனர். அவ்வாராய்ச்சிகளை நாமும் இங்கே ஆராய்வாம்:

தமிழர், எகிப்து ஜாதியைச் சேர்ந்தவரென்று ஐரோப்பியர் சிலர் முடிவுகட்டுகின்றனர்; ஏனெனில், இரண்டு ஜாதியாரிடையேயும் சில ஒற்றுமைகள் உள்ளனவாம். எகிப்து ஜாதியாரில் சிலர், பலூசிஸ்தானம் வழியாக இந்தியாவில் நுழைந்து, தென்னிந்தியாவில் வசித்த திராவிடர்களுடன் கலந்து ஒன்றுனர் என்று சிலர் கூறுகின்றனர்.

இமயமலைக் கப்பாலிருந்து வந்த மங்கோலிய வகுப்பினரே திராவிடர் என்பது ஒருவர் ஆராய்ச்சி. நடு ஆசியாவிலிருந்து திபேத்து வழியாக வந்தனராம் திராவிடர். அவர்களுக்கு முன் தென்னாட்டில் வில்லவரும் மீனவரும் இருந்தனராம். நடு ஆசியாவிலிருந்து வந்த நாகர் இவர்களை வென்று குடியேறினராம். இந்த நாகர்களே ஆரியருக்கு நாகர எழுத்தைக் கற்றுக் கொடுத்தனராம்.

திபேத்தினின்று தாம்ரலித்தர் (Tamralittis) என்ற மற்றொருவகை மங்கோலியர் வந்து இந்த நாகரை வென்றனராம். இந்தத் தாம்பரலித்தரே தமிழராம். அவர்கள் நான்கு பிரிவாக வந்தனராம்: அவர்களில்,

மாறர் பாண்டிநாட்டையும், திரையர் சோழநாட்டையும், வங்காளத்திலிருந்து வந்த வானவர் சேர நாட்டையும், கோசர் கொங்கு நாட்டையும் நிலைநாட்டி ஆண்டனராம். தமிழுக்குச் சிறப்பைத் தரும் 'ழ' திபேத்தியர் வழங்கியதாம். ஆனால், நாகநாடு என்பது தமிழகத்திற்குத் தென் கிழக்கே யிருந்த தீவின் (இலங்கை) பெயர். இங்கிருந்தவர் வேடர், குலத்தவர். 'நீலன், நாகன்' என்னும் பெயர்கள் வேடர், கள்ளர், மரபினரிடையே வழங்கிவந்தன. திருமங்கையாழ்வாரின் முதற் பெயர் நீலன், கண்ணப்பர் தந்தை நாகன். இவர்கள் மூவேந்தர்களின் படைவீரர்களாயிருந்தனர். இவர்கள், தேவநாகரி தெரிந்திருக்கக் காரணமில்லை. நகர மக்கள் வழங்கியதால் அம்மொழி தேவநாகரி எனப் பட்டது என்பர். அரபியா, பாரஸீகம், கார்த்துகம், யவனம் முதலிய நாடுகளுடன் கப்பல் வாணிபம் செய்து இசைபெற்றதால் பாண்டியனுக்கு மாறன் (மாரா வென்பது ஹீப்ருவில், கொள்வினை, விற்பனை என்று பெயர் வந்ததென்பர்.

மற்றும் சிலர் திராவிடரைத் துரானியர் மரபென்பர்; துரானிய நாடுகளில் வழங்கும் மொழிகளில் தமிழ்மொழிக் கலப்புள்ளதென்று கால்டுவெல் (caldwell) ஆராய்ந்து கூறுகிறார்: அக்காள் (இக்கன்), அப்பா (இபா), அம்மா (அம்மா), ஆத்தாள் (ஆத்தா), ஆம் (ஆம்), கட்டு (கோட்டு), கேள் (குலென்), கோ (கோ-அரசன்), தீ (தீ), தோல் (தொளல்), ஞாயிறு (ஞார்), பிடி (பிடன்), மனை (மன்), மரம் (மொர்), வெளிச்சம் (வெல்க்) முதலிய மொழிகள் துரானிய மொழிகளில் தமிழ்க்கலப் புள்ளதைக் காட்டுகின்றன.

ஆரியர் திராவிடர் இருவரும் நடு—ஆசியாவிலிருந்தனர்; திராவிடர், முன்னே இந்தியாவிற்கு வந்து குடியேறினர்; ஆரியர், பிறகு வந்தனரென்பது மற்ருெரு முடிபு. பலூசிஸ்தானத்தில் வழங்கிய ப்ரஹ்வி (Brahvi) மொழியில், பல தமிழ் ஒலிகள் கலந்திருப்பதால், திராவிடர் அந்நாட்டிற் சிலகாலம் இருந்து வந்தனர் என்பர் சிலர்: கல் (கஹ்ல்) கண் (கஹ்ண்), தேள் (தேல்ஹ்), தூங்கு (தூக்ஹ்), கள் (கதல்), இரண்டு (இரட்)—முதலிய மொழிகள் ப்ரஹ்வியில் கலந்தொலிக்கின்றன.

திராவிடர், பாபிலோனியர் மரபினர் என்ருெரு சாரார் கொள்வர்: பிணங்களைச் சுடுவது, காக்கை நரியுண்ண வெளியே இடுவது, குழியில் புதைப்பது, சமாதிகட்டி அதில் அடக்கம் செய்வது, முதுமக்கள் தாழியால் கவிழ்ப்பது முதலிய *ஐந்து வகையும் தமிழ்நாட்டில் வழங்கியது போலவே, பாபிலோனிய நாடுகளிலும் வழங்கின. போரில் இறந்த வீரர்களுக்குத் தமிழர் வீரக்கல் நடுவதுண்டு. அதில் போரில் பட்ட வீரர் பெயரும் அவரது ஆற்றலும் எழுதுவர், அக் கல்லுக்கு மயில் இறகு சூட்டி, மாலை போடுவர். அதன்மேல் ஒரு சிறு பந்தலும் போடுவர். அத்தகைய வீரக் கற்களும் முதுமக்கள் தாழியும் இன்று தமிழகத்தில் ஏராளமாகக் காணப்படுகின்றன. யவனர், அஸ்ஸிரியர் பாபிலோனியர் போன்றே தமிழர் அஞ்சாநெஞ்சுரம்படைத்த போர் வீரர்: அவர் பகைவர் குடலை மாலையாகப் போட்டு வேல்தரித்த கையுடன் ஆடுவர். ஊரைக் கொளுத்துவர், சூறையாடுவர். கிரேக், ரோம், பாபிலோன், கார்த்துகம்

---

* " சுடுவோர்; இடுவோர், தொடு குழிப்படுப்போர், தாழ்வயின் அடைப்போர், தாழியிற் கவிழ்ப்போர்" (மணிமேகலை)

முதலிய நாடுகளெல்லாம், அக்காலத்தில், இப்படித் தான் கொடிய போர்க்களமாயிருந்தன. இன்னும் புதைகுழிப் பானைகள், கற்களிற் செதுக்கப்பட்ட சித்திர எழுத்துக்கள், அணிமணிகள், நாணயங்கள், பாத்திரங்கள், சடங்குகள் முதலியவற்றின் குறிப்பு களால் திராவிடருக்கும் பாபிலோன் ஸுமேரியருக் கும் (Sumerians) கலப்பு இருந்ததெனவே யூகிக்கின் றனர். ஸுமேரியர், பாரசீகத்தின் வழியாகவும், கடல் வழியாகவும் வாணிகங்கொண்டு சென்று யூஃப்ரடிஸ் டைக்ரிஸ் ஆற்றோரம் குடியேறிய திரா விடர் என்றே ஆராய்கின்றனர். தமிழகம், சிந்து சம வெளியிலிருந்த திராவிடர் நாகரிகமே அவரிடை காணப்படுகின்றது. இரும்புக்கணை வாள் சூலம் ஈட்டி முதலிய போர்க் கருவிகளும் புதைக் குழிகளிற் காணப்படுகின்றன; பித்தளைக் காப்புகளும் தண்டை சிலம்புகளும் அதிற் கிடைக்கின்றன; இம்மாதிரியே, செங்கற்பட்டு கோயமுத்தூர் மதுரை திருநெல்வேலி (ஆதிச்சநல்லூர்) ஜில்லாக்களில் காணப்படுகின்றன; இம்மாதிரியே பஞ்சாப் சிந்துப் பிரதேசங்களிலும் கிடைக்கின்றன. அதுபோலவே ஸைப்ரஸ் (cyprus), க்ரேட் (Crete) அனதோலியா (Anatolia) பாபிலோ னியா முதலிய நடுக்கடல் பிரதேசங்களில் (Mediterranean regions) காணப்படுகின்றமையால், "திரா விடர் அங்கிருந்துதான் வந்திருக்கிறார்கள்" என்று சிலர் முடிவு கட்டுகின்றனர். திருநெல்வேலிக்கடுத்த ஆதிச்சநல்லூரிற் காணும் பண்டைப் புதைகுழிச் சரக்குகள், நடுக்கடலில் உள்ள கிரேட் (Crete), ஸைப்ரஸ் (Cyprus) தீவுகளில் காண்பன போலவே யுள்ளன!

இவ்வாறு, ஆராய்ச்சியாளர் பலவிதமாகச் சொல்லுகின்றனர். ஆனால், இந்த அனுமானங் களுக்கு மேற்பட்ட உண்மை யொன்றுள்ளது;

தமிழர் உலகின் தொல் பெரு மக்கள்; தமிழர் நாகரிகம் ஒரு காலத்தில் பரதகண்டம் முழுவதும் பரவியிருந்தது; திபேத்து, பர்மா, பெலூசிஸ்தானம், மலயா, கார்த்துகம், யூதியா, நடுக்கடல் நாடுகள் இவற்றிலெல்லாம் தமிழர் நாகரிகம் பரவியிருந்ததற்குப் புறச்சான்றுகள் உள்ளன. தமிழர் கப்பல் செல்லாத் துறை கிடையாது. தமிழர் வாணிபம் மேற்கிலும் கிழக்கிலும் தழைத்தோங்கியதற்கு ஏராளமான அகச்சான்றுகளும் புறச்சான்றுகளும் உள்ளன. இவ்வாறு, பல நாடுகளுக்குச் சென்ற தமிழர் வாயிலாக அந்தந்த நாடுகளில் தமிழர் பேச்சு நடையுடை பாவனைகள் பரவியிருத்தல் வேண்டும். அதன் அறிகுறிகளே நாம் மேலே காட்டிய புலவர் ஆராய்ச்சிகள். ஆதலால், 'தமிழர் இங்கிருந்து வந்தார், அங்கிருந்து வந்தார்' என்பதை மறப்போம்: தமிழர் தமது நாட்டிற்கே யுரியவர்; அவர் எங்கும் சென்று தமது நாகரிகத்தைப் பரப்பினர் என்பதே பொருந்தும். கைத்தொழில், கப்பல் வாணிகம் ஆகியவற்றால் தமிழர் பெயர் உலகெங்கும் தெரிந்தது. இங்கே பல **ஏலேல சிங்கர்கள்** இருந்தனர். அரபியர், எகிப்தியர், யவனர் முதலியோருடன் பாண்டிய நாடு வியாபாரம் செய்தது.

"யவனர் தந்த வினைமா ணன்கலம்
பொன்னொடு வந்து கறியொடு பெயரும்"

—சிலப்பதிகாரம்

யவனர் (**Ionians**), பெரிய கப்பல்களில் தங்கம் கொண்டு வந்து, மிளகை வாங்கிச் செல்வார்கள். தங்கம் மதுவகை, விளக்குகள், பாவைகள் முதலியன ஏற்றிய கப்பல்கள், மேனாடுகளிலிருந்து தமிழ்த் துறை முகங்களுக்கு வரும்; தமிழ் நாட்டினின்று முத்து, மயிலிறகு, மிளகு, ஏலம், அகில் முதலியவற்றை

வாங்கிச் செல்லும். "யவனர் இயற்றிய வினைமாண் பாவை கையேந்தும் அகல்" நிறைய நெய் சொரிந்து விளக்கேற்றுவராம் தமிழர்! "யவனர் நன்கலம் தந்த தண் தமிழ் தேறல்" என்று **புறநானூறு** கூறுவதினின்று, மேனாட்டிலிருந்து நம் நாட்டிற்குத் திராட்சா பானம் வந்ததெனத் தெரிகிறது. தமிழருக்கும் உரோமருக்கும் நட்புறவு மிகுந்தது. பாண்டிய மன்னன் அகுஸ்தஸீஸருக்கு (கி. மு. 30-ல்) தூதனுப்பினன். காவிரிப்பூம் பட்டினத்தில் உரோமரும், கிரேக்கரும் குடியேறித் தமிழ் அரசருக்குப் படைவீரராகவும், வாயிற்காப்பாளராகவும் ஊழியஞ் செய்தனர். தமிழ் நாட்டில் உரோம நாணயங்கள் கிடைக்கின்றன. வடமலை (இமய மலை) பிறந்த மணியும் பொன்னும், குடமலைப் பிறந்த சந்தனமும், அகிலும், தென்கடல் முத்தும், குணகடல் பவளமும், கங்கை காவேரி தீரங்களின் விளைவும், ஈழநாட்டு உணவுகளும், பர்மாவில் உண்டாகும் வாசனைச் சாமான்களும் தமிழர் வாணிகச் சரக்குகளாம். மேற்கும் கிழக்கும் ஒரு காலத்தில் தமிழர் கப்பலை எதிர்நோக்கி வாழ்ந்தன. அத்தகைய தமிழ் மரபினர், இன்று உலக சமுதாயங்களின் முன் தாழ்ந்த நிலையில் இருப்பானேன்?

தமிழா உணர், உணர்; தலை நிமிர், சிம்மம் போல நட! உனது பழம் பெருமையை நினை; ஆனால், பழம்பெருமையில் சொக்கி மயங்கிக் கும்பகரண யோகம் பண்ணாதே! '**நான் தமிழன்; முற்காலம் என் தமிழர் உலக நாகரிகத்தின் முன்னணி வகித்தனர்; இன்று என் மரபும் மொழியும் தாழ்த்தப்பட்டுள்ளன**' என்பதை யுன்னி, முதுகில் சவுக்கடி கொடுத்தது போல உணர்ந்து துள்ளி யெழுந்து '**தமிழ்க்கொடியை வானளாவ உயர்த்துவேன்**'

என்னும் வீறுகொண்டு முன்வந்து பணிசெய், பணிசெய், பணிசெய்! அறிவே உயிர், அன்பே உள்ளம், தொழிலே உடலாகக்கொண்டு தமிழர் முன்னேறுக,

## ௪. முகிஞ்சதரை

சுமார் 5000-ம் ஆண்டுகளுக்கு முன்பே, நமது நாடெல்லாம் தமிழர் நாகரிகமே பரவியிருந்தது. அதற்கு இப்போது நல்ல அத்தாட்சி கிடைத்துவிட்டது.

முகிஞ்சதரை ஹரப்பா என்ற சிந்து நதிக்கரை ஊர்களில் ஆராய்ச்சியாளர் அகழ்ந்து பார்த்தனர். 4000-ம் ஆண்டுகளுக்கு முன்பு நமது நாட்டிற் புகுந்த ஆரியரே நாகரிகத்திற்கு விதை போட்டதாகப் பலர் கருதினர். அது பொய்த்து விட்டது. ஆரியர் வருவதற்கு நீண்ட காலத்திற்கு முன்பே அவர்களுக்கு அப்பனுகை ஒரு நாகரிகம் பரவியிருந்தது: அதுவே தமிழர் நாகரிகம்! உலகம் இரும்பையும் செம்பையும் உபயோகிக்கக் கற்குமுன்பே, அந்த நாகரிகம் நிறைவுடன் பொலிந்தது! அக்காலத் தமிழர் நாகரிகத்தை உள்ளங்கை நெல்லிக்கனி போல விளங்கும் ஓர் ஊரையே ஆராய்ச்சியாளர் கண்டுபிடித்திருக்கிறார்கள்; அது மண்ணுக்கடியில் ஆழப் புதைந்து கிடந்தது—(இப்போது சிறந்து விளங்கும் நாகரிக நகர்களும் பல நூற்றாண்டுகளுக்குப் பின் அப்படித்தானாகும்). தற்கால எஞ்சினியர்களும் வியக்கும்படி, அந்தப் பழைய நகரம் அமைந்திருந்தது. அதில் சுகாதார முறைப்படி தூம்புகளும், கழிநீர் கால்வாய்களும், தெருக்களும், வீடுவாசல்களும், சாளரங்களும் அமைந்திருந்தன. திண்ணை, வாயில் காவலன் தங்கும் சிற்றறை, கூடம், படுக்கையறை, சமையலறை, குளிப்பறை, கிணறு, மலஜலங்கழிக்க

ஒதுக்கிடங்கள், பின்னல் தோட்டம் இவற்றுடன் வீடுகள் அமைந்திருந்தன. பெரிய அரண்மனைகளும் அலங்கார வேலைப்பாடுகளுடன் விளங்கின. நீர் விளையாட்டிற்கெனப் பெரிய குளங்கள் இருந்தன, ஆண் மக்கள் ஆடை, சட்டை, தலையில் முண்டாசு. காலில் செருப்பு, இடுப்பில் கச்சை இவற்றுடன் விளங்கினர். பெண்கள் பூப்போட்டு அணி செய்த உயர்ந்த புடவை இரவிக்கைகளையும், நகை நட்டுகளை யும் அணிந்திருந்தனர். தங்கம், வெள்ளி, செம்பு, சங்கு, வெண்கலம், தந்தம், வைரம், கெம்பு, முத்து இவற்றால் செய்த மாலை, தோடு, மோதிரம், மூக் குத்தி, வளையல், காப்பு முதலிய பல அணிகள் அணிந் திருந்தனர். பெண்கள் தந்தச் சீப்பினால் தலைவாரிப் பின்னிக் கொண்டையூசி செருகி முடிவர். குழந் தைகளுக்கு விதவித விளையாட்டுச் சாமான்கள் அளித்தனர். அக்காலம் குழந்தைகள் ஊதிய ஊது குழல் இன்றும் நன்றாக ஊதுகிறதாம். அந்நகரில் பல தொழிலாளர் இருந்தனர்—ஆசிரியர், வீரர், உழவர், வணிகர், தட்டார், கன்னார், தச்சர், கொத் தர், சிற்பிகள், நாவிதர், பூசாரிகள்—முதலியோர். பாட்டு, நடனம், சித்திரம், சிற்பம் முதலிய பல கலைகள் அந்நகரில் வளர்ந்தன. நாட்டியச் சிலைகள் பல அகப்பட்டுள்ளன.

சீனர், எகிப்தியர், பாபிலோனியர், சுமேரியர், உரோமர், கிரேக்கர் இவர்களைவிட, இவர்களுக்கு முன்பே, அக்காலத்தவர் நாகரிகத்திற் சிறந்து வாழ்ந் தனர். அக்காலத்தவர் பேசியது **தமிழ்** என உறுதி யாகத் தெரிகிறது. தமிழ் எழுத்துக்களில் கல்வெட்டு களும் கிடைத்துள்ளன. அக்காலத்தவர் சிவனையும் சக்தியையும் வழிபட்டதாகத் தெரிகிறது. சிவலிங் கங்கள் பல கிடைத்துள்ளன. '**சிவு**' என்பது செம்மை

எனப் பொருள்படும். தனித் தமிழ்ச்சொல் என்பர். சிவனுடன் முல்லை நிலக் கடவுளான மாயோனையும் அக்காலத்தவர் வழிபட்டனர்.

## ரு. தொழில் வளம்

**தொழி**லே வாழ்வு; ஒவ்வொ ருயிரும், இயற்கையால் உந்தப்பெற்றுத் தொழில் செய்ய முந்துகிறது. வினை, தொழில், முயற்சி, உத்தியோகம், செயல், வியாபாரம், வேலை என்பன ஒரு பொருட்சொற்கள். தொழிலே உயிரின் அறிகுறி. "பற்றின்றிப் பலன் விழைவின்றி, கடவுளுக்குத் தன்னை அர்ப்பணஞ் செய்து தொழிலாற்றுவோன் உயர்களிப் பெய்துவான்" என்றுகீதை உபதேசிக்கிறது. அன்பும், அருளும் அஞ்சாமையும், பிறர்க்குதவும் எண்ணங்களும் மனத்திற் கொண்டு, உண்மையும் இன்சொலும்மொழிந்து, தன் உடலின் தேவைகளை பாபமற்ற ஒரு தொழிலால் அடைந்து, உயிர்களை ஆண்டவன் உடலெனக் கருதி, அருட்பணிசெய்து வாழும் தூயர், கடவுட்டன்மையடைவர். இவர்களே உலகில் உயர்ந்த தொழிலாளிகள். புத்தர் அப்பர் சங்கரர் ஏசுநாதர் வள்ளலார் காந்தி முதலானோர் உலகில் உயர்பெருந் தொழிலாளர்; இவர்கள் செய்த தூய தொழிலாலேதான் மனித சமூகம் வாழ்கிறது; அறம் நிலைக்கிறது. பிரதாப சிங்கன் குருகோவிந்தன், சிவாஜி, மாஜினி, லெனின் முதலானோர் வீரத்தொழிலாளர். இவர் முயற்சிகளாலேயே தேசங்கள் சுதந்தரமடைந்து உயர்ந்தன. கெல்வின், நியூடன், ஜேம்ஸ் வாட்ஸன், இராமன், எடிஸன் முதலிய இயற்கலை வல்லுநர், தங்கள் அறிவுத் தொழிலால் மனித சமூகத்தின் வசதிகளை அதிகப்படுத்தி, நேரத்தையும் தூரத்தையும் வெல்லத்தக்க

பொறிகளைக் கண்டுபிடித்தனர். கம்பனும், காளிதாசனும், பாரதியும், ஹோமரும், தாகூரும் பனுவற்றொழிலால் மனித சமூகத்திற்கு மனவிரிவைத் தந்தனர். வேளாளரும், காருகரும், கருமான்களும், தச்சரும் தங்கள் கைத்தொழில்களால் மனித வாழ்விற்கு வேண்டிய தேவைகளை யீந்து வருகின்றனர். இவ்வகையாக நோக்கின், உலகம் பலதிறப்பட்ட தொழில்களாலேயே நடக்கிறது. தொழிலையுடையோர் தொழிலாளர். இந்து சமுதாயத்தின் நாற்பிரிவுமே குணகர்ம விபாகம் என்று கீதை கூறுகிறது. தவமும் புலனடக்கமும் தூய்மையும் பொறுமையும் நேர்மையும் அறிவும் தத்துவ ஆரார்ச்சியும் கடவுள் நம்பிக்கையும் **அந்தணர் தொழில்கள்**; தைரியமும் வீரமும் முயற்சியும் போரும் அரசாட்சியும் ஈகையும் **அரசர் தொழில்கள்** ; வேளாண்மை பசுவளர்த்தல், வாணிகம் முதலியன **வைசியத் தொழில்கள்**; பிற தொண்டுகள், தொண்டர் தொழில்; இத்தகைய முறையான தொழிற் பாகுபாடுள்ள இந்து சமூகத்தில் ஒவ்வொருவரும் தொழிலாளரே. தொழிலாற்றுந் திறனே 'சக்தி' எனப்படும். எறும்பு முதல் இறைவன் வரை தொழிலாளிகளே. மனிதன்மட்டுமல்லன்; உயிர் சுமந்த அனைத்தும், ஓருயிரினமான தாவரங்களும், தத்தமக்கு 'வல்லான் வகுத்த' ஒரு வினையைச் செய்துகொண்டே யிருக்கின்றன.

ஒவ்வோர் உயிரும் ஒரு குறித்த வினையைச் செய்யவே உலகிற் பிறந்தது. அனைவரும் இவ்வுலகக் கோயிலின் தொழிலாளிகளே. தத்தமது தொழிலைச் செய்யக் கடவுளால் உயிர்களுக்குக் கொடுக்கப்பட்ட நேரமே 'ஆயுள்' எனப்படுகிறது. தொழிலுக்காகவே நாம் பிழைக்கிறோம்; தொழில் முடிந்ததும் இறக்கிறோம்; எடுத்த தொழிலைக் குறித்த ஆயுளுள் முடிக்

காவிடின், மீண்டும் பிறந்து மீதித் தொழிலைச் செய்கிறோம். நாம் எல்லோரும் இத்தகைய தொழிலாளிகளே! உலகமே தொழிலாளி யுலகம்.

உலகம் முழுதும் தொழிலாளர் ஆட்சி செலுத்தத் தொடங்கியுள்ளனர்: தொழில் + ஆட்சி = தொழிலாட்சி என்பது, 'சமரச ஆட்சி, ஏழைகளுக்கு இரங்கும் ஆட்சி, சுதந்தர ஆட்சி' என்ற எண்ணம் உதித்துள்ளது. இங்கிலாந்தில் 1923-ம் ஆண்டு தொழிலாட்சி வந்தபோது, 'மனிதனுக்குரிய உரிமைகளெல்லாம் ஓங்கும்; கோனாட்சி குறுகும்; சமரசம் பெருகும்; முதலாளிகளின் ஆதிக்கம் போய், உழைப்போர்க்கு நீதி கிடைக்கும்' என ஐரோப்பா முழுதும் ஊக்கமுடன் கூத்தாடத் தொடங்கிற்று! ரஷ்யாவில், தொழிலாளர் புரட்சி, பூமியையே மக்களின் பொதுவுடைமையாக்கிச் சமத்துவத்தை நிலைநிறுத்தியது. 'உழைப்பவனே இனிப் பிழைப்பவன்' என்ற கொள்கையை உலகப் போக்கு விளக்கி வருகிறது. 'எனது எனது' என்ற எண்ணம் வீணாகி, 'உலகம் உலகோரது' என்ற உணர்ச்சி உதித்துள்ளது.

பாருலக மெங்கெங்கும் பாரோர் உரிமையலால்
ஓரோர் உரிமையா மோ?
புவித்தாய் தரும்பலனைப் போதிய மட்டும்
அவரவர் துய்த்த லறம்.—(யோக சித்தி)

என்னும் விரிந்த நோக்கம் மக்களின் ஆவியிற் பதிந்துள்ளது. இந்நோக்கங்களெல்லாம் தொழிலாளர் இயக்கத்தால் பரந்து விளங்குகின்றன. இன்னும் சில ஆண்டுகளில் தொழிலாளர் கையில் உலகம் இருக்கும் என்பதைத் தற்கால விடுதலைக் கிளர்ச்சிகள் விளக்குகின்றன. சீனம், ஃப்ரான்ஸ், ரஷ்யா, இங்கிலாந்து முதலிய நாடுகளில் தொழிலாளர் ஆதிக்கம் மிகுந்து

வருகிறது. 'தொழிலாளர் உயர்வு' என்றாலே, 'பொதுஜனங்களின் முன்னேற்றம் என்ற பொருள் உதிக்கிறது.

ஆதலின் தொழிலாளர் இயக்கம் ஓர் உலக இயக்கம் ஆகும். உலகின் பாவங்களுக்குக் காரணமான வறுமையும் மடமையும் நீங்கத் தொழிலாளர் உழைக்கவேண்டும். தொழிலாளி யோக்கியமான தொழில் செய்து, தனது உடலின் தேவைகளை யடைந்து, தனது ஒழுக்கங்களை நல்ல கல்வியறிவால் திருத்திக்கொண்டு, தூய வாழ்வு வாழவேண்டும். சமூக முன்னேற்றம் உண்மையான தொழிலாளரிடமே யுள்ளது.

இக்காலத்தில், மனித சமூகத்தைக் கெடுக்கும் தொழில்களெல்லாம் தலைவிரித்தாடுகின்றன. பயிர்த் தொழிலில் நடக்கும் அநீதிகள் சொல்லிற்கடங்கா. மனிதனுக்கு வேண்டிய உடை உணவுப் பயிர்களை முக்கியமாக விளைவித்தல் தொழிலாளர் கடமை. நெல் கோதுமை கேப்பை பயறு முதலியவற்றையும், பருத்தி சணல் போன்றனவற்றையும் அதிகமாக விளைவித்து, உடை உணவுப் பஞ்சத்தை நீக்குவதைத் தொழிலாளர் முதன்மையாகக் கருதவேண்டும். அப்படியின்றி இக்காலத்தில், ஏற்றுமதிக்காகவும் வியாபாரத்திற்காகவும் புகையிலை தேயிலை காப்பி கஞ்சா முதலிய தீய பயிர்களெல்லாம் விளைவிக்கப் படுகின்றன.

நமது புதுயுகத் தொழிலாளர் சமுதாய சக்தியின் திருக்கரங்களாவர். அவர், தொழிலைப் பொதுநல வேள்வியாகச் செய்வர். இனி உடை உணவு குடியிருப்பு எல்லாம் தொழிலாளருக்குத் தட்டின்றி

யெய்தும், அவர் உள்ளத்தில் பொது நலத்திற்காகப் பாடுபடும் உணர்வு ததும்பும்; ' ஒரு தனி மனிதனுக்கு ஆட்செய்கிறேம் என்னும் அடிமை யுணர்வு நீங்கும். சமுதாயம் ஒருடல்: அதற்குத் தொழிற் கரங்கள் கணக்கில; செய்யுந் தொழில்கள் எல்லாம் தெய்வ வழிபாடாகும். தொழில், பொன்னினும் நன்மதிப் புறும். நாணயங்களின் தேவைகூட இல்லாது பண்ட மாற்றினலேயே எல்லாரும் செழித்தோங்குவர். தனியுணர்வின்றி சங்கிலித் தொடர்போல் ஒருவருக் கொருவர் இணைந்திருப்பர். உலகக் கோயிலில் உடல் மேனியனுய் உயிர்க்குயிராய்த் திருநடம் புரியும் ஒருவனை உள்ளுறவாற் கலந்து, அவனிச் சையின் ஆட்களாக அனைவரும் வினைவேள்வி புரிவர். உடலுழைப்பு அறிவுழைப்பு உணர் வுழைப்பு (கலைகள்) முதலியன இப்போதிருக்கும் ஏற்றதாழ்வின்றி, எல்லாம் பொது நலத்திற்காகிச் சம மதிப்புற்று, மிகை குறைவின்றித் தகவிளேங்கும். இத் தொழிலாளர், கேவலம் கையால் வயிற்றை வளர்க்கும் யந்திரங்கள் போலிரார்; அவர், தொழிலை ஒரு தரும சாதனமாகச் செய்வர். ஏழாண்டுகள் (8-வயது முதல் 15-வரை) பொதுக்கல்வி அனைவருக் கும் அளிக்கப்படும். பிறகு, அவரவர் இயற்புலமைக் கேற்ற தொழிற் பயிற்சி தரப்படும்.

தமிழ்நாடு, பண்டையக்காலம் முதலே தொழில் சிறந்த நாடு. இப்போது இங்கிலாந்துபோல் அக் காலம் தமிழகம் கடலரசியாக விளங்கியது; தமிழர் இரத்தத்தில் தொழில் திறமை ஊறிக்கிடக்கிறது. நம் நாட்டார் தொழிற் சிறப்பை இனி ஆராய்வாம்.

## ௯. நமது கப்பல் தொழில்

முற்காலத்தில் நமது சமுதாயம் தொழில் வளமை பெற்றிருந்ததற்கு ஓர் உதாரணமாகக் கப்பல் தொழிலைப்பற்றி இங்குச் சிறிது ஆராய்வாம்:

பதினோராம் நூற்றாண்டில் **ஸ்ரீ விஜயராஜபோஜன்** என்ற மன்னன், '**யுக்தி கல்பதரு**' என்னும் நூல் எழுதினான். அதில், பொன்னணிகள் ஆயுதங்கள் கொடி குடைகள் அரியணை முதலியவை செய்யும் வகையும், சண்டைக்குக் குதிரை யானை சேனை முதலியவற்றைப் பயிற்றும் வகையும், இருபத்தேழு வகைக் கப்பல்கள் செய்யும் விதமும் சொல்லப்பட்டுள்ளன; கடல் பிரயாணத்திற்கு ஏற்ற கப்பல்களின் அளவு சுமார் 278'+38' +27' அடி. இந்த அளவு சுமார் 2300 டன் பாரம் தாங்கும். இவற்றில் **பூமா, பாக்யம், மந்தரா** என்று பல பெயர் புனைந்துள்ள கப்பல்கள் வெவ்வேறு அளவினவாக உள்ளன. சிறப்பான கப்பல்கள் 42 முதல் 176 முழம் நீளம் வரையிலு முள்ளன. நீளத்தில் $\frac{1}{8}$-ம், 1/10-ம் இவற்றின் அகல ஆழங்கள். இவற்றின் பெயர்கள், **தாரணி** 48 முழம், **காமினி-96, தாரி–112, ஜங்காலா–128, பெகினி–176, பல்லினி–144**, முதலியன சிறந்தவகைக் கப்பல்கள், நீளம் ஒரு பங்கும், அகல ஆழங்கள் $\frac{1}{2}$ பங்கு முள்ளவை. அவை, **ஊர்த்துவம், அனுத்தமம், சுவர்ணமுகி** முதலிய பெயர் புனைவன. கப்பல்கள் தங்கம், வெள்ளி, செம்புகளாலும், இவற்றின் கலப்புகளாலும் அலங்கரிக்கப்படும். அவை நான்கு பாய் மரங்கள் உடையன. அவை வெண்ணிறத்தாலும் (மூன்று பாய் மரக்கப்பல்), செந்நிறத்தாலும் (இரண்டு பாய் மரக்கப்பல்), மஞ்சளாலும் (ஒரு பாய் மரக் கப்பல்), மற்றவை நீலத்தாலும் பூசப்படும். கப்பலின் முகப்பில், எருது, பாம்பு, யானை, புலி, கிளி மனிதன்

முதலிய தலைகளில் ஒன்றைச் செதுக்கி அமைப்ப துண்டு. கடலில் காந்தப் பாறைகள் இருக்கும். ஆதலால் பலகைகளை இரும்பினால் இணைக்கலாகாது என்றும் அக்காலம் அறிந்திருந்தனர்.

(1) **சர்ப்ப மந்திரம்** என்னும் அறையுள்ள கப்பல், அரசனுடைய பொருள்கள், குதிரைகள், பெண்கள் முதலிய வற்றைச் சுமந்து மிதக்கும். (2) **மத்திய மந்திரம்**, உல்லாஸக்கப்பல். நீண்ட பிரயாணங்களுக்கு, விசாலமான அறைகள் கொண்ட கப்பல்களே பயன் படும். கப்பற் சண்டைக்கும் இவையே பயனாகும். விஜயன் மணந்த **பாண்டியன் புதல்வி**, 860 முழம் நீளமும் + 600 அடி அகலமும் + 20 அடி ஆழமுமுள்ள கப்பலில் வந்தாளெனச் சொல்லப்படுகிறது. 760 பேர்கள் செல்லக்கூடிய கப்பல்கள் **தமிழ்நாட்டில்** முற்காலத்தில் இருந்தன. இன்னும், சஞ்சியிலுள்ள புத்தாலயங்களிலும், சலாசத்துத் தீவிலுள்ள குகைகளிலும், ஜகந்நாத ஆலயத்திலும், அஜந்தாக் குகையிலும் முற்காலத்துக் கப்பல்களின் கல்வெட்டுகள் விளங்குகின்றன. சாவகத்தீவில் ஒரு கோயிலில், **தமிழரின்** குடியேற்றக் காட்சி, கப்பல் கப்பலாகக் காட்டப்பட்டுள்ளது. ஆந்திர நாட்டில், முன்னே கப்பலின் உருவம் பொறித்துள்ள காசுகள் வழங்கின; **ருக் வேதம்** கப்பல்களைப் பற்றிச் சொல்லுகிறது; 100 துடுப்புகள் கொண்டு தள்ளப்பட்ட கப்பல்களையும் வர்ணிக்கிறது. **பாரதத்திலும் வேதத்திலும்** நெடுந்தொலை ஊர்ந்து நடுவில் உடைந்த கப்பல்களைப்பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. **மனுவில்** கடற் சுங்கத்தைக் குறித்து விரிவாகச் சொல்லப்படுகிறது. **பிருஹத்ஸம்ஹிதை** என்ற சோதிட நூலில், கப்பலோட்டிகளுக்கு ஏற்ற நாளும் கோளும் வகுக்கப்பட்டுள்ளன. இன்னும் வராஹ புராணம்,

மார்க்கண்டேய புராணம், இரத்னவளி, சாகுந்தலம், கதாசரித்ரசாகரம், தசகுமார சரித்திரம் முதலிய வற்றில் கடல் யாத்திரை, வியாபாரம், போக்குவரத் துக்களைப்பற்றிய குறிப்புகள் முதலிய காணப் படுகின்றன. தமிழ் நூல்களும், புத்த ஜாதகங் களும் பிடகங்களும் நமது கப்பல் முயற்சிகளைக் குறித் துப் பேசுகின்றன. **பூரணன்** என்ற வியாபாரி உலகைச் சுற்றி **ஆறு கப்பல் பிரயாணங்கள்** செய்ததாகச் சொல்லப் படுகிறது.

பாண்டியர் சோழர் மௌரிய அரசரின் நாட் களில் நம் நாடு, கடல் அரசியாயும் வியாபார உலகின் இதயமாயும் விளங்கியது; யூதர் அஸ்ஸீரியர் கிரேக்கர் எகிப்தியர் உரோமர் முதலியவர்களுடன் பலமான வியாபாரஞ் செய்தது. நம் நாட்டின் இயற்கைப் பொலிவும் வளமும் விளைவும், தொழில் வளர்ச்சிக்கு மிகவும் ஏற்றனவாயிருந்தன. ஐரோப்பா தன் வாழ்க்கைத் தேவைகளுக்கு நமது நாட்டையே எதிர் பார்த்தது. நம் நாட்டவரின் தேவைகளோ மிகச் சிறியன; அவற்றைத்துய்த்தது போக, இருந்த ஏராள மான மீதியை அயல் நாடுகளுக்கு நம்மவர் ஏற்றுமதி செய்தனர். 7,00,000 பவுனுக்கு அணிகளும், வாச னைச் சரக்குகளும் இந்தியாவினின்று ஆண்டுதோறும் உரோமுக்குப் போயின. நம்நாட்டுத் தேக்கு மரங் கள் கி. 3000—த்திலேயே பாபிலோனுக்கு ஏற்றுமதி யாயின. தமிழ்நாட்டினின்று மயில்கள் ஏற்றுமதி யாயின. **அற்புதமான எகிப்தியக் கோபுரங்களில் மதுரையின் நீலச்சாயமும், சல்லாத்துணிகளும்,** புளிய வைரங்களும் இருக்கின்றன. எகிப்திய வியாபாரிகள் நம்நாட்டிற்கு வந்து, தங்கள் ஒட்டகைகளில் வாசனைச் சரக்குகள் வாங்கிச் சுமையேற்றிக்கொண்டு போகும் காட்சி யூதரின் சமய நூல்களில் காணப்படுகிறது. தந்தமும்

மயிலிறகும் வாசனைத் திரவியங்களும், ஸிரியாவிற்கு ஏற்றுமதியாயின. யூத வேதத்தில் 'தோகை' 'அகில்' என்ற தமிழ் மொழிகள், திரிந்து காணப்படுகின்றன. கர்ப்பூரம், அரிசி, இஞ்சிவேர் என்பன கார்ப்பியன், ஒரைஜா, ஜிஞ்ஜிவர், என்று கிரேக்க பாஷையில் மருவி வழங்குகின்றன. **சாலமன்** என்ற மன்னன், மொஸா பொதேமியா, பாபிலோன் வழியாக, இந்தியாவோடு ஒட்டகத்தில் வியாபாரம் செய்ய ரஸ்தாக்கள் போட்டதாகத் தெரியவருகிறது. **ஜெர்ஜான்** என்ற பாரசீக மன்னனின் பெருஞ் சேனையில் இந்திய வில்லாளிகள் முதன்மை பெற்றதாக **ஹெரதோதன்** எழுதி வைத்திருக்கிறான். அக்காலத்தில் பஞ்சு என்பதே மேற்கு நாட்டிற்குத் தெரியாது : " இந்தியாவில் சில காட்டுச் செடிகள் இருக்கின்றன ; அவற்றில் பழம் பழுப்பதற்குப் பதிலாக, பயிர் முளைக்கிறது! அது ஆட்டு ரோமத்தினும் நன்றாயிருக்கிறது ; அதனால் ஹிந்துக்கள் இலேசான ஆடைகள் செய்கிறார்கள் !'' என்று **ஹெரதோதன்** பஞ்சைப்பற்றிக் கூறுகிறான். உலகிற்கு ஆடை கொடுத்த முதல்நாடு, நமது நாடே !

**சிக்கந்தர்** சிந்து நதியை நம் இந்தியப் படகுகளிலேயே கடந்தார். 800 கப்பல்களடங்கிய ஒரு நாவாய்க் கூட்டம் அப்போது பாரசீகத்திற்குப் போக்கு வரவு செய்தது. 2,000ம் கப்பல்கள் சரக்குகளை ஏற்றிக்கொண்டு, வாணிபத்திற்கு ஊர்ந்ததாகத் **தோலமி** (Ptolmy) கூறுகின்றான். " இந்தியா, வாணிகத்தால் உரோமை வற்றடிக்கிறது. இத்தியாவிற்குள் பொன்னாறு பாய்கிறது '' என்றுதோலமி முறையிடுகிறான்.

**சந்திரகுப்த சக்கரவர்த்தி,** பெருத்த கப்பற்படை வைத்திருந்தான். அவனுடைய ஆட்சி யொழுங்கைப்

பற்றி மகாஸ்தனிஸ் விரிவாக எழுதியுள்ளான்: அக் காலத்தில், கப்பல் தொழிலாளிகளை அரசன் மிகவும் ஆதரித்தான். கப்பல் வேலைக்காரர்களெல்லாம் அக் காலத்தில் சர்க்கார் சம்பளம் பெற்ற அரசாங்கச் சேவகர்கள். சந்திரகுப்தன் தனது ஆட்சியை ஆறு இலாகாக்களாகப் பிரித்தான். மூன்றாவதுதான் இராணுவ இலாகா; இதில் ஒவ்வொன்றிற்கும் ஐந்து அங்கத்தினர் கொண்ட ஆறு உட்பிரிவுகள் இருந்தன; அவற்றுள் ஒன்றே, கப்பல் படைப்பிரிவு; கப்பல் படைக்குத் தலைவன் நாவத்யக்ஷன் 'என்றபட்டம்பெற்ற வன். இவன் எல்லாக் கப்பல்களையும் மேல் பார்ப்ப வன்; கப்பல் களுக்குச்சுங்கம் விதிப்போனும் இவனே. கடல் அல்லது நதிக்கரையிலுள்ள கிராமங்களுக்கு நிலைத்த வரியுண்டு. செம்படவர் தமது வரும்படியில் ஆறிலொன்று பாசித்தீர்வை தரவேண்டும். முத்துக் குளிப்பவர்களுக்கு அரசாங்கமே வாடகைக்குப் படகு தந்தது. துறைமுகங்களில் வியாபாரச் சரக்கு களுக்கு வரி விதிக்கப்பட்டது. புயலால் வருந்திய கப்பல்களுக்கும், சாமான்கள் சேதமான வியாபாரி களுக்கும், பழுது போன கப்பல்களுக்கும் அரசாங் கம் ஈடு செய்தது. பொது நன்மை வியாபாரம் அர சாங்க வேலை நிமித்தம் போகிறவர்கள் தவிர,மற்ற வர்களெல்லாம் சர்க்கார் சேவகர் உத்தரவின்றி,எவ் வேளையும் தோணி ஏறக்கூடாது; செம்படவரும்சாப் பாட்டுச் சாமான்கள் கொண்டு செல்வோரும், குற்ற வாளியைப் பிடிக்கச் செல்வோரும், சொந்தப் படகு வைத்திருப்போரும், மக்களுக்கு இன்றியமையாத சாமான்களை விற்கப்போவோரும் எவ்வேளையும் போகலாம். அந்தணரும், துறவிகளும், சிறு குழந்தை களும், முதிய கிழவரும், சூல் கொண்ட பெண்டிரும், அரசாங்கத் தூதரும் இனமாகப் போகலாம். குற்ற

வாளிகள் தண்டிக்கப்படுவார்கள் ; திருடரும், பெண்களைச் சோரஞ் செய்து செல்வோரும், அரசாங்கக் குற்றவாளிகளும், வஞ்சகரும், வெடி மருந்துகள் வைத்திருப்போரும் சோதனைச் செய்யப் பட்டுத் தக்கபடி தண்டிக்கப்படுவார்கள். அன்னியர்கள் கூர்ந்து சோதிக்கப்படுவார்கள். அவர்கள் பின்னேயே அரசவூழியர் தொடர்ந்து, அவர்களுக்கு வேண்டிய தேவைகளைக் கொடுத்து அனுப்புவர். உணவு, உறைவிடம், மருந்து முதலியன அவர்களுக்குக் கொடுக்கப்படும்.

அசோகர் நாட்களில் பிக்ஷுக்கள், யவனம் சோனகம் ஸிரியா எகிப்து சீனம் ஜப்பான் முதலிய விடங்களுக்குக் கப்பலூர்ந்து சென்றதைச் சரித்திரம் விளக்குகிறது. அசோகர் நட்ட கல்தூண்கள் நம் நாட்டுக் கப்பல் வியாபார முயற்சிகளைப் பேசி நிற்கின்றன. குப்த மன்னர் காலத்தில், இந்தியக் கப்பல்கள் வங்காளத்திற்கும், இலங்கை, பர்மா முதலிய விடங்களுக்கும் சென்று கொண்டேயிருந்தன. பசிபிக் தீவுகள் வழியே நம் கப்பல்கள் அமெரிக்காவுக்கும் சென்றன. கொலம்பசுக்கு முன்பே, நாம் அமெரிக்காவுக்குப் போக்கு வரவு செய்தோம்!

## தமிழர் வாணிகம்

ஒரு நன்னாடு, உண்மை அறிவும், பல கைத்தொழில்களும், சுதந்தரமும், போதிய செல்வமும், நீர் நிலவளங்களும் பெற்றிருக்கவே வேண்டும். குபேரனும் கர்ணனும் (திருவும், ஈகையும்) பெருகிய நமது பாரதநாட்டின் அத்யாத்ம அறிவும், அறுபத்து நான்கு கலை நிறைவும், மன்னுயிரைத் தன்னுயிர் போலப் பேணும் அரசநீதியும், கப்பல் வாணிகத்தால்

நாட்டிற்கு வந்த செல்வத் திரளும், கைத்தொழில் வளமும், சரித்திரப்புகழேறி விளங்குவன.

"மகரவாரி வளந்தந் தோங்கிய நகரவீதி"-அதாவது, கடலில் நாவா யூர்ந்து, அந்தக் கப்பல்வாணிகத்தாலும், கடல் தரும் முத்துக்கள் அரதனங்கள் முதலியவற்ருலும் விளங்குமென, நமது தமிழ்நாட்டு வீதிகள் புகழப்பெறுகின்றன. "கலந்தரு திருவிற் புலம் பெயர் மாக்கள்" (வியாபாரத்திற்காகத் தம் நாட்டைவிட்டு வெளிநாடு சென்று, தம் கப்பல்களிற் செல்வங் கொணர்ந்து, அச்செல்வத்தாற் பெருகிய மக்கள்) என்று நம் தனவணிகர் போற்றப்பெறுவர்.

## எ. பண்டைய இந்தியக் கப்பல்கள்

**வாசாஃப் (Wassaf)** என்ற அறிஞர், "மலைபோன்ற தோற்றத்துடன் காற்றையே இறகுகளாகக்கொண்டவை போல், இந்தியக் கப்பல்கள் விரைகின்றன" என்று வர்ணிக்கிருர்! கி. பி. 1321-ஆம் ஆண்டு **ஓதோரிக் (Friar Odoric)** என்பவன், இந்துமா கடலிற் செல்லும்போது, 700 இராஜபுத்திர வீரரும், குஜராத்தியரும் கொண்ட ஒரு கப்பலைக் கண்டதாகக் குறிக்கிருன். யாத்திரிகனுன **நிக்கலோ கோந்த்**, "இந்தியக் கப்பல்கள் மேல்நாட்டுக் கப்பல்களைவிடப் பெரியவை" எனக் கூறுகிருன். கி. பி. 1498-ல், இந்தியாவிற் கரையேறின வாஸ்கோடிகாமா, இந்தியக் கப்பலாளின் திறமையைச் கண்டு வியந்தான்.

இந்தியக் கப்பல்கள் தேக்குமரத்தால் வெகு உறுதியாகச் செய்யப்பட்டன. அதன்மேல் சுண்ணும்பு, சணல், எண்ணெய் மூன்றுங் கலந்த தார் பூசப்பட்டது. அது சாதாரணமாக 300 பேர் ஏறக்கூடியது; 600 கூடை மிளகு பிடிக்கக்கூடியது;

ஒவ்வொரு கப்பலிலும் பத்து சிறிய தோணிகள் இருந்தன. **அயினிஅக்பாரி** என்ற ஒரு சிறந்த குறிப்பு **அபுல் பாஸலால்** எழுதப்பட்டு நமது சரித்திர ஆராய்ச்சிக்கு மிகப் பயனுள்ளதாக இருக்கிறது. அதில் **அக்பர்** காலத்திலிருந்த **கப்பல் இலாகா** நடைமுறைகள் தெளிவாகக் காணப்படுகின்றன. வங்காளம், அலகாபாத் லாகூர், காசுமீரம் முதலிய விடங்களில் கப்பல்கள் கட்டப்பட்டன.

**கௌடில்யரின் அர்த்த சாஸ்திரத்தைத்** தழுவிக் கப்பல் இலாகா நடத்தப்பட்டது. கப்பல் இலாகாவிற்கு **மீர்பைரி** என்று பெயர். வியாபாரத்திற்கும் அரசாங்க உத்தியோகஸ்தரின் மேற்பார்வைக்கும் கப்பல்கள் முதன்மையாக ஏற்பட்டிருந்தன. மரங்கள் யானைகள் முதலியவற்றைச் சுமக்கவும், வியாபாரச் சரக்குகளை ஏற்றுமதி செய்யவும், யுத்தங்கள் புரியவும், உல்லாச யாத்திரை செய்யவும் விதம் விதமான கப்பல்கள் கட்டப்பெற்றன. சில கப்பல்களில் உல்லாசப் பூந் தோட்டங்களும் அமைந்திருந்தன.

அலைகளின் இயல்பு, கடலின் ஆழம், காற்றின் இயல்பு ஆகியவற்றை அறிந்தவர்களாகவும், துறை முகங்களின் அனுபோகமும் உள்ளவர்களாகவும் மாலுமிகளைக் கப்பல் இலாகா பயிற்றியது. கப்பல் தலைவன் **நக்கோடா** எனவும் முதல் மாலுமி **தண்டெய்ல்** எனவும் கப்பல் சாத்திரி **மாலிம்** எனவும் பெயர் தாங்கிய கப்பல் நிபுணர்களாவார். சுமை ஏற்றுவதும், இறக்குவதும் பிரயாணிகளை ஏற்றுவதும், கப்பலை ஓடவிடுவது மாயுள்ளவர். கப்பல் சமான்களை மேற்பார்ப்போர் ஒருவருண்டு. சிலர் ஜனங்களுக்கு வேண்டியதைக் கொடுத்து, கப்பல் கணக்குகளையும் ஒழுங்காக வைத்துக்கொண்டிருப்பவர், கிராணி **(Keranee)**

என்ற குமாஸ்தா. 'சுகாங்கீர்' என்பவர் கப்பலைச் சரியான திசைக்கு நடத்துவார். 'புஞ்சாரி' என்பவர் திசையையும் வழிகளின் பத்திரத்தையும் நோக்குவார். கப்பலில் ஊறிவரக் கூடிய தண்ணீரை ஒருவர் இறைத்து விடுவார். துப்பாக்கியில் தேர்ந்தவரும் உண்டு. நங்கூரம் போடவும், படகைவிடவும் கேர்வா (Kerwah) என்ற உத்தியோகஸ்தர் கவனிப்பார். இப்படிக் கப்பல் சேவகர் ஒழுங்காக வகுக்கப்பட்டனர். கப்பல் இலாகாவின்மற்ெருரு வேலை நதிகளைக்கடக்கும் படகுகளைத்தயார் செய்வதும், அவைகளில் ஏற்ற படும் சாமான்களுக்கு வரி விதிப்பதுமாம். இறக்குமதியும், ஏற்றுமதியும், நூற்றுக்கு இரண்டரை சுங்கம் விதிக்கப்பெறும். கப்பல்கள் முக்கியமாக டாகாவில் தான்சேர்க்கப்பட்டன. அங்கே 768 யுத்தக் கப்பல்களும் 3000 படகுகளும்இருந்தன. அவற்றை நிர்வகிக்கும்செலவு ரூ. 8, 4, 3, 452. மூர்சிதபாத்திற்குப்போக வேண்டுமாயின் 8 அணு கூலி. 1565-ஆம் ஆண்டில் இந்தியாவை, வெனிஸ் பிரயாணி ஒருவன் சுற்றிப் பார்த்தான். அலக்ஸாந்திரியாவைவிட, டாகாவில் கப்பல் கட்டுவது மிகவும் சுளுவாக இருக்கிறதென்று கான்ஸ்தாந்தி நோபிள் சுல்தான் சொன்னதாக அவன் குறிப்பிட்டிருக்கிருன்.

சிந்து நதிப் பிரதேசங்களிலும் கப்பல் முயற்சிகள் மிகுதி. தாட்டர் என்ற இடத்தில் மட்டும் 40, 000 படகுகள் வாடகைக்குக் கிடைப்பதாக அபுல் பாஸல் சொல்லுகிருர். அக்காலத்தில் மசூலிப் பட்டணமும் இணையற்ற துறை முகமாக விளங்கியது; அது வியாபாரத்தில் சிறந்து விளங்கியது. 1,000-ம் டன் பாரம் சுமக்கக் கூடிய கப்பல்கள் பல அங்கிருந்தன. பெகு, அரக்கான், தென்ஸெரிம், மலாகா

பாரசீகம், மேலத்தீவு முதலிய விடங்களுக்கு அக்காலம் இந்தியக்கப்பல்கள் சென்றன. நரசாப்பூர் சிறந்த துறைமுகமாயும் கப்பல் கட்டு மிடமாயும் விளங்கியது. கஃபிப்கான் என்ற சரித்திரக்காரன், சூரத்தில் பெரிய பெரிய கப்பல்களிருந்ததாக எழுதியுள்ளான். அவை, மிகவும் உறுதியானவை. எட்டு துப்பாக்கிகளுள்ளவை. மெக்காவிற்கு அடிக்கடி சென்று 50 லக்ஷத்திற்கு வெள்ளி தங்கத்தில் வியாபாரம் செய்தது.

டப் (Duff) என்பவன், தன் மாரத சரிதையில் சிவாஜியின் கடற் படையைப் பற்றிக் கூறுகிறான். பம்பாயினின்று 20 மைல் தெற்கேயுள்ள கொலாபா என்ற துறை முகத்தில் தான் மாரதக் கப்பல்களெல்லாம் வந்து சேர்ந்தன. ஒப்பற்ற கடற்படையை மாரதர் வைத்திருந்தனர். கி. பி. 1698ல் கோனுஜி அங்க்ரே என்னும் கப்பல் தலைவன் சிறந்து விளங்கினான். ஒவ்வொரு கப்பலிலும் 40 துப்பாக்கிகள் கொண்டு அவன் ஆங்கிலக் கப்பல்களைத் தாக்கி வந்தான். இப்படியாக முகம்மதியர் காலத்தும் கப்பல் தொழில் இந்தியாவில் சிறந்தோங்கியது.

## பிற்காலம்

கீழிந்தியக் கூட்டத்தார் இந்தியாவிற்கு வந்த பிறகும், நமது கப்பல்கள் செருக்குடன் உலாவின. அக்காலத்தில் பாரசீகர், கப்பல் கட்டுந் தொழிலிற் சிறந்து விளங்கினர். 1735—ஆம் ஆண்டில் லோவோஜீ என்பவனும், 1802—ஆம் ஆண்டில் ஜாம்ஷெட்ஜீ என்பவனும், கப்பல் கட்டுந்தொழிலில் தேர்ந்து விளங்கினர். பம்பாயில் கப்பலுக்கு வேண்டிய எல்லாக் கருவிகளும் நிறைந்திருந்தன. “ பம்பாய் தான் சிறந்த கப்பல் தளம். அங்கே இயற்கைச் சௌகரியங்கள்

பல உள்ளன. ஆங்கிலக் கப்பல்களை விட இந்தியக் கப்ப்ல்கள் உறுதியானவை. ஆங்கிலக் கப்பல்கள் 12—ஆண்டுகளுக் கொரு முறை பழுது போயின. இந்தியக் கப்பல்களோ, 50 ஆண்டுகளுக்கு மேல் உறுதியாக ஓடின! பதினைந்து ஆண்டுகளுக்குப் பின்னும் நேற்றுக் கட்டப்பட்டது போன்று புதிதாக இந்தியக் கப்பல்கள் உள்ளன. அவை 8 தடவை நீண்ட பிரயாணங்களுக்குப் பயன்பட்டன. எந்த ஆங்கிலக் கப்பலிலும் 6—தடவைக்கு மேல் பிரயாணஞ் செய்ய முடிவதில்லை. "டெக்கா, சில்ஹட், சிட்டகாங் முதலியவிடங்களில் கப்பல் தொழில் மிகுதி" என்று கர்னல் வாகர் கூறுகிறார். கல்கத்தாவில் பெரும் பாரஞ் சுமக்கக் கூடிய ஆயிரக்கணக்கான கப்பல்களிருந்தன.

இப்படியாக ஆங்கிலேயரும் நமது கப்பல் தொழிலைக் கண்டு வியக்கும் படியாயிருந்தது!

1840—ஆம் ஆண்டு முதல், நமது கப்பல் முயற்சிகள் தேய ஆரம்பித்தன. 1863—ஆம் ஆண்டு ஏப்பிரல் மாதம், சர்க்கார் சட்டத்தால் நாம் கப்பல் கட்டும் உரிமையை முற்றும் இழந்தோம். "இந்தியர் கப்பல் தொழிலில் மிகத்திறமையாளர். ஆங்கிலேயர் இந்தியரிடத்தினின்று, கப்பல் கட்டுவதற்கு ஏற்ற பல முறைகளைக் கற்றனர். பார்வையிலும், உபயோகத்திலும், உறுதியிலும் இந்தியக் கப்பல்கள் இணையற்றன" என்று **பால்தஜார் சோல்வின்ஸ்** என்ற பிரெஞ்சுக்காரன் சொல்லியிருக்கிறான்.

நமக்குச் சுதந்தர மிருந்து நமது கப்பல் தொழிலும் கட்டில்லாது நடந்திருந்தால், இப்போது எந்த நாடும் வியங்கும் படியான பெரிய பெரிய கப்பல்களும் கடற்படைகளும் விமானங்களும் நாமும் கண்டிருப்போம்!

1840—ஆம் ஆண்டு வரையிலும் நமது கப்பல் தொழில் உயிர் வைத்திருந்தது. ஆங்கிலேயரும் வியக்கத்தக்க உறுதியான கப்பல்களை நாம் எளிதாகக் கட்டினோம். 1750—ஆம் ஆண்டு பாவ் நகரில் கட்டிய "தாரிய தௌலத்" என்னும் கப்பல், 1837—ஆம் ஆண்டு (87—ஆண்டுகள் உழைத்தும் கூட) உறுதியாயிருந்தது.

பல ஆண்டுகள் ஆங்கிலக் கடற்படைக்கு வேண்டிய கப்பல்கள் பம்பாயிலேயே நமது தொழிலாளரால் அமைக்கப் பெற்றன. சூரத்தில் லௌஜீ நுஸர்வான்ஜீ தலைமையில் அற்புதமான கப்பல்கள் கட்டப் பெற்றன; அவரே பம்பாயிலும் தொழிலை நடத்தினர், பம்பாய், கல்கத்தா, ஸில்ஹெட், டாகா முதலிய இடங்களில் நடந்த கப்பல் தொழிலை வியக்காத வெள்ளைக் காரரில்லை. இங்கிலாந்தில் செய்த கப்பல்கள், ஆறு பிரயாணங்களுக்கு 12 ஆண்டுகளுக்குக்கூடத் தாங்கவில்லை. அந்தச் செலவில் கால் பங்கில் நமது கப்பல்கள் முடிந்தன! நமது கப்பல் தேம்ஸ் நதியிலும் கம்பீரமாக உலாவி, நமது சரக்குகளை விற்றன. ஆங்கில வணிகர் தங்கள் தொழில் கெடுமெனக் கிளர்ச்சி செய்தனர். இந்தியக் கப்பல் தொழிலும் வாணிகமும், பரிதாபமாக அநியாயமாக, நசுக்கப் பெற்றன...! கண்ணீர்! இந்தியாவுக்கு 2400—ம் மைல் கடற்கரையுண்டு; 400 கோடி ரூபாய்க்கு மேல் வியாபாரம் நடக்கும். இரண்டரைக் கோடி டன் பாரம் சரக்கு ஏற்றுமதி இறக்குமதியாகும். இந்தியருக்குத் திறனுண்டு. 1860—1925—ஆம் ஆண்டுகளில் 102 சுதேசக் கப்பல் கம்பெனிகள் 46 கோடி ரூபா முதலுடன் எழுந்தன; தூத்துக்குடியில் நமது **வீரச் சிதம்பரம் பிள்ளை** சுதேசிக் கப்பல்

கம்பெனி வைத்ததை அறிவோம். ஆங்கிலப் போட்டியும், நமது கஷ்ட காலமும் சேர்ந்து, முயற்சிகளை முறியடித்தன. 1919ல் **நரோத்தம முரார்ஜி, 'ஸிந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி'** ஏற்படுத்தினர். அது அரசாங்கத்தாரின் போட்டி பொருமைகளால் கஷ்ட நஷ்டப் பட்டுத் தளர்ந்து இப்போது மறுபடியும் விசாகப் பட்டணத்தில் தலை தூக்கியிருக்கிறது — வளர வேண்டும்! கப்பல் தொழில், வறுமை போக்கும்; வளமை யாக்கும். சுதந்தர இந்தியா கடலரசியாகுக!

## அ. வீரத் தமிழர்

சேர சோழ பாண்டிய மண்டலங்கள் மூன்றும் சேர்ந்தது தமிழ்நாடு. சங்க காலத்தில் தமிழ்நாடு மிகவும் பரந்து விரிந்திருந்தது. கடவுட் புலவரும், அருங்கலை வாணரும், அறநெறிக் காவலரும், இசை பெற்ற வீரர்களும் நாட்டில் விளங்கினர். சரியான சரித்திரக்காரன் இருந்தால், கிரேக்க—உரோம—பிராஞ்சு—ஆங்கில நாட்டுச் சரிதைகளெல்லாம் சேர்ந்தால் எவ்வளவு பெரிதோ, அதைவிடப் பத்துமடங்கு பெரிதாகத் தமிழ்நாட்டு வரலாற்றை எழுதலாம்! தமிழகவரலாறு, கலையும் பாட்டும் அருளும் அறமும் வீரச்சுடரும் பொலியும் திருவுடைத்து! நம்மவருக்குக் கால நிகழ்ச்சிகளைக் குறிக்கும் நினைப்பேயில்லாமற் போனது வருந்தத்தக்கது! கவிகளையும், சிலாசாசனங்களையும், பரம்பரைக் கதைகளையும், அக்காலங்களில் கட்டப் பெற்ற கோயில்களையும், அரண்மனைகளையும் பார்த்துத்தான் நம்நாட்டுப் பெருமையைச் சிறிது அறிய முடிகிறது; வேறுவழியில்லை. ஆனைமலை, ஐவர்மலை. இவற்றில் வட்டெழுத்தில் சிலாசாசனங்கள் இன்றும் உள்ளன. சிங்கள நாட்டுச் சரித்திரமான "மஹாவம்சத்தில்," தமிழ் மன்னருக்கும்

சிங்களவருக்கும் நடந்த போர்க் குறிப்புகளும், மன்னர் வரலாறுகளும் உள்ளன. **மார்க்க போலோன்** போன்ற புறநாட்டு யாத்திரைக்காரர்கள் பாண்டிய நாட்டைப் புகழ்ந்து எழுதியுள்ளனர். **புறநானூறு, பத்துப்பாட்டு, பதிற்றுப்பத்து, சிலப்பதிகாரம், மணிமேகலை** முதலிய சங்க நூல்களினின்று பழந்தமிழர் நாகரிகமும், வீரமும், காவலர் நீதிமுறையும் நன்கு விளங்குகின்றன. **தேவாரம், திருவாசகம், திருவாய்மொழி** முதலிய தமிழ் வேதங்களும் தமிழரின் அருட்புலமைக்குச் சான்றுகளாகும். அனபாயன் கோச்செங்கண்ணன், கரிகாலன், கிள்ளிவளவன், பெருநாற்கிள்ளி, விஜயாலயன், ஆதித்தியன். பராந்தகன், இராஜராஜன்—1 இராஜேந்திரன், இராஜராஜன்—2, குலோத்துங்கன் முதலிய சோழ மன்னர் வரலாறுகள் அங்குமிங்கும் நமக்குக் கிடைக்கின்றன. இன்னும் சற்றுத் தெளிவாகப் பாண்டிநாடு வரலாறு விளங்குகிறது. சேரமன்னருக்கும் பாண்டியருக்கும் நடந்த போர்களால், சேரநாட்டு வரலாறு கிடைக்கிறது. 14—ஆம் நூற்றுண்டு வரை பாண்டியநாடு புறநாட்டார் படையெடுப்பின்றிச் சுயேச்சையாகச் செழித்தோங்கியது. அசோகன் தனது கட்டளைத் தூண்களில் தமிழ்நாட்டு மூவேந்தரையும் நண்பரெனக் குறிக்கிறுன். வடநாடு ஓயாது அன்னியர் படையெடுப்பால் பலமாறுதல்களை யடைந்த போது, தென்ஞடு' தனக்குரிய பழந்தமிழ் நாகரிகத்திற் சிதையாதிருந்தது! மூவேந்தரும் பண்டைச் சகோதரர் ; அம்மூவரும் கொற்கையில் வசித்தனர். பிறகு, சோழன் தஞ்சை திருச்சிஜில்லாக்களையும், சேரன் திருவாங்கூர் மலையாளம் கோயமுத்தூர் ஜில்லாக்களையும், பாண்டியன் மதுரை திருநெல்வேலி ஜில்லாக்களையும் ஆளத் தொடங்கினர் என்று

தெரிகிறது. உரையூர், காவிரிப்பூம்பட்டினம், கொற்கை, இராமேஸ்வரம், இராமனுதபுரம், மதுரை, திருச்சி, திருவாங்கூர், கரூர், காஞ்சிமுதலியன தமிழ் நாட்டில் சரித்திரப் பெருமை வாய்ந்த பேரூர்கள்.

பாண்டிய நாட்டுப்புகழ், கிரேக்கு, உரோம், எகிப்து, சீனம், பாரசீகம், யூதம், சாவகம், மலேயா, பர்மா எங்கும் பரவியிருந்தது! இந்த நாடுகளுடனெல்லாம் நம் தமிழர் கப்பல் வாணிகஞ்செய்தனர்! திராவிடருள் ஒரு பிரிவினரான வானர்குல மன்னனை **சுக்ரீவன்** ஆசிரியர் கோனாகிய **இராமனுக்கு** இலங்கைப் போர் வென்று, சீதையை மீட்கப் பேருதவி செய்தான். வீராதி வீரனாகிய ஹனுமானுடன் தன் படைகளைத் தெற்கே யனுப்புங்கால், வழியிலுள்ள முக்கிய பட்டணங்களை வர்ணிக்கிறான் சுக்ரீவன்: அதில் அவன்,

> ததோ ஹேமமயம் திவ்யம் முக்தாமணி விபூஷிதம்
> யுக்தம் கவாடம் பாண்ட்யாணும் ததாத்ரக்ஷ்யதவனரா
>
> —**(வால்மீகி)**

என்று மதுரையை (**கவாடபுரி**) வர்ணிக்கிறான். அதாவது, ' கவாடநகர் பொன்மயமானது; முத்துக்களாலும் மாணிக்கங்களாலும் அணிசெய்யப் பெற்றது; மிகவும் அழகானது ; பார்க்கத்தக்கது. அந்தப் பாண்டியன் நகரைப் பாருங்கள், வானர வீரர்களே !'' என்கிறான், மஹாபாரத யுத்தத்தில், பாண்டவர் சேனைக்கு மதுரைப் பாண்டியன் பேருணவு கொடுத்தான் :

> "ஈரைம் பதின்மரும் (கௌரவர்) பொருது களத் தொழியப் பெருஞ் சோற்று மிகுபதம் வகையாது கொடுத்தோய்"

என்று **புறநானூறு** கூறும். அவ்வாறே சோழனும் கொடுத்தான்.

"பெருஞ் சோறு பயந்த பெருநா ளிருக்கைப்
பூம்புனற் பழனப் புகார்நகர் வேந்தன்"—(புறநானூறு)

கிரேக்கர், **சிக்கந்தர்** தலைமையில் வடநாட்டையும் படையெடுத்து இரத்தக் களமாக்கினர். ஆனால் சுதந்தரத் தேவியும் வீரத்திருவும் விளங்கிய நமது தமிழ்நாட்டில், கிரேக்கரும் உரோமரும் மன்னருக்குத் தொண்டு செய்தனர்! கிரேக்கு உரோம் நாட்டுச் சரித்திரக்காரர், தென் பாண்டிநாட்டைப் புகழ்ந்துள்ளனர்: திராட்சைரசம் பொம்மைகள் தங்கம் முதலியவற்றைக் கொண்டுவந்து, பாண்டிய நாட்டின் முத்தும், மிளகும், தந்தமும், **யவனர்** வாங்கிச் சென்றனர்:

"யவனர் தந்த வினைமாண் நன்கலம்
பொன்னொடு வந்து, *கறியொடு பெயரும்"—
(சிலப்பதிகாரம்)

யவனரும் சோநகரும் பாண்டியமன்னன் படையிலும், வாயிற் காவலிலும் இருந்தனர். வடநாட்டைப் படையெடுத்த துருக்கர், முதற்காலம் பாண்டிய மன்னருடன் குதிரை வியாபாரம் செய்தனர். இது, **மாணிக்கவாசகர்** சரித்திரத்தினின்றும் புலப்படும். இவ்வாறு, பாரதநாட்டுச் சரித்திரத்திற்குத் தமிழ்நாடு எவ்வளவு பெருமை தருகிறதென்பதை நாம் ஒவ்வொருவரும் அறியவேண்டும்: **சந்திரகுப்தன்** காலத்தில், நம்நாட்டின் இசைபெற்ற நிலைமையைக் குறித்து வைத்த கிரேக்க யாத்திரி **மகாஸ்தனீஸ்**, பாண்டிய நாட்டில் அல்லியைப் போன்ற ஒரு வீரப் பெண்ணரசி ஆட்சி புரிந்ததாகச் சொல்லுகிறான். நடுக்கடல் (Mediterranean Sea) நாடுகளுடன் பாண்டிய

---

* கறி—மிளகு.

நாடு வாணிகஞ்செய்து சீர்பெற்றதாகப் **பிளீநி**, **Pliny** தாம் எழுதிய சரித்திர நூலிற் குறிக்கிறார். இவர் கி. பி. 77-ல் இருந்தார்; ஒரு பெரியசரித்திர ஆராய்ச்சி எழுதியிருக்கிறார். அதனின்று முற்கால வரலாறுகளை நாம் அறிகிறோம். இவர் கி. பி. 79-ல் விசூவியஸ் எரிமலை விபத்தால் இறந்துபோனார். உரோமை ஆண்ட **அகுஸ்த கேசரிக்குப்** பாண்டி மன்னன் தூதனுப்பினான்.

இந்த அகுஸ்த கேசரி (Augustus Caesar Octavius), ஜூலிய கேசரியின் (Julius Caesar) மருமான். **உரோம் வரலாற்றில்** இந்த நீதிமன்னன் சரித்திரம் பொன்னால் எழுதப் பட்டுள்ளது. இவன் நாட்டை முறையாக அணிவகுத்துச் செங்கோல் செலுத்தினான்; ஸ்பெயின், ஆங்கிலம், எகிப்து, அரேபியா, தமிழகம் முதலிய நாடுகளுடன் நல்லுறவு பூண்டான்; கவிகளையும் கலைவாணரையும் மிகவும் போற்றினான். இவன் காலத்திலேதான் ஒராஸியன், விர்கிலியன் (Virgil), தீத்லிவ் (Tite-live) போன்ற பெரும்புலவர் விளங்கினர்; **தீத்லிவ்** எழுதிய நூலே, உரோம் நாட்டுச் சரிதைக்கு ஆதாரம். இவன் காலத்தில் உரோம், அழகும், அணியும், செல்வமும், அறிவும் பொலிந்தது. "அகுஸ்தன் காலம்" (Augustian Age) என்பது பழமொழி. இம் மன்னனை, இன்றும் உரோமர் தெய்வாம்சமாக மதிப்பர். அத்தகைய மன்னருடன் சரிசமனாக மதிக்கப்பெற்ற செந்தமிழ்ப் பாண்டியன் பெருமையை நாம் கொண்டாடுவோம்!

கி. பி. 140-ல், **தோலமி** (Ptolemy), பாண்டி நாட்டின் வாணிகப் பெருக்கையும் மதுரையின் அழகுச் செல்வத்தையும் வர்ணித்தான்: பாண்டி நாட்டில் உரோம நாணயங்கள் அடிக்கடி கலயம்

கலயமாக அகப்படுகின்றன. பழனித் தாலுகா கலய முத்தூரில் மேற் சொன்ன அகுஸ்தன் தலைபோட்ட 63 தங்க நாணயங்கள் ஒரு மண் செப்பில் கிடைத்தன. கி. மு. 269-ஆம் ஆண்டில், அசோகன் தமிழ் நாட்டிற்கு பிக்ஷுக்களை அனுப்பினான். அப்போது, முத்தமிழ் வேந்தரும் சுதந்தரமா யிருந்தனர்.

பண்டைச் சரித்திரத்தில் பெயர் பெற்ற மன்னர் அடியிற் காண்பவரே :

(1) யூதர்தலைவர் **மோசே** (Moses), **சைமன்** (Simon), (2) பாபிலோன் "தொங்கு தண்டலை" யை அமைத்த இராணி **செமிராமி** (Semiramis), (3) எகிப்து மன்னனை **ராம்ஸே** (Sesostris Ramsey) : இவன் எகிப்தின் அலெக்சாந்தர்; உலக வெற்றிக்காகப் படைகொண்டு கங்கைநதிமட்டும் வந்தான். இவன் மகன் இரண்டாவது ராம்ஸேதான், எகிப்தில் பிணக்கோபுரங்களைக் (Pyramids) கட்டினான். இவனுடைய உடல் அதில் இன்றும் காப்பாற்றப் பட்டுள்ளது, (4) பாரசிக மன்னரான **தரேசன்** (Darius), **ஜர்ஜரன்** (Xerxes), கிரீசில் **பெரிக்ளிஸ், அலெக்சாந்தர்,** (6) உரோம் நாட்டில் **யூலியகேசரி** (Julius Caesar), **அகுஸ்தன்,** (7) **கார்த்தாகத்தில் ஹனிபாலன்,** (8) பிரான்ஸில் பெரிய **சார்லஸ்** (Charlese magn).

இம்மன்னர்களெல்லாம் மண்ணாசையும், படைவலியும் கொண்டு, பேர் புகழுக்காகவே போர் புரிந்து, உலகை இரத்தக் களமாக்கினர் !

இம் மன்னரின் வீரத்திற்கும், அறிவாற்றலுக்கும் இம்மியும் குறையாத வீரத் திருமன்னர் நமது தமிழ் நாட்டில் பலர் இருந்தனர் ; அவர்கள் அறக் காவலர் ; உயிரினும் தருமத்தையே பெரிதென

மதித்தவர்; மனச்சாட்சிக்கு அணுவும் பிசகாது நீதி செலுத்தினவர். தான் அறியாமற் செய்த ஒரு பிழைக்காகத் தனது கையை வெட்டிக் கொண்ட **பொற்கைப் பாண்டியனைப்** பார்மின்! ஒரு கன்றின் உயிரை அறியாமற் கொன்றதற்குத் தன் மகனைத் தேர்க்காலில் பலியிடத் துணிந்த **மனுநீதிச் சோழன்** பெருமை யென்னே! நம் தமிழ் மன்னர் செய்துள்ள ஏராளமான தான தருமங்கள், இன்றும் கோயில்கள் பட்டயங்கள் சாசனங்கள் முதலியவற்றில் விளங்குகின்றன. இவ்வாறு பெரும் புகழ் பெற்ற மன்னர், தமக்குச் சரித்திரங்கள் எழுதுவதுகூட அகந்தையென நினைத்து, கடவுளுக்கும் மனச்சாட்சிக்கும் பொதுவாக நீதிசெலுத்திக் குடிகளின் நன்மையே தமது நன்மையெனக் கருதி தமது இறுதி நாளை இறைவனடியில் அன்புமலராக வைத்துச் சென்றனரெனின், அவர் பெருமையை எவ்வாறு புகழ்வோம்!

அக்காலத்தில் தமிழ் நாட்டில் வீரமும், வீரப் பயிற்சியும் சர்வ சாதாரணமாயிருந்தன: வில்லும் வாளும், வளரிக்கம்பும், சிலம்பமும், கதையும், தமிழ் மறவர்கையில் விஷ்ணுச் சக்கரம்போல் ஆடும். பாண்டியன் மீன்கொடி, கடல்வாணிபச் சிறப்பைக் காட்டியது. சோழர் புலிக்கொடி வீரத்தைக் காட்டியது; சேரர் விற்கொடி போர்த்திறன் காட்டியது. போருக்குச் செல்லும் பாண்டிய வீரர் வேம்புமாலை யணிவர். தமிழர் படைச் செருக்கையும் வீரப் பெருக்கையும் திருவள்ளுவர் வெகு அழகாகக் காட்டியுள்ளார்:

"என்னைமுன் நில்லன்முன்! தெய்விர் பலர்என்னை
முன்னின்று கன்னின் றவர்!

"வாராதீர் என்தலைவர் முன்னே; பலர் என் தலைவர் முன்னின்று எதிர்த்துத் தோற்றனர்; அவர் புதை குழிமேல் நட்ட கல்லே இப்போது இருக்கிறது' என்று விம்முகிறது தமிழர் வீரச்செருக்கு! இப்போது கூட, 'கிட்டவந்தால், குழியைத் தோண்டிப் புதைத்து, மேலே கல்லூன்றுவேன்' என்னும் சொல் வழக்கிலிருக்கிறது.

"கான முயலெய்த அம்பினில், யானை
பிழைத்தவேல் ஏந்தல் இனிது" (திருக்குறள்)

முயலைக் குறிதப்பாது எய்து ஏந்திய அம்பைக் காட்டிலும், யானையை எய்து தப்பிய வேலை யேந்துதல் பெருமைதான். அதாவது மெலிந்தவனை எதிர்த்து வெல்வது பெரிதன்று; நம்மைவிடப் பலசாலியான முரட்டுப் பகைவனை எதிர்க்க வேண்டும். எறும்பை எறும்பு நசுக்குவது பெரிதன்று; சிங்கத்தை எதிர்க்க வேண்டும் என்றான் தமிழ் வீரன். **சுக்ரநீதி, காமந்தகீயம், சாணக்கியன் அர்த்த சாஸ்திரம்** முதலியன கூறும் கூறியிருக்கும் அரசியலும், போரியலும் தமிழர் அரிச்சுவடியிற்கூடக் காணப்படும். வாழ்விற்கு அடிப்படை தருமம் என்பதைப் பளிச்செனக் குறிக்கவே, ஔவைப் பிராட்டி, "**அறஞ்செய விரும்பு**" என்று மொழிந்தாள். அகரம் எல்லா ஓசைக்கும் முதலாயிருப்பதுபோலவே, அறம் எல்லாச் செயல்களுக்கும் முதல் என்க. "இயல்வது கரவேல், ஒப்புர வொழுகு, இணக்கமறிந்திணங்கு, மண்பறித் துண்ணேல், ஔவியம் பேசேல், கிழமைபட வாழ், கீழ்மை யகற்று, கெடுப்ப தொழி, கைவினை கரவேல், கொள்ளை விரும்பேல், சக்கர நெறிநில், சுளிக்கச் சொல்லேல், தக்கோனெனத் திரி, தூக்கி வினை செய், தேசத்தோடொத்து வாழ், தோற்பன தொடரேல், நாடொப்பன செய், வீடுபெற

நில், பெரியாரைத் துணைக்கொள், மாற்றானுக்கிடங் கொடேல், முனைமுகத்து (சும்மா) நில்லேல், வாதுமுற் கூறேல், ஊருடன் கூடிவாழ், வேண்டி வினை செய், ஒன்றுரைத் தேறேல், ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும், வீரன்கேண்மை கூரம்பாகும், ஊக்க முடைமை ஆக்கத்திற்கழகு" முதலிய சுருதிமொழி கள் எவ்வளவு பொருட்செறிவுள்ளன!

"கூற்றுடன்று மேல்வரினும் கூடி யெதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை"

என்னும் வள்ளுவர் வாக்கே, தமிழ் வீரர் படை யூற்றத்தை விளக்கும்.

இத்தகைய வீரமரபினரை ஆண்ட பாண்டிய மன்னரின் வெற்றிப் பெருமையைச் சங்க நூல்களில் ஏராளமாகக் காணலாம். **"போரெனிற் புகலும் புனைகழன் மறவர்,"** அஃதாவது போரென்றால் ஆனந்தக் கூத்தாடும் வீரக் கழலணிந்த போர்வீரர் தமிழர், போர்க் காட்சி யைக் கண்டதும் வீரன் தோள்கள் விம்முகின்றன. மழைக்கால மேகங்கள் பரந்துள்ளன; அதன்கீழ் நெற்பயிரைக் கொத்தி, மேலே எழுந்து கூட்டமாகப் பறவைகள் பறக்கும். அது போன்றதாம், மன்னன் படைத்திரள் நடப்பது. அந்தப் படையில் எதிரியைக் கொல்லும் யானைகள் நெருங்கியுள்ளன. தோள்வலி படைத்த வீரர் கூட்டம்; நெடிய தேர்கள்; இவற் றிற்குமேல் கொடிகள் ஆடுகின்றன. இக்காட்சி இன்பந்தருகிறது. இக்காலப் பெற்றோர்கள் தம் பிள்ளைகளைக் காற்றுப்படாமல் வளர்க்க விரும்புகிறார் கள். பள்ளிக்கூடங்களில் எப்போதாயினும் பையன் களை இயற்கைக் காட்சிகள் காட்ட வெளியுலா நடத்தினாலும் (**Excursions**), உபாத்தியாயருக்கு ஓர் அஷ்டோத்திரம் வசவு நடக்கிறதைச் சில இடங்களில்

யார்க்கிருேம்! அதற்குத் தக்கபடிதான் செல்லக் குழந்தைகளும் அனிச்சப் பூக்களாயிருக்கின்றன! அக்காலத் தமிழர், தங்கள் சிறுவரை வீரமாயிருக்கப் பயிற்றினர்; வீரமற்றவனைச் சாரமற்றவன் எனக் கருதினர். கிரேக்கர், உரோமர், அஸ்ஸிரியர், ஜெர்மானியர் போன்று, பண்டைத் தமிழர் வீரஞ் செறிந்திருந்தனர்! ஒரு பழந் தமிழ்தாய், "நாட்டிற்போர் நடக்கிறதே! உன் மகன் எங்கே?" என்று தனது தோழி கேட்டதற்கு, விடையளிக்கிருள் பாருங்கள்:

"..............................என் மகன்
யாண்டுள னாயினும் அறியேனேரும்;
புலிசேர்ந்து போகிய கல்லளைபோல
ஈன்ற வயிரோ இதுவே
தோன்றுவன் மாதே போர்க்களத் தானே!"

அஃதாவது, "என்மகன் எங்கு இருக்கிருனே தெரியவில்லை. ஆனல் ஒன்று; எப்படியாயினும் அவன் போர்க்களத்திற்கு வந்துவிடுவான். ஏனெனில் இந்தக் குகையன்றோ (தன் வயிற்றைக் காட்டி) அந்தப் புலியைப் பெற்றது" என்றுள்! அஃதாவது, "என் வீர ரத்தத்திற்குப் பிறந்தபுலி, சண்டைக்குப் பயந்து ஓடி ஒளியும் பேடியல்லன்; போர் முரசம் கேட்ட உடனே எங்கிருந்தாயினும் வந்து விடுவான்" என்ருள். தமிழர் சமயம் தருமவீரம்! தமிழர் கடவுள், அரக்கரை வென்ற **வேல் முருகன்!** இந்த வீரக்கனல்மீது பூத்த சாம்பலை ஊதி யெறிந்து, தமிழ் மரபு மீண்டும் அஞ்சாது விழித்தெழுந்து, தாயின் புகழை விளக்குக! 'வீரம், வீரம், வீரம்' என்று தமிழர் உயிர்க்கவேண்டும்!

**சேர சோழ பாண்டியர்** மூவரும் வீரக்கலையின் மூன்று சுடர்களாக விளங்கினர். சேரருள் **செங்குட்டுவன்** வரலாறு புகழ்பெற்றது; சங்ககாலச் சோழருள்

**கரிகாலன்** புகழ்பெற்றவன். இவ்விருவர் வரலாற்றையும் தமிழர் வீரப் பெருமையையும் **சிலம்புச் செல்வத்தில்** காண்க. புகழ்பெற்ற பிற்காலச் சோழரையும் அவர் காலத்திருந்த புலவரையும் இங்கே குறிப்போம்:

| | சோழன் | காலம் | செயல் | அக்காலப் புலவர் |
|---|---|---|---|---|
| 1 | பரகேசரி விஜயாலயன் | 850– 80 | போர்வெற்றி | மாணிக்கவாசகர் |
| 2 | இராஜகேசரி ஆதித்யன் I | 880– 907 | பல்லவரை வென்றான் | கம்பர் |
| 3 | பராந்தகன் குலோத்துங்கன் | 907– 46 | மதுரையை வென்றான் | அமிர்தசாகரர் நாதமுனி |
| 4 | சுந்தரன் பராந்தகன் II | | வண்மையன் | மாதவபட்டர் |
| 5 | ஆதித்ய கரிகாலன் | | துரோகிகள் கொன்றனர் | நம்பி யாண்டார் நம்பி |
| 6 | உத்தம சோழன் | 970– 985 | சிவாலயங்கள் கட்டினான் | பல புலவர் |
| 7 | இராஜ ராஜன் (அருண்மொழி) | 985–1012 | தரை—கடற் போர்கள், தஞ்சை பிரகதீசர் கோயில் | கருவூர்த் தேவர், பட்டினத்தார், திருமூலர், இளம்பூரணர். |
| 8 | இராஜேந்திர சோழதேவன் அனபாய குலோத்துங்கன் II | 1012–1032 | இந்தியாவின் பெரும் பகுதி, சீயம், மலேயா, சாவகம், ஆண்டான்—தேவாரப் பிரியன். | அலங்காரம் எழுதிய தண்டியார், சேக்கிழார். |

| | சோழன் | காலம் | செயல் | அக்காலப் புலவர் |
|---|---|---|---|---|
| 9 | இராஜாதி ராஜன் | 1044– 52 | கம்பிலியில் ஜயஸ் தம்பம் பரணி கொண்டது. | |
| 10 | இராஜேந்திர சோழன் | 1052–1061 | துங்கபத்திரை வரை வென்றான் | |
| 11 | இராஜமகேந்திரன் | 1061–1063 | | |
| 12 | வீரராஜேந்திரன் விக்ரம சோழன் | 1063- 70 | தென்னடு முழுதும் ஆண்டான், கூடல் சங்கமத்துப் பரணி கொண்டான் | வீரசோழியம் புத்த மித்திரன் |
| 13 | அதிராஜேந்திரன் | 1070–1074 | கொலையுண்டான் | |
| 14 | இராஜேந்திரன் குலோத்துங்கன் | 1074–1118 | | கலிங்கத்துப் பரணி செயங்கொண்டார் |
| 15 | விக்ரம சோழன் | 1118-1135 | தமிழகம் முழுதும் ஆண்டான் | ஒட்டக்கூத்தன் (விக்ரம சோழனுலா பாடினன்) புகழேந்தி |
| 16 | இரண்டாங் குலோத்துங்கன் (எதிரிலிப் பெருமாள்) | 1133–1146 | ,, | |

| | சோழன் | காலம் கி. பி. | செயல் | அக்காலப் புலவர் |
|---|---|---|---|---|
| 17 | இரண்டாம் ராஜராஜன் | 1146–1162 | ,, | ஒட்டக்கூத்தன் இராஜ ராஜனுலா, உத்தரகாண்டம் பாடினன். |
| 18 | நல்லமன் இரா ஜாதி ராஜன் | 1172–1178 | ,, | மெய்கண்டார் |
| 19 | மூன்ரும் குலோத்துங் கன் | 1178–1216 | ,, | நன்னூல் பவணந்திமுனிவர் நேமி நாதம் குண வீரபண் டிதர் |
| 20 | வீர ராஜேந்திர திரிபுவன வீர தேவன் | இவனுக்குப் பிறகு சோழவரசு வீழ்ந்தது | | |

குறிப்பு: இக்கால அட்டவணை தற்கால ஆராய்ச்சியாளர் சிலர் முடிபுகளே; இம்முடிபுகளினின்று வேறுபடுவோரும் உண்டு; இங்கே எனக்குக் கிடைத்ததைச் சேர்த்திருக்கிறேன். வேறு முடிபுகளிருப்பின் சீர்தூக்கி ஆராய்ந்து பிடித்ததைக் கொள்க—

## ௬. பாண்டி நாட்டுக் கதை

இராமநாதபுரம், மதுரை, திருநெல்வேலி மூன்றும் தமிழ் க்ஷத்ரியரான வீரமறவர் நிலம். மதுரையைப் பல பாண்டிய மன்னர் ஆண்டனர். நிலந்தரு திருவிற் பாண்டியன் (கி.மு. 350), பெருவழுதி (கி.மு. 25), உக்கிரப் பெருவழுதி, நெடுஞ்செழியன் (கி. பி. 50-75) (இவன் காலத்தில் குறள் அரங்கேறியது; இவனே இமய மலையில் மீன் கொடி எழுதினன்), வெற்றிவேற் செழியன் (கி. பி. 75-90), நெடுஞ்செழியன்-II (இவன்

இளம் வயதில் ஏழு மன்னரைத் தலையாலங்கானப் போரில் வென்றான்; **மாங்குடி மருதனார்** இவ்வீர வாலிப மன்னனை, "**மதுரைக் காஞ்சி**"யில் சிறப்பித்துள்ளார்; நக்கீரரும், **நெடு நல் வாடை**யில் இவனைப் புகழ்கிறார்), நன்மாறன் முதலியோர், இவர்களுக்குப் பின்வந்த பாண்டிய மன்னர், பல்லவருடனும் சளுக்கியர்களுடனும் போராடினர். சளுக்கிய மன்னன் புலிகேசி-II பல்லவரை எதிர்க்கத் தமிழ் வேந்தர் துணையை நாடினான்; ஆனால், சளுக்கியர் பாண்டி நாட்டை நெருங்க வில்லை. பல்லவர் காஞ்சியில் ஆண்டனர். பாண்டியர் எப்போதும்போல் சுதந்தரமாயிருந்தனர். கி.பி. 750-ல், நந்திவர்ம பல்லவன் பாண்டியனை எதிர்த்தான்; அதனால், பாண்டிநாடு அடிமைப்படவில்லை; பல்லவர் ஆட்சிதான் ஓய்ந்தது. பிறகு, கங்கைப் பல்லவர் கிளம்பிக் காஞ்சிபுரத்தில் ஊன்றிக்கொண்டு சோழநாட்டிற் பரவினர். இவர்களைப் பாண்டிய மன்னன் கும்பகோணத்தருகே வென்றான். இக்காலம் பாண்டிநாடு வீரப்பொலிவுற்றிருந்தது. பகைவர் அஞ்சினர். பாண்டி மன்னர், சேனன்-I காலத்தில் (கி. பி. 846-866) இலங்கையைப் படையெடுத்ததாக **மஹா வம்சம்** கூறுகிறது.

சோழன் பராந்தகன்-I (கி. பி. 906—946) தான் முதன் முதல் வலிய படைகொண்டு பாண்டியனை வென்றான். சுசீந்திரம் முதல் காளஹஸ்தி வரை இவன் ஆட்சி செலுத்தியதாகச் சொல்லுவர். இவன் மதுரையை வென்றதாகச் சிலாசாசனங்கள் விளக்குகின்றன. ஆனால், வல்லனுக்கு மல்லன் வந்தான். ஐதராபாத்து பிராந்தியத்தினின்று வந்த ராஷ்டிரகூடர் அரக்கோணத்தில் சோழரை முறியடித்தனர். உடனே **வீரபாண்டியன்** கிளம்பினான். ஆதித்திய **கரிகாலசோழனை** வென்று சுதந்தரக்கொடி நாட்டினான்.

விட்டானு சோழன்? இராஜராஜ சோழன்-I (985—1012) படைத்திரள்கொண்டு பாண்டிநாட்டை வென்று, "**இராஜராஜ பாண்டியநாடு**" என்று அழைக்கும்படி செய்தான்! இவனது நாணயங்கள் மதுரையிலும் திருநெல்வேலியிலுங் கிடைக்கின்றன. இராஜராஜன், தமிழ்நாட்டு நெப்போலியன், ஆனால், விதிவசத்தால் தோற்ற நெப்போலியன் அவன் அல்லன். இராஜராஜன் பெரிய சாம்ராஜ்யத்தை வீரத்தால் வென்றவன். அதன் எல்லை வடக்கு ஒரிசா, தெற்கு இலங்கை, மேற்கு குடகு, கொல்லம்; இவன் இலங்கை, மலயா, ஜாவா, பர்மா இவற்றிற் சில பாகங்களையும் வென்றான். இப்போது ஐதராபாத்தில் (கல்யாணி) இராஷ்டிரகூடரை விரட்டியடித்துச் சளுக்கியர் புகுந்தனர். இவர்களை நமது தமிழ்—நெப்போலியன் புறங்கண்டான்! பலமும், புகழும், அரசும் வலுத்த முதலாவது இராஜராஜன் காலத்தில் பாண்டிய மன்னர் கொஞ்சம் சாதுவாக அடங்கியிருந்தனர். சோழன் **இராஜாதிராஜன்-I** (கி. பி. 1012-32) பட்டத்திற்கு வந்தான். பாண்டியனும், வீரகேரளனும் சிங்களருடன் கிளம்பி அவனை எதிர்த்தனர். சிங்கள மன்னன் **மானாபரணன்** போரில் இறந்தான்; வீரகேரளன் சிறைப்பட்டு உயிரிழந்தான்; சுந்தர பாண்டியன் தலைவிரி கோலமாக ஓடிப்போனான். சிலகாலம் பாண்டியர் தொல்லையில்லை. வீரராஜேந்திர சோழன் காலத்தில் கி. பி. (1063—70) பாண்டியர் மீண்டும் புரட்சி செய்தனர். 'வீரராஜேந்திரன்' பாண்டிமன்னனை மதயானையின் காலடியில் வைத்து நசுக்கினான். பாண்டி நாட்டைத் தன் மகனுக்கீந்து "**சோழ-பாண்டியன்**" என்னும் பட்டமும் சூட்டினான். சிலகாலம் கிளர்ச்சியில்லை; குலோத்துங்க சோழன் காலத்தில் சேர பாண்டியர் மீண்டும் கிளம்பினர்.

குலோத்துங்கன் கிளர்ச்சியைப் பலமாக எதிர்த்து அடக்கி, மன்னார், பொதிகை, குமரிமுனை, கோட்டாறு முதலிய இடங்களைப் பிடித்து, ஆங்காங்கே பலமான படைகளைக் காவல் வைத்தான். சில ஆண்டுகள் அமைதி; இராஜாதிராஜ சோழன் (கி. பி. 1162—78) காலத்தில் மீண்டும் கலகம். பாண்டி நாட்டை ஆளப் பராக்ரமன், குலசேகரன் இருவரும் போட்டி போட்டனர். மதுரையில் குலசேகரன், பராக்ரமனை முற்றுகை போட்டான்; பராக்ரமனுக்குச் சிங்கள மன்னன் துணைசெய்ய இசைந்தான். ஆனால், அவன் வருமுன் குலசேகரன் வெற்றிபெற்று பராக்ரமனைக் குடும்பத்துடன் மேலுலகிற்கு அனுப்பிவிட்டான். இருப்பினும், குலசேகரனை வென்று பராக்ரமன் சந்ததியாருக்குப் பட்டம் கட்டச் சிங்களமன்னன் தனது சேனைத் தலைவன் இலங்காபுர தண்டநாதனை அனுப்பினான். பராக்ரமன் மகன் வீரபாண்டியனை அரியணை யேற்றப் பெரும் போர் நிகழ்ந்தது. அதில் தோற்ற குலசேகரன் புதுக்கோட்டைத் தொண்டைமான் துணையை நாடினான்; சோழரின் உதவியையும் பெற்றான்; இருவர் பலமும் கொண்டு, மீண்டும் பொன்னமராவதியில் பகைவரை எதிர்த்தான்; மீண்டும் தோற்றான். இலங்காபுரன் வெற்றிமுரசடித்து, வீரபாண்டியனுக்குப் பட்டம் கட்டினான். மீண்டும் மூன்று முறை தொண்டைமான் துணைகொண்டு குலசேகரன் போர்புரிந்தான்! மீண்டும் தோற்றான். முடிவில் வீரபாண்டியனை உறுதிவாக அரியணையில் அமர்த்தி இலங்காபுரன் தாய்நாடு திரும்பினான். சண்டை அத்துடன் ஓயவில்லை: குலசேகரன் மகன் விக்ரம பாண்டியனுக்காகச் சோழன் குலோத்துங்கன் III கி. பி. (1178—1216) பரிந்துவந்து, வீரபாண்டியனையும் சிங்களச் சேனையையும் முறியடித்தான். விக்ரம

பாண்டியனுக்கு அரியணை கிடைத்தது. அதுமுதல் பாண்டிய பரம்பரை மீண்டும் கிளைத்து, மதுரையை ஆண்டது. இந்நிகழ்ச்சிகள் பன்னிரண்டாம் நூற்றுண்டில் நடந்தன. இப்பாண்டியரில் 15 பேரின் விபரம் சாசனங்கள் மூலம் நமக்குக் கிடைத்துள்ளது:

1. ஜடாவர்மன் குலசேகரன் (1190-1214)
2. மாறவர்மன் சுந்தரபாண்டியன் I (1216 – 35)
3. ஷை ஷை II (1238 – 51)
4. ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் I (1251 – 61)
5. வீரபாண்டியன் (1262 – 67)
6. மாறவர்மன் குலசேகரன் I (1268–1308)
7. ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் II (1268 – 90)
8. மாறவர்மன் குலசேகரன் II (1314 – 21)
9. மாறவர்மன் பராக்ரம பாண்டியன் (1334 – 52)
10. ஜடாவர்மன் பராக்ரம பாண்டியன் (1357 – 72)
11. ஜடாவர்மன் பராக்ரம பாண்டியன் அரிகேசரிதேவன் (1422 – 61)
12. ஜடிலவர்மன் பராக்ரம பாண்டிய குலசேகரன் (1470 – 99)
13. ஜடிலவர்மன் ஸ்ரீவல்லபன் (1534 – 37)
14. மாறவர்மன் சுந்தரபாண்டியன் III (1537 – 55)
15. ஜடிலவர்மன் ஸ்ரீவல்லப அதிவீரராமன் (1562 – 67)

இப்பெயர்களில் வீரம் அதிவீரம், பராக்ரமம், அதிபராக்ரமம் என்ற சொற்கள் வீறிடுகின்றன! இதனால், இம்மன்னர் காரசாரமான வீரத்தை எவ்வளவு ஆவலாக விரும்பினர் என்பது வெளிப்படையாகத் தெரிகிறது. அப்படியே அவர்கள் வரலாற்றைக் கேட்டாலும் வீரச்சிலிர்ப் பெடுக்கும்.

இதற்குள் சோழநாடு, உட்பகை மிஞ்சி ஒற்றுமை குலைந்து வலுவிழந்தது. கோப்பெருஞ்

சிங்கம் என்னும் சோழச் சிற்றரசன், சோழமண்டலத்து இளவரசனைத் தூக்கிச் சென்முன். ஹாய்சாலப் பல்லவர் உதவியால் சோழன் உயிர் தப்பினுன். இது தான் சமயம் என்று பாண்டிய மன்னர் சுதந்தரக் கொடி நாட்டினர். மாறவர்மன் சுந்தர பாண்டியன் —I, சோழ மண்டலத்தை வென்று அங்கே மீனக் கொடியை நாட்டினுன். சிலாசாசனங்களாலும் நாணயங்களாலும் இவ்வெற்றி உறுதியாகிறது, மைசூர் ஹலபேடில் நிலேத்து ஆண்ட ஹாய்சால வீரர், சோழநாட்டைப் படையெடுத்து வென்றனர். அவர்கள் ஸ்ரீரங்கத்தில் ஊன்றிக் கொண்டனர். அவர்களே ஸ்ரீரங்கத்தைக் கட்டினர். இதன்பின் பாண்டியர் சோழமண்டலத்தை ஆண்டதாகத் தெரியவில்லே. **ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் I** அசகாய சூரன். அவன் இலங்கையைப் படையெடுத்து வென்று "**இரண்டாம் இராமன்**" என்னும் பட்டம் பூண்டான்; ஹாய்சால மன்னனுன சோமேஸ்வரனைப் போரில் வீழ்த்தினுன்; நெல்லூர்வரை படை நடத்தி வீரப் புகழ் பெற்முன். மாறவர்மன் குலசேகரன்–1 புகழ் பெற்றவன். அவனே இஸ்லாமியர், "**லேஸ்தேவர்**" என்றனர்.

ஜடாவர்மன் சுந்தரபாண்டியன்—11 காலத்தில் **மார்க போலன்** தமிழ் நாட்டிற்கு வந்து, தமிழர் நாகரிகத்தையும் மன்னர் சிறப்பையும் வியந்து புகழ்ந்து நல்ல குறிப்புகள் எழுதினுன்: "பாண்டிநாடு, கல்வி, செல்வம், நாகரிகம், அழகு, வளமை இவற்றிற் சிறந்தோங்கியது; கொல்லத்திலிருந்து நெல்லூர் வரையில் அதன் எல்லே விரிந்தது. இந்நாடே உலகில் மிக்க அழகும் சிறப்பும் வாய்ந்தது. இதன் மன்னர் மங்கோலியமன்னர் குப்லேகானுக்குத் (கி. பி. 1286-ல்)

தூதரை அனுப்பி நட்புறவாடியயதாகச் சீனர் வரலாற்றில் காண்கிறது. இக்காலம் முகம்மதியர் தென்னிந்தியாமேல் கண்பாய்ச்சினர் அவர்களுடன் பாண்டியன் நேசமாகவே யிருந்தான்; இஸ்லாமியரைத் தனது அமைச்சராகவும் கொண்டான். மதுரை, வாணிகம் பெருத்த ஊர். அதைச் சேர்ந்த காயல் பட்டிணத்தில் சுறுசுறுப்பான கப்பல் வாணிபம் நடந்தது. பாண்டி மன்னர் கடல் வாணிகத்தை மிகவும் போற்றி வளர்த்தனர். மேற்கிலிருந்து வரும் கப்பல்கள் காயல்பட்டணத்தில் தங்காமல் போவதில்லை. இந்தியா சீன மேனடு களின் சரக்குகளெல்லாம் இங்கு வந்து குவியும். சுதேசிகளின் சாமான்கள் ஏராளமாக ஏற்றுமதியாகிப் பொன் குவியும். "இந்நாடே இந்திய வாணிகத்தின் திறவுகோல்" என்று இவ்வாறெல்லாம் மார்கபோலன் பாண்டிநாட்டைத் தக்கபடி புகழ்ந்து எழுதியிருக்கிறன். சுந்தரபாண்டியனை "ஸெண்டர் பண்டி" (Sender Bandi) என்று மார்கபோலன் குறிக்கிறன்.

அரசுஞ் செல்வமும் ஒருவழி நிற்பதில்லை.!

14ஆம் நூற்றுண்டில் தமிழர் சுதந்தரம் குலைந்தது. பாண்டிநாட்டின் பட்டத்திற்கு இருவர்போட்டி போட்டனர்: ஒருவர், தில்லிசுல்தான் அல்லாவுதீன் உதவியைநாடினர். சுல்தான் மாலிற்கபூரைத் தெற்கே அனுப்பினன். கி.பி.1310-ல், மாலிக்கபூர் தென்நாட்டைத் தவிடு பொடி யாக்கினன், எங்கும் தீ மூட்டி மதுரையைப் பொட்டலடித்தான் (மீனட்சி சுந்தரேச்வரர்சந்நிதிதான் பாக்கி) இராமேஸ்வரத்தில் ஒரு மசூதி கட்டினன்; வந்த வழியே போய்ச்சேர்ந்தான். இந்தப் படையெடுப்பு, பாண்டியன் ஆட்சியைச் குலைத்தது. உள்ளொற்றுமையின்றி அன்னியருக்கு இடங்கொடுத்தே நமது நாட்டினர் கெட்டனர்.

பாண்டிய மன்னர் தொடர்ந்து ஆண்டனரேனும், பழந்திறமையும் சிறப்பும் அவரிடம் இல்லை. கி. பி. 1313—ல் கேரள மன்னன் முற்றுகைபோட்டு மதுரையைக் கைப்பற்றிக் காஞ்சிபுரம் மட்டும் படை நடத்தினன்.சேரனைக் கவிழ்க்கத் துருக்கர்வந்தனர். திருச்சி, தென்னாற்காடு, மதுரை மூன்றும் துருக்கர் கைக்கேறின. 48 ஆண்டுகள்அவர் அமுல் நடந்தது. அதன் பின் 1365—ல், ஹம்பியைத் தலைநகராகக் கொண்டு விஜயநகர ராயர் கிளம்பி, இரண்டு நூற்றாண்டுகளுக்குத் துருக்கர்படை வெள்ளத்தைத் தடுத்து, சுயராஜ்யக் கொடியைக் கம்பீரமாகப் பரக்கவிட்டார். கம்பன உடையார் என்ற விஜயநகர மன்னன்' துருக்கரிடமிருந்து மதுரையை வென்று தனதாக்கினன். அத்துடன் தமிழர் ஆட்சிபோய்த் தெலுங்கர் தமிழகத்தில் வேரூன்றிக்கொண்டனர். கம்பனன் 48 ஆண்டுகளாக அடைபட்டிருந்த மதுரைக் கோயிலை மீண்டும் உயிர்ப்பித்து, சந்நிதி விளங்கச் செய்தான். கம்பனன் பல சிவ, விஷ்ணு ஆலயங்களைக் கட்டினன்.

மீண்டும் பாண்டி வம்சமே மதுரையை விஜயநகருக்கு உட்படுத்தி ஆண்டது. வீரமறவர் துணையாலேதான், கம்பனன் மதுரையைத் துருக்கரிடமிருந்து வென்றான். விஜயநகர மன்னர் வீரமறவரின் போர்த்திறனை வியந்து பயன்படுத்திக் கொண்டனர். விஜயநகரமன்னரான கிருஷ்ண தேவராயர் வெகுதிறமையுடன் தமது சாம்ராஜ்யத்தை ஆண்டார். 1532-ல் திருவாங்கூர் மன்னன் பெரும்படைகொண்டு விஜயநகரைத் தாக்கினன்; அப்போது, பாண்டியனும் சுயேச்சை பெற முயன்றான். விஜயநகர மன்னர் அச்சுத ராயர் உடனே ஒரு பெருஞ்சேனை நடத்திச்

சேரன் பாண்டியன் இருவரையும் அடக்கி, வெற்றித் தூண் நாட்டினார்; சேரனிடம் கப்பம் வாங்கினார்; பாண்டியன் மகளை மணம் புரிந்தார். அதுமுதல் விஜயநகரப் பிரதிநிதியான **நாயக்கர் ஆட்சி**யில் மதுரை இருந்தது. இக்காலம் மதுரையில் கிறிஸ்துவப் பாதிரிமார்கள் மதப் பிரசாரம் செய்தனர். அவர்கள் அப்போது நடந்த நிகழ்ச்சிகளைக் குறித்து எழுதிய கடிதங்கள் சரித்திர ஆராய்ச்சிக்குப் பெரிதும் பயனுகின்றன.

1553-ல் வித்தல்ராஜன் விஜயநகர இராஜப்பிரதிநிதியாக மதுரையை ஆண்டான். அப்போது பெருக்குப் பாண்டிய மன்னன் அரியணை வகித்தான். அவனையும் கவிழ்க்கச் சோழன் படையெடுத்தான். பாண்டியன் விஜயநகர மன்னனை அடைந்தான். விஜயநகரம் **நாகம நாயக்கனை** அனுப்பியது. நாகமன் சோழனை வென்று, தானே மதுரையைக் கைப்பற்றினன்; மண்ணாசை விடுமா? திடீரென்று விஜயநகரை மீறித் தன்னரசு நாட்டிக் கொடிபோட்டான்; புரட்சி செய்தான் நாகமன். விஜயநகர் ராயருக்குக் கோபம் பொங்கியது; ஒரு பெரிய சபையைக் கூட்டினார்; "இந்தப் புரட்சிக்கார நாகமன் தலையை யார் எனக்குக் கொண்டுவருவார்கள்?" என்று கர்ஜித்தார். "நான்" என்று ஒரு வீரவாலிபன் முன்வந்தான். **விசுவநாத நாயக்கன்**, நாகமன் பெற்றபிள்ளை — என்னே வியப்பு! அரசன் சற்றே தயங்கினன்; பிறகு படை கொடுத்து அனுப்பினன். விசுவநாதன், தந்தை நாகமனை முறியடித்துச் சிறைசெய்தான்; ஆனால் கொல்லவில்லை. இராயரிடம் மன்னிப்பு வாங்கிக்கொடுத்தான். இவ்வாறு இந்த நாயக்க வீரன், மன்னனையும் பணிந்து தந்தையையும் காத்தான். விசுவநாதன்

பாண்டிய மன்னனை அரியணையேற்றி, அரசியல் விவகாரங்களைத் தனது மேற்பார்வையில் நடத்தினன். இது நிகழ்ந்தது கி. பி. 1559-ல். அதுமுதல் மதுரையில் நாயக்கர் அமுல் பரம்பரையாக நடந்தது.

நாயக்கர் திறமையுடன் ஆண்டனர். **விசுவநாத நாயக்கன்** (1559–1563) மதுரைக் கோட்டையைப் புதிதாக உறுதியாகக்கட்டினன்; நகரை அழகு செய்தான். பேரணை, சிற்றணைகளை அவனே முதலில் எழுப்பிக் கிராமங்களுக்கு வைகை நீர்ப்பாசனம் வகுத்தான்; அவன் ஆட்சி முறையைப் பொது நலத்திற்கேற்றபடி திறமையாக அமைத்தான். இத்தனைக்கும் அவனுக்கு அருந்துணை புரிந்து ஆட்சியை வெற்றி பெறச் செய்த அமைச்சர், **அரியநாயக முதலியார்** எனும் வேளாள குலதிலகர். இவர் எளிய குடும்பத்திற் பிறந்து, தமது திறமையால் விஜயநகர் சமஸ்தானத்தின் நன்மதிப்பைப் பெற்றோங்கினர்; இவரே பாண்டி நாட்டை 72 பாளையங்களாக வகுத்து, தக்க வீரர்கள் காப்பில்வைத்து, அவர்களைக்கொண்டு படைவலி பெருக்கிய அரசியல் நிபுணர். இப்பாளைய வீரரில் தமிழருடன் தெலுங்கரும் கலந்திருந்தனர். நாட்டின் அமைதிக்கும், வளத்திற்கும் இந்தப் பாளையவீரர் பலவாறு நல்லுதவி செய்துவந்தனர். இப் பாளையங்களில் பல இன்னும் உள்ளன. அனைவரும் அரியநாயக முதலியாரைப் பயபக்தியுடன் பணிந்தனர். மதுரைக் கோயிலிலுள்ள ஆயிரக்கால் மண்டபமும் இவராலேயே கட்டப்பட்டது. குதிரைமேல் சவாரி செய்வதாக இவர் உருவம் ஆங்கே இன்றும் விளங்குகிறது. இன்னும் அவ்வுருவிற்கு மக்கள் மாலைசூட்டி மரியாதை செய்கின்றனர். நாயக்கர் ஆட்சிக்கு முதலியார் தமது அறிவாலும், ஆற்றலாலும் பெருந்துணை

புரிந்தார். கி. பி. 1600-ல் இவர் இறந்தபோது, நாடெங்கும் கண்ணீர் பெருகியது.

விசுவநாத நாயக்கர் திருச்சிக் கோட்டையையும் தனதாக்கினர். தஞ்சாவூரும் அவர் வசப்பட்டது. அவர் திருச்சி, ஸ்ரீரங்கம் இரண்டையும் அழகுறப் புதுக்கினர். அக்காலம் இராமேச்சுவரம், ஸ்ரீரங்கம் முதலிய தலங்களுக்குப் போகும் வழியேயிருந்த கள்ளர் பயத்தை நீக்கினர். யாத்திரிகருக்குத் தமது வீரர் துணையை யளித்தார். திருநெல்வேலியிற் கிளம்பிய ஐந்து பாண்டியர் கலகத்தை அடக்கி, அந்தக் கோட்டத்தையும் கைப்பற்றி முறையாக ஆண்டார். ஆல்பிரட், பிரடரிக், சந்திரகுப்தன், அக்பர் முதலிய பெரிய மன்னர்த்தொகுதியில் விசுவநாத நாயக்கரைச் சேர்க்கலாம். 1563-ல் அவர் உயிர் நீங்குமட்டும் நாட்டுக்கும், பொது ஜனங்களுக்கும், சலியாது பணி புரிந்தார். அவருக்குப் பின் அவர் மகன் **குமார கிருஷ்ணப்பன்** (1563–73) அரசாண்டான்.

குமார கிருஷ்ணப்பன் 10 ஆண்டுகள் அரியணை வகித்தான். உள் நாட்டில் பாளையக்காரர் கிளம்பினர். அவர் தலைவனை தம்பிச்சி நாயக்கனைத் தலை வாங்கிக் கிளர்ச்சியை அடக்கினன். குமார கிருஷ்ணப்பன் இலங்கையையும் படையெடுத்து வென்றான். அவனுக்குப் பிறகு **கிருஷ்ணப்பன், விசுவநாதன் II**, லிங்கய்யா முதலியோர் ஆண்டனர். பிறகு முத்துக் கிருஷ்ணப்பன் 1595-ல் அரியணை வகித்தான். இவன் பிரயாணிகளுக்கு வேண்டிய பாதுகாப்புகளைச் செய்தான். இராமேச்சுரம் போகும் யாத்ரிகர் கள்ளர்பயம் இல்லாது செல்ல, மறவர் கோமானை **சேதுபதிக்கு** இராமநாதபுரத்தைத் தந்தான். இவன் ஆட்சியில்தான் சேதுபதி சமஸ்தானம் தொடங்கியது. இவன் விவரம்

'புதுக்கோட்டைக் குறிப்புகளில் வரும். முத்துகிருஷ்ணப்பனுக்குப் பிறகு முத்துவீரப்பன் ஆண்டான்.

இப்போது (1565) தலைக்கோட்டைப் போரில் முகம்மதியர் விஜயநகர இராஜ்யத்தைக் கவிழ்த்தனர். வடநாட்டைப் பாட்னுப்போர் எவ்வளவு சீர்குலைத்ததோ அவ்வளவு தென்னாட்டைத் தலைக்கோட்டைப் போர் சீர்குலைத்தது. அசோகன், இராஜராஜன், சுந்தர பாண்டியன் ஆண்ட சாம்ராஜ்யங்களுக்குப் பின் மாண்புற்று விளங்கிய விஜயநகரமும் ஒரு நாளில் தகர்ந்தது! அரசும் செல்வமும் ஆற்றோட்டம் போலும்! அத்துடன் விஜயநகரச் சந்ததி குலைந்து, பெனுகொண்டா, சந்திரகிரி, ஆர்க்காடு முதலியவற்றிற்குச் சிதறி யோடியது. மதுரையும் தஞ்சையும் இன்னும் அவர்கள் அதிகாரத்தில் இருந்தன. எனினும் வலிவிழுந்த அரசிற்கு யார் பணிவர்? வந்தான் **திருமலைநாயக்கன்.** நாயக்கர் மரபின் சிங்கம். தான் ஆண்ட 36 ஆண்டுகளில் அவன் அபாரச் செயல்கள் செய்திருக்கிறான். அவன் எல்லையற்ற இடர்களைக் கலங்காது எதிர்த்து வென்றிருக்கிறான். விஜயநகர் வீழ்ந்ததும், மதுரை, தஞ்சை, செஞ்சி, மைசூர் சிற்றரசர்களும், பாளையத் தலைவரும் மூலைக்கு மூலை கிளம்பிக் கலகம் செய்தனர். முகம்மதியர் இதே சாக்கென்று, தெற்கே வலிய படை கொண்டுவந்தனர். இதுதான் சமயமென்று சேதுபதி மன்னன் சுயேச்சாதிகாரம் செலுத்தினன். தலைக்கோட்டைப் போருக்குப் பிறகு தென்னாட்டில் ஒரே கலகமும், சிக்கல்களும், விடிந்தெழுந்தால் அன்னியப்படையின் அக்கப்போர்களும் பெருகி, மனித உயிர் எமகண்டத்திலிருந்தது!

திருமலைநாயக்கர் பெரும் படை திரட்டிக் கோட்டைகளைச் சரியான பாதுகாப்பில் வைத்துப்

பத்திரப்படுத்திக்கொண்டார். தம்கை வலுக்கவே, உடனே விஜயநகரத்தின் ஆதிக்கத்தை மறுத்துச் சுதந்தரக் கொடி நாட்டினர். சந்திரகிரியிலிருந்த விஜய நகர் மன்னரான அரங்க ராயர், 1638–ல் பெரும் படை திரட்டித் திருமலையை ஒடுக்கவந்தார். மைசூர்ச் சிற்றரசன் அவருக்குத் தோள் கொடுத்தான். செஞ்சி, தஞ்சை அரசர்களை விசுவநாதன் தன் பக்கம் வசப் படுத்தினன். அரங்கராயர் செஞ்சிமேல் படை யெடுத்து வந்தார். தஞ்சாவூர் நாயக்கனுக்குக் கிலி பிடித்தது; அவன் விசுவநாதனுக்குக் கொடுத்த உடன்படிக்கையை மறுத்து, அரங்கராயரை நயந்து பணிந்து தப்பிக்கொண்டான். அரசியல் நிபுணனை விசுவநாதன், இராயர் சீமையை மீண்டும் முற்றுகை போடும்படி கோல்கொண்டா சுல்தானைத் தூண்டினன். தன் சீமை பிழைத்தால் போதுமென்று தெற்கேவந்த அரங்கராயர், வடக்கே போனர். அங்கு முஸல்மான் சேனைவெள்ளம் நின்றது. வேறு விதி யின்றி, மீண்டும் தெற்கே ஓடித் தன்னை எதிர்த்த திரு மலையைத் துணைவேண்டினர் அரங்கராயர்; பலிக்க வில்லை; அவர்பாடு திரிசங்கு சுவர்க்கமாகிவிட்டது. நாடிழந்து, நகரிழந்து, முடிவில் தெய்வாதீனமாகத் தமக்கு நன்றியுள்ள மைசூர் அரசனிடம் போய்ப் புகலடைந்தார். சிம்மம் போன்ற கிருஷ்ணதேவ ராயர் சந்ததி இப்படி அடிமையாயிற்று! காலம் ஆளையும், அரசையும், செல்வத்தையும் எப்படிப் புரட்டியடிக்கிறது பாருங்கள்!

ஆசை அடங்குமா! கோல்கொண்டா சுல்தான் வடக்கே தனது வேலையானதும் செஞ்சியை முற்றுகை போட்டான். புகழேந்தி பாடியிருக்கும் சரித்திர நூலான **தேசிங்கு ராஜன்** கதையினின்று

செஞ்சி முற்றுகையின் வரலாற்றை அறியலாம். தஞ்சாவூர் நாயக்கன் வேட்டை நாயைக் கண்ட முயல் மாதிரி அஞ்சி நடுங்கி, சுல்தானுக்கு இரண்டு சலாம் போட்டுத் தாழ்ந்துபோனான். திருமலைச் சிங்கம் என்ன செய்தது? அவ்வளவு சேனை வெள்ளத்தையும் தனியாக எதிர்க்க முடியாது; பக்கபலமும் இல்லை. கோல் கொண்டாவுக்கு விரோதியான பீஜபூர் சுல்தானை மெள்ள நயந்து தூண்டினான் திருமலை. பீஜபூரிலிருந்து ஒரு படை துணைக்கு வந்தது. அத்துடன் தன் து நண்பனான செஞ்சி மன்னனைக் காக்கப் புறப்பட்டான் விசுவநாதன். அதுதான் நன்றியுள்ள வீரம்! கோல்கொண்டா சுல்தான் தனது ராஜ்யத்தில் ஏதோ கலகம் நடந்ததறிந்து வடக்கே போனான். துணைக்கு வந்த பீஜபூர்ப் படை பகையாக மாறி செஞ்சியை வளைத்தது. பாருங்கள் மனிதர் மோசத்தை! ‘எப்படியாயினும், உயிர் போனாலும் நண்பனை விடுவதில்லை’ என்று, விசுவநாதன் கோட்டைக்குள்ளிருந்து போர் தொடுத்தான். மறுபடியும் ஒரு விபத்து; சுதேசப் படைகளுக்குள் ஒற்றுமையின்றிப் பகையும் புகைச்சலும் கிளர்ந்தன! இதுதான் நம் நாட்டின் சாபம். உட்சண்டை, உள்முரண், கட்டின வேட்டிக்குக் கத்தரிக்கோல் போடல், இனம் இனத்தின்மேல் பாயப் புறப் பகைவர் துணை நாடல், இவற்றால்தான் நம் நாடு விலங்கு மாட்டிக் கொண்டு வருந்துகின்றது; படைகளுள் ஒற்றுமை குலைந்தது; செஞ்சி பீஜபூர் சுல்தான் கையில் சிக்கியது! திருமலை தந்திரமாகத் தப்பியோடி மதுரை சேர்ந்தான். முஸல்மான் சேனை தஞ்சாவூரின் பணிவைப் பெற்று, மதுரையை அழித்து விடுவதெனக் கிளம்பி வந்தது! தனியாக என்செய்வான்? இப்போதுதான் கடும் போரில் களைத்தோடி வந்தான்

தாதாபாய் சுயராஜ்யச் சங்கூதினர். டாடா தொழில் முரசு கொட்டினர்.

ஜாம் சேட்ஜீ டாடா பம்பாயில் பிறந்தார்; எல்ஃபின்ஸ்டன் கல்லூரியில் கற்றூர். கற்று அடிமை வேலை தேடவில்லை! அவர் தகப்பனர் பெரிய வியாபாரி; ஆங்கிலேயர் செய்த போர்களுக்கு வேண்டிய பொருள்களைக் குத்தகையாக விற்றே அவர் கோடீசுவரரானர். கல்லூரிப் படிப்பு முடிந்ததும் ஜாம் சேட்ஜி சைனு சென்று ஷாங்கேயில் தொழிலை நிலைநாட்டி பம்பாய்க்கு வந்தார். அமெரிக்கச் சுதந்தரப் போர் அப்போது நடந்தது. அதற்கு அவர் குத்தகையாகப் பஞ்சு அனுப்பிப் பொருள் திரட்டினர். பிறகு அபிசீனியப் போருக்கு வேண்டிய பொருள்களை விற்றுச் செல்வம் சேர்த்தார். ஜாம் சேட் இங்கிலாந்து சென்று, அங்கே நடக்கும் யந்திரத் தொழில்களைக் கவனித்தார். இந்தியாவையும் ஒரு லங்காஷர், பர்மிங்காம், மான்செஸ்டர், ஷெஃபீல்டுபோல் ஆக்க அவர் ஆர்வங் கொண்டார். ஐரோப்பாவில் சுற்றித் திரிந்து வெள்ளைக்காரரின் யந்திர வேலையை வியப்புடன் அறிந்தார். தொழிலாவேசத்துடன் டாடா இந்தியாவுக்கு வந்தார். பம்பாயில் ஏராளமான இடம் வாங்கி மில் வைத்தார். பருத்தி விளையும் மத்திய மாகாணத்தில் பிரம்மாண்டமான பருத்தித் தொழிற்சாலை நாட்டினர். தகுந்த அறிவாளரை வெள்ளைக்கார நாடுகளுக்கு அனுப்பி யந்திரத்தொழிலும் நல்ல கல்வியும் பெற்று வரச் செய்தார். வெறும் புத்தகப் பூச்சியாயிராமல், இந்திய வாலிபர்கள் ஸயன்ஸ் ஆராய்ச்சி செய்து காலத்திற்கேற்ற தொழில்களை வளர்த்து, நாட்டின் செல்வத்தைப் பெருக்க வேண்டுமென்பது அவர் அவா. அதற்கு மைசூர்-

மன்னர் இடமளித்தார். பங்களூரில் ஒரு பெரிய ஸயன்ஸ் நிலையம் எழுந்தது. அதில் பௌதிக ரசாயன மின்சார சாத்திரங்கள் தொழிலாராய்ச்சிகள்எல்லாம் நடக்கின்றன. ஜாம் ஜேட் மகன் (ஸர்) தோராப்ஜி டாடா; அவரும் தொழில் திறமை மிக்கவர். தந்தை மகனை வங்காளத்திற்கனுப்பி இரும்புத் தொழிற்சாலை நாட்டினர். தொழிலுக்கு வேண்டிய மூலப் பொருள் களை நாட்டிலே பெற வழி செய்தார். ஜெரியா ஜில்லா வில் நிலக்கரிச் சுரங்கம் கண்டார். இந்தியாவில் கிடைக்கும் இரசாயனப் பொருள்களை யெல்லாம் தேடிப்பிடித்து உபயோகித்தார்.

ஜாம் சேட்ஜி 1904-ம் ஆண்டு காலஞ் சென்றார். தோராப்ஜீ டாடா தந்தையின் கனவுகளை யெல்லாம் நிறைவேற்றினர். இந்தியாவில் நிகரற்ற இரும்புத் தொழில், மின்சாரத்தொழில், ஸயன்ஸ் நிலயம் ஆகிய வற்றை ஏற்படுத்த இவர் முயன்றார்; தந்தை செய்த காரியங்களை மிகவும் விரிவாக்கினர். தம் சொத்துச் சுகங்களையெல்லாம் தொழிற்சாலையில் போட்டார்; இன்னும் பணம் நிரம்ப வேண்டியிருந்தது—16,30,000 பவுன். இலண்டன் நியூயார்க்கு முதலிய இடங்களி லும் அவருக்குப் பணவுதவி கிடைத்தது. அக்காலம் சுதேசி இயக்கம் பலமாயிருந்தது. தோராப்ஜீ சுதேசத் தொழில்களில் கருத்தூன்றினர். அவருக்கு நாட்டின் ஆதரவு நிறைவாகக் கிடைத்தது. குவாலி யர் மஹாராஜா மட்டும் 60 லக்ஷம் ரூபா தந்தார். சோடா நாகபூர்க் காடுகளை வாங்கித் திருத்தி தோரா ப்ஜீ பெரிய இரும்புச்சாலை நாட்டினர். அது பெரிய ஊராக மாறிவிட்டது. அதற்கு உருக்கு நகரம் (Steel City) என்ற பெயர் வந்தது. ஊருக்கருகே இரும்புச் சுரங்கம் இருந்தது. டாடா இரும்புத் தொழில் நடக்

கும் இடத்திற்கு சர்க்கார் ஜாம் சேட்பூர் என்று பெயர் தந்தனர். அதன் புகை வண்டி நிலயத்தை டாடா நகர் என்றழைத்தனர். ஜாம் சேட்பூர் டாடா இரும்புச் சாலை ரூ 10,47,00,000 முதல் வைத்து நடக்கிறது. அதில் 42,000 தொழிலாளர் வேலை பார்க்கிறார்கள்; 1,200,000 டன் இரும்பு உற்பத்தியாகிறது. இரும்புத் தகடுகளும், விவசாயக் கருவிகளும், இன்னும் பல சாமான்களும் அமோனிய கந்தகம் (Sulphate of ammonia) போன்ற ரசாயனப் பொருள்களும் செய்யப்படுகின்றன.

ஜாம் சேட்டின் மற்றோர் அரிய செயல் சிவ சமுத்திரத்தில் உள்ளநீர்—மின்சார வேலை (Hydro electric works). இதை ஜாம்சேட் தொடங்கினார்; தோராப்ஜி முடித்தார். பம்பாய்க்கும் இதே மாதிரி நீர் மின்சாரத்தால் அவர் மின் விளக்குகள் போட்டு இரவைப் பகலாக்கினார். பம்பாய் இவரால் அழகும் புதுமையும் நிறைந்தது. இந்த மாதிரி ஜேம்சேட்டும், தோராபும் இந்தியாவில் தொழில் நாட்டினார்கள். இந்த மாதிரி நம் தமிழ்த் தனவணிகர் தொழில் வளர்க்க வேண்டும். நமது தமிழ் நாட்டில் பிறந்து நோபெல் பரிசு பெற்ற ஸர். ஸி. வி. ராமன் பங்களூரில் இருக்கிறார். அவர் கையில் ஒருகோடி ரூபாயும் ஒரு தொண்டர் படையும் கொடுத்து "ஐயா தமிழ் நாட்டைத் தொழில் நாடாக்கும்" என்றால், கிடு கிடுவென்று வேலை நடக்கும். உடலுக்கு இரத்தம் போல் சமுதாய வாழ்விற்குத் தொழிலால் குவியும் பணம் உதவும். நாடு வேண்டும் கைத்தொழில்களையும் யந்திரத் தொழில்களையும் தனவணிகர் வளர்க்க வேண்டும். உதாரணமாக இப்போது தனவணிகர் தமிழ் நாட்டில் பத்துக் காகிதத் தொழிற்சாலை நடத்

தினல் குபேரச் செல்வம் குவிக்கலாமே! உப்பு முதல் கர்ப்பூரம் வரையில் நமக்கு வேண்டிய சாமான்களை யெல்லாம் உள் நாட்டிலேயே செய்யத் தனவணிகர் பணம் சென்றால், தமிழகம் மற்றொரு நியூயார்க், இலண்டன், மாஞ்செஸ்டர் ஆகும்.

வருங்காலத் தமிழ்நாட்டின் செழிப்பும் சிறப்பும் வணிகர் கையில் உள்ளன.

தொழிற் பணம் குவிந்தால் கலைவளம் பெருகும்.

தனவணிகச் சகோதரர்களே, தமிழ் நிலத்தைச் சுற்றிப் பாருங்கள். தமிழ் நாட்டின் வாணிகம் யார் கையில் இருக்கிறது என்று பாருங்கள். தமிழ்நாட்டிற்கு வேண்டிய உப்பு முதல் கர்ப்பூரம் வரை உள்ள பொருள்களை நீங்களேன் உற்பத்தி செய்யக் கூடாது? வட்டித் தொழில் போதாது. அதில் இனித் தக்கலாபம் இல்லை. நாகரிகமான பாங்குகளும் கூட்டுறவுச் சாலைகளும் எங்கும் ஏற்படுகின்றன. மக்கள் குறைந்த வட்டிக்கு எளிதாகக் கடன் வாங்குகிறார்கள். நீங்களும் சிலர் சேர்ந்து தமிழ் நாட்டுக் கூட்டுறவு பாங்கு ஒன்று ஏற்படுத்தலாகாதா? தமிழர் தேவைக்கு வேண்டிய பணத்தை அதனின்றுந் தரலாகாதா? மேனாட்டைப் பார்த்து இந்த விஷயத்தையும் நாம் கற்றுக் கொள்ள வேண்டும். இனி, நீங்கள் பெட்டி யடியிலே காலம் போக்கக் கூடாது. உங்களுக்குள்ள காரிய வீரத்தைக் கொண்டு, தாய்நாட்டிற்கு வேண்டிய தொழில்களை வளருங்கள். உதாரணம் வேண்டுமா? கேளுங்கள், சிந்தியுங்கள்: தமிழ்நாட்டில் ஏராளமான மூங்கில்கள் உள்ளன. அவற்றைக் கொண்டு காகிதத் தொழில் ஏன் செய்யலாகாது? வங்கம் காகிதத் தொழில் செய்கிறது. தமிழர் தமிழருக்கு

வேண்டிய காகிதத்தை என் செய்துகொள்ளக் கூடாது? அதற்காகச் சில வாலிபரை, ஜப்பான், அமெரிக்கா, நார்வே முதலிய நாடுகளுக்குப் பணந் தந்து அனுப்பவேண்டும்; தொழில் கற்றபின் அவர் நம்மிடையே வேலை செய்வதாக ஒப்பந்தம் பேசிக் கொள்ளவேண்டும். குற்றாலம், பாபநாசம், பாண தீர்த்தம் முதலிய நீர்வீழ்ச்சிகளால் யந்திரங்களை ஓட்டலாம். ஒரு வெள்ளைக்காரனுக்கு இத்தகைய நாடு கிடைத்தால், அவன் அதை அளகாபுரியாக்கு வான். மற்றோர் உதாரணம் வேண்டுமா? நமது பருத்தியும் மணிலாக்கொட்டையும் என் கப்பலேற வேண்டும்? அவற்றைக் கிராமத்தில் ஏழைகளுக்குத் தந்து, சிறு சிறு குடிசைத் தொழில்களை வளர்க்கக் கூடாதா? பஞ்சடித்தல், நூற்றல், நெய்தல், சாயம் போடல், நூல் திரித்தல், சமக்காளம் நெய்தல் முத லிய எத்தனையோ தொழிலுக்குப் பருத்தி பயனாகும். அத்தொழில்களால் ஆயிரக்கணக்கான ஏழைகள் பிழைக்க வழியாகும். அதை யேன் நீங்கள் கைக் கொள்ளலாகாது? மணிலாக்கொட்டை எண்ணெய் யந்திரங்களுக்குப் பயனாகிறது. பிண்ணாக்கு சோப் பாகிறது. ஒருகாசு பெறாத பிண்ணாக்கைக் காஸ் டிக் சோடா சேர்த்து, ஏதாயினும் பியூடீசோப் என்று பேர் கொடுத்து, பளபளப்பான பெட்டிகளில் விற்றால், அதிசயமாக வாங்கி, முகத்தில் தடவிக் குளிக்கிறீர்கள். தமிழ்நாட்டில் விளையும் அற்புத மான வாசனைச் சாமான்களைச் சேர்த்து ஸ்னானப் பொடிகள் தயாரித்து என் விற்கலாகாது? தமிழ் நாட்டில் உள்ள தென்னையால் ஏராளமான தொழில் களை வளர்க்கலாம். மலையாளத்தைப் பாருங்கள்! ஒரு நாடு முழுதும் தேங்காயாலும் மரச்சீனிக் கிழங்காலும் பிழைக்கிறது. ஒவ்வொருவரும் அவ

ரவர் ஊரைச் சுற்றிப் பாருங்கள். எவ்வளவு நிலங்கள் தரிசாகக் கிடக்கின்றன? அவை மலட்டு நிலங்களா? சகாரா வனாந்திரத்தில். ஃப்ரெஞ்சுக் காரர்கள் பௌதிக அறிவால் பயிர்களை வளர்க்கின்றனரென்றால், நீங்கள் நீர், நிலவளம் செழித்த தமிழ்நாட்டை ஏன் செல்வச் சித்திரச் சோலையாக்கக் கூடாது? தண்ணீரில்லாத இடங்களில் ஆழமாக ஏற்றக் கேணிகளைத் தோண்டுங்கள்! சேலம், கோயமுத்தூர்க் கவுண்டர்கள் ஏற்றச் சால் பிடித்துத் தானே பயிர் விளைவிக்கின்றனர்! தமிழ்நாட்டின் காடுகளை நன்றாகப் பயன்படுத்துங்கள்; மரங்களைக் கொண்டு பல புதிய தொழில்களைச் செய்யுங்கள் இரும்புத் தொழில்களைப் பெருக்குங்கள்!

தனவணிகர்காள், இனிப் பல தொழில் முயற்சிகளிற் புகுங்கள்; உடலில் அணிகளாக விளங்கும் தங்கக் கட்டிகளையெல்லாம் கழற்றிப் புதிய புதிய தொழில் முயற்சிகளிற்போட்டு மேன்மேலும் உங்கள் கவனத்தைத் தமிழ்நாட்டிலேயே ஊன்றுங்கள்; தமிழ் நாட்டிற் செய்யும் தொழிற் பொருள்களைப் பிற நாடுகளில் பரப்பவே கப்பலேறுங்கள்; பல நாடுகளுக்கும் வாலிபர்களை அனுப்பித் தொழிலனுபவத்தைப் பெருக்குங்கள்! ஏலேல சிங்கத்தின் இரத்தம் உங்களுடைய நரம்புகளில் ஓடவில்லையா? கொற்கை, பூம்புகார் போன்ற பட்டினங்களை மீண்டும் கட்டுங்கள்! கரிகாலன் திருமாவளவனாக விளங்கியது யாதால்? தனவணிகரின் வாணிபச் செல்வத்தாலன்றோ? மன்னர்க்குப் பின்னர்களே, காலத்திற்கேற்ற தொழிலைப் பெருக்குங்கள்; தமிழ் நாட்டை அமெரிக்கா போன்று, குபேர நாடாக்குங்கள்; தமிழ் நாட்டுக் கைத்தொழிற் பொருள்களைக் கப்பல் கப்பலாகக்

கொண்டு சென்று, பொன்னும் மணியும் நிரம்பத் திரும்புங்கள் !

தனவைசியர்களே, தமிழ் நாட்டின் செல்வச் செழிப்பு உங்கள் கையில் உள்ளது. முயன்ருல் அற்புதங்கள் செய்யலாம். மேஞட்டில் பரம ஏழை யாக இருந்தவர்கள் தம் முயற்சியால்ராக்ஃபெல்லர்களா கின்றனர். நாம் ஏன் அப்படியாகக் கூடாது? விழித் தெழுங்கள்! பர்மாப் பிரிவினை உங்களுக்கு நல்ல உணர்ச்சியைத் தரட்டும்! இதனல் உங்கள் மனம் மேன்மேலும் தாய்நிலத்தின்பாற் செல்லட்டும்! வட் டித் தொழில் வேண்டியதுதான்; எல்லாரும் அதில் புகக்கூடாது. தனவணிகர் கூடி ஜில்லாவிற்கு ஒரு நல்ல பாங்கு மேஞட்டுக் கூட்டுறவு முறையில் ஏற் படுத்தலாம். அதற்கு வேண்டிய சிப்பந்திகள், முத லாளிகள் தவிர மற்றவர்கள் வேறு பல தொழில்களில் முதற்போட வேண்டும். தொழில் என்ருல் உங்களே மண்வெட்டச் சொல்லவில்லே; கொத்தச் சொல்ல வில்லே. அதற்கு ஏற்ற தொழிலாளி யிருக்கிருன். அவனுக்குப் பிழைப்பு உண்டுபண்ணச் சொல் கிறேன். உதாரணமாக, நம் நாட்டில் ஏராளமான சோற்றுக் கற்ருழைகள் உள்ளன. குத்தகை யெடுங் கள். ஏழைகளேக் கொண்டு நார் உரியுங்கள். அதைக் கொண்டு தொழில் நடத்தி மேற்பார்வை பாருங்கள் அதனல் எத்தனேயோ ஏழைகளுக்கு உழைப்புப் பிழைப்பும் உண்டாகும். உங்கள் மணமும் வளரும் இலாபமும் கிடைக்கும். ஏழைகளுக்குக் கஞ்சியூட் டும் புண்ணியமும் வரும். நாடும் செழிக்கும். இவ் வாறு கிராமம் கிராமமாகப் பாருங்கள். இயன்ற தொழிலில் முதல் போட்டுத் தமிழ் நாட்டில் பட்டினி யால் சாகும் எளியவருக்கு உழைப்பும் பிழைப்பும்

உண்டுபண்ணுங்கள். இதுதான் இப்போது நீங்கள் செய்யவேண்டிய பெரிய அறவினை. விழித்தெழுங்கள்! அவரவர் தாய்நாடே அவரவருக்கு உரிய நிலமென உணருங்கள்; நாட்டுப் பொருளைக்கொண்டு, நாடு தழைக்கத் தொழில் செய்யுங்கள்; ஒரு கையில் திருவாசகம் பிடியுங்கள்; மற்றொரு கையில் ஏழைகளுக்குக் கஞ்சிக்கலயம் பிடித்தெழுங்கள்; எழுந்திருங்கள்!

**சிலப்பதிகாரத்**தையும் பட்டினப் பாலையையும் படித்து, அக்காலத் தனவணிகர் எப்படிக் குபேர சம்பத்துடன் வாழ்ந்து மன்னரின் நன்பதிப்பைப் பெற்றனர் என்று பாருங்கள்!

மேனாட்டில் கலை, இலக்கியம், அரசியல் வளமை அனைத்தையும் வளர்த்தது வாணிகச் செல்வமே. ஒரு நாட்டின் புகழ்முடிக்குப் பாதுகாப்பு வீரரல்லர்; தொழிலாளரேயாவர். தொழிற் செல்வம் பெருகப் பெருகக் கலைச் செல்வமும் பெருகும். தொழிலும், வாணிகமும் இல்லாவிட்டால், கலையும், வீரமும், அரசும் வறுமையால் வற்றிப்போம். நம் முன்னேற்றப் பணிகளுக் கெல்லாம் பொருளாதாரம் தொழிலையும் வாணிகத்தையும் பெருக்குவதேயாம். அத்துடன் தமிழர் ஒன்றுபட்டு, அடியில் வரும் வழிகளால் நம் முன்னேற்றப் பணிகளுக்குப் பொருள் சேர்க்கலாம் :—

1. **பிடியரிசிக் கலயம்**: சாப்பாட்டிற்குப் போதுமான வளமுள்ளவர் வீடுகள் தோறும், 'தமிழ்த் தாய் வாழ்க' என்றெழுதி, ஒரு கலயம் வைத்து, வீட்டில் அரிசிகளையும்போது அதில் ஒருபிடி போடச் செய்க! பஜனை செய்துகொண்டே தொண்டர் வந்து,

அக்கலயத்திலுள்ள அரிசியைச் சேகரித்துச் சென்று, தமிழ்ப் பணிக்குப்பயன்படுத்துவர்.

2. தெருமுனைகள் தோறும், "தமிழ்ப் பணிக்குத் தருமம்" என்றெழுதிப் பெரிய உண்டியற் கலயங்களை நாட்டுக! அதில் விருப்பமுள்ளவர் பணம் போடட்டும். வாரா வாரம் அப்பணத்தைச் சேர்த்துத் தமிழ்ப் பணிக் குதவலாம்.

3. ஊருக்கு இரண்டொரு கலை மன்றங்கள் இருக்க வேண்டும். அதில் தக்க கலைவாணரைக் கொண்டு, கதை, நாடகம், நாட்டியம், பாட்டுக் கச்சேரிகள் நடத்தலாம். செலவு போக மீதிப் பணத்தைத் தமிழ்ப் பணிக்கே சேர்க்கலாம்.

4. கலியாணம், கார்த்திகை போன்ற விசேட நாட்களில்; தமிழர் தமிழுக்காகச் சம்பாவனை வழங்கலாம். அத்தொகையை உள்ளூர்த் தமிழ்ச் சங்கத்தார் பெற்றுக் கொள்வர்.

புலவர் எழுதிய நூல்களைச் சன்மானங் கொடுத்துப் பெற்றுக்கொண்டு, வெளியிட்டு விற்கலாம். அதன் இலாபத்தை இலக்கிய வளர்ச்சிக்குப் பயனுக்கலாம்.

6. ஊருக்கு ஊர் ஓர் ஏழை யில்லம் ஏற்படுத்த வேண்டும். அதில் வேலை யில்லாது திரியும் நாடோடிகளையும், பிச்சைக்காரரையும் தொழிலில் பயிற்ற வேண்டும். அவர்களுக்குச் சாப்பாடு போட்டது போக, மீதியிருக்கும் பணம் தொழில் முயற்சிக்குப் பயனுகும்.

7. சும்மா கிடக்கும் நிலங்களில் ஏழைகளைக் குடியேற்றிச் சாகுபடி செய்து, பயனுள்ள பயிர் விளைவிக்கச் செய்யலாம்; அதில் வரும் ஊதியத்தைக் கொண்டு, தமிழ்ப் பயிரைச் செழிப்பிக்கலாம்.

8. ரூ. 50-க்கு மேற்பட்ட வருமானமுள்ள தமிழர் மாதம் கால் ரூபா தமிழ்ப் பணிக்கெனத் தரலாம்.

இவை யெல்லாம் தமிழன்பரால் வரவேண்டும். யாரையும் வற்புறுத்தக்கூடாது. உள்ளத்தில் அன்பும், ஆர்வமும் புகுந்து பற்றினால், ஆற்றலும், பொருளும், செயலும், வெற்றியும் தாமே எய்தும். முயல்க, முயல்க; முயல்க மென்மேலும்!

## கசு. தமிழ் எழுத்துக்கள்

உலகில் மிகப் பழைய மொழிகளிற் சிறந்தது நமது தமிழ் மொழி. இஃது ஒருகாலம் திபேத் முதல் கீழிந்தியத் தீவு வரையில் பரவி யிருந்தது. இன்று அதன் எல்லை சுருங்கினாலும், இளமையும் ஏற்றமும் சுருங்கவில்லை. ஆரியம், யூதம், பாலி, இலத்தீன், கிரேக்கம் முதலிய தொன்மொழிகள் நூல் வழக்கில் இருக்கின்றன; பேச்சு வழக்கில் இல்லை. தமிழ் ஒன்றே அன்றிருந்ததுபோல் இன்றும் பேச்சு வழக்கில் உள்ளது. இக்காலம் விரிந்து பெருகி உலகெங்கும் வரவேற்றுப் போற்றப் பெறும் ஆங்கிலம் ஃப்ரெஞ்சு, ரஷ்யம் போன்ற வீறுபெற்ற மொழிகளைப் போலத் தமிழும் வளர்ந்தோங்க முடியும். நந் தமிழுக்கு அத்தகைய திட்பமும், நெகிழ்ச்சியும், நயமும் உண்டு. இந்திய மொழிகளில், தற்போது சிறப்புற்ற இந்துஸ்தானி, வங்கம், குஜராத்தி, மராத்தி முதலிய மொழிகளைத் தமிழ் வென்றோங்குவது பெரிதன்று. ஏற்கெனவே இம் மொழிகளுக்கில்லாத அருட்சிறப்பு தமிழுக்குண்டு. தமிழருக்கு வினைத்திட்பமும், மனத்திட்பமும் பெருகவேண்டும். தமிழர், தமது நாடு

மொழி, கூட்டம் இவற்றை மேன்மேலும் வளர்க்க முன்வந்து முயலவேண்டும்.

ஆங்கிலமும், ஃப்ரெஞ்சும் உலகளாவிய மொழிகளானதேன்? தேம்ஸ் ஆற்றங்கரையிலும், ரைன் ஆற்றங்கரையிலும், நேற்றுப் பிறந்த பிறமொழிகள் உலகை யாள முடியுமானால், முன்னூறாண்டுகளுக்கு முன்பே எழுந்த இந்துஸ்தானி இந்திய மொழியாக முடியுமானால், பதினாயிரம் ஆண்டுகள் இலக்கிய இலக்கண வளமையுடன் விளங்கிய நமது அருமைத் தாய் மொழி உலக மொழியாகத் தடையுண்டோ? அவ்வாறு ஆகும் தகுதி தமிழுக்குண்டு. அதை அவ்வாறு போற்றி வளர்க்கும் தகுதி தமிழருக்கு வரவேண்டும். உலகை யாள உரிமை கொண்ட ஓர் அரசி சிறையில் வாடுவதுபோலே, நமது தமிழரசி, மைந்தரின் அசட்டையால், இன்று சென்னைக்கும் குமரி முனைக்கும் இடையே சிறைப்பட்டு உயிர் துடிக்கிறாள்.

ஏதோ பத்து கதைகளும், சிந்துப் பாட்டுகளும் வெளி வந்துவிட்டால், தமிழ் வளர்ந்துவிடாது. தற்காலம் செய்தி இதழ்களிற் காணப்படும் கொச்சைத் தமிழ் இலக்கியத்திற் புகுந்து விரிந்தால், இன்னும் சில ஆண்டுகளில், தமிழ் தனது தனிச் சிறப்பை இழக்கும். தமிழுக்கே உரிய பல மொழிகள் மறைந்து போகும். சங்கத் தமிழ் பொது மக்களுக்கு விளங்காமற் போனதுபோலே, இன்றுள்ள தமிழும் பிற்காலத்தவருக்கு விளங்காமற் போகும். தமிழிலிருந்து மலையாளம் போலே ஒரு புதிய மொழி உண்டாகும். அதில் இன்று வழங்கும் கொச்சைக் குப்பைகளெல்லாம் சேரும். இவ்வகையே இலத்தீன் மொழி கொச்சையாகி ஃப்ரெஞ்சு, இத்தாலி முதலிய புதிய மொழிகளாக விளங்குகிறது.

தமிழர் செய்யவேண்டிய முதன் முயற்சி, எழுதுந் தமிழையும் பேசுந் தமிழையும் இயன்றவரையில் ஒன்ருக்குவதே யாகும். பிழையறப் பேசவும் எழுதவும், தமிழர் பயிலவேண்டும். கொச்சைத் தமிழும், அசுத்த நடையும் நீங்கவேண்டும். அதற்கொரு இயக்கம் தோன்றவேண்டும்.

தமிழில் ஏராளமான திசை மொழிகள் புகுந்துள்ளன; பிற மொழிகளிலும் அவ்வாறே. ஆங்கிலத்தில் கணக்கற்ற பிற மொழிகள் நாடோறும் கலந்து, அம் மொழியை எல்லையற வளர்த்தன. இப்போது உலகெங்கும் ஆங்கிலத்தைப் பரப்பி, அதையே மாந்தருக்குப் பொது மொழியாக்கப் பெரு முயற்சி செய்து வருகின்றனர். உலக மொழிகள் அனைத்தையும் ஆங்கிலத்தில் எழுத முயலுகின்றனர். எடுத்துக் காட்டாக, பார்ஸி, உருது, அரபி முதலிய மொழிகளை ஆங்கில எழுத்துக்களாலேயே கற்க நூல்கள் உள்ளன. ஆங்கில எழுத்துக்களில் ஒலிக் குறைகள் ஏராளமா யுள்ளன. எனினும், ஒலிக்குறிகள் (அக்ஸெண்ட்ஸ்) போட்டு, எப்படியோ பிற மொழிகளை அதில் எழுதுகின்றனர். அதனுல் ஆங்கிலம் ஒன்றே அறிந்தவர், பிற மொழிகளையும் கற்க இயலும். இப்போது உலகிற்கு இத்தாலிய எழுத்துக்களால் வழங்கும் ஐரோப்பிய வரி வடிவையே பொது எழுத்தாக்க முயலுகின்றனர். நமது நாட்டில் தேவநாகரி எழுத்தை நாட்டுப் பொது எழுத்தாக்கக் காந்தியடிகள் முயலுகிருர்.

நாம் ஏன் தமிழை அவ்வாறு பொது எழுத்தாக்கக் கூடாது? வடமொழிக்குள்ள உரிமை இந் நாட்டின் தொன் மொழியான தமிழுக்கில்லையா? இக் கேள்வியைக் கண்டு பலர் நகைப்பர். "தமிழாவது, எழுத்தாவது, பொதுவாவது! முதலில் தமிழர்

தமிழை நன்கறியட்டும்; பிறகு நீர் நாட்டையும் உலகையும் வளைக்க மனக்கோட்டை கட்டலாம்'' என்பர் சிலர். தமிழைத் தீண்டாமொழி என்று வெறுக்கும் வடநாட்டாரும் உளர். அவர் ''உங்கல் டமில் பொக்கைவாயன் கொட்டைப்பாக்குக் கடிப்பது போலவே கொட கொடா என்றிருக்கிறது. இந்தி, மராதி, குஜராத்தி, வங்கம், முதலிய மொழிகளில் உள்ள உரப்பு அதிலில்லை. எங்கள் தாய் மொழியைக் கொண்டு உலக மொழி யனைத்தையும் எழுதலாம். தமிழைக்கொண்டு வட மொழியை எழுத முடியாதே! வல்லினத்தில் நான் கெழுத்துக்களில் ஒன்றே தமிழில் வழங்குகிறது. மற்றை மூன் றெழுத்துக்களுக்கும் ஒலி யில்லையே! ஆதலால் தமிழ் அறைகுறை மொழி; ஒலிநிறைவற்றது. சென்னையைத்தாண்டி அஃது அடியெடுத்து வைக்கமுடியாது. இங்கேயும் இந்தி வந்துவிட்டது. இந்தி ஆங்கிலம் இரண்டறிந்தால் நாடெல்லாம் பேசலாம். தமிழைக்கொண்டு என் செய்வீர், பேதையீர்? மேலும் உங்கள் மொழியில் பாவம் பாவமாகிறது. சருவம் சருவமாகிறது.'' என்றெல்லாம் கடுமையாகத் தாக்குவர் சிலர். அனைத்தையும் கேட்டுக்கொண்டு, தமிழன் வாய்மூடிச் செல்வதா? 'தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும்' என்று பழம்பாட்டைப் பாடி மகிழ்வதா? தொல்காப்பியத்தைக் காட்டிப் பெருமை பேசுவதா? அல்லது நமக்கேன் வம்பு! என்று காவேரிக் கரையிலும், வைகைக் கரையிலும், பொருநைக்கரையிலும் உறங்குவதா? தமிழன் தமிழின் பெருமையை ஆராய்ந்து, பிறமொழியாளருக்குத் தக்க விடையளிக்க வேண்டும். ஆங்கிலேயரொருவர் நமது மொழியைப் பற்றிப் புகழ்ந்தால், அதைக் கேட்டுக்கொண்டு நாமும்

மகிழ்ந்து சும்மா இருக்கிறோம். 'நமது தாய்மொழியின் அருமை பெருமைகளை ஆராய்ந்து, நாமும் ஏன் உலகில் தலை நிமிரக்கூடாது?' என்று வீறுடன் தமிழர் தலை நிமிர்ந்து முன்வரவேண்டும்.

தமிழைப்பற்றிக் கண்ட கேள்விகள் கேட்டுக் குறைசொல்லும் பிறமொழியாளருக்குத் தமிழன் இவ்வாறு விடையளிக்க வேண்டும்:— "அன்பரே பொக்கைவாயன் வெல்லச்சீடை புளிப்பு என்பது போலிருக்கிறது நீர் தமிழைக் குறைசொல்லுவது. தமிழின் சுவை யறிந்தால் அப்படிச் சொல்மாட்டீர். எமது மொழியில் ஒலிக்குறை யிருப்பதாகச் சொன்னீர். தமிழுக்கு வேண்டிய ஒலிகள் இங்கே யுண்டு. அதனால் இடரில்லை. ஆங்கிலம் பிரெஞ்சு முதலிய மொழிகளில் எழுதியபடியே உச்சரிக்க முடியாமல் காதால் கேட்டே உச்சரிப்பறியும் பல மொழிகள் உள. அதுபோல 2, 3, 4 வது, கசடதபக்கள் வரும் மொழிகளையும் பழக்கத்தால் உச்சரிக்கலாம்—பெரும்பாலும் ஆரிய மொழிகளைவிட தமிழ் தனிச்சிறப்புள்ள மொழி. அது பிற மொழிகளிடம் கடன்வாங்க நேர்ந்தால், கடன் தொகையையும் முதலாகக் கொண்டு வளம்பெறும் திண்மையுடையது. திசை மொழிகளைத் தமிழ் தனதாக்கிக் கொள்ளுகிறது 'தர்மம்' என்பதைத் 'தருமம்' என்றும், 'ஸ்வதந்தரம்' என்பதைச் 'சுதந்தரம்' என்றும் தமிழ் வழங்குவது, அதன் தனிச் சுயேச்சையைக் குறிக்கிறது. தமிழில் கசடதபக்களில் ஒரே ஒலிதான் இருக்கிற தென்றீர். உச்சரிக்கவே அவை தேவையாகும். அவற்றிற்குத் தனித்தனி எழுத்துக்கள் வேண்டா. அதற்கொரு எளிய முறை பிறகு சொல்வோம். தமிழ் பேசுவதற்கு அவை வேண்டாவாம்;

எனினும் தமிழ்மொழி யமைப்பிலேயே மற்ற மூன் ெருலிகளும் நிரம்புகின்றன. எடுத்துக் காட்டாக, 'கங்கை, என்பதில், ஙகரத்திற்குப் பின் வரும் ககர ஐகாரத்தை இயல்பாகவே மென்மையாக மூன்ரும் க போல ஒலிக்கிரும். அதற்குப் புதிய எழுத் தொன்றும் வேண்டா. எனினும் நிறைவாக மொழி யவும் வழியுண்டு. எழுத்துக்களைப் பெருக்குவது நலமன்று. சில எழுத்துக்களில் பல பொருளை விளக்கும் மொழியே உயர்ந்த மொழி. அவ் வகை யில், ஆங்கிலத்திற்கு அடுத்தபடி தமிழையே சொல்ல வேண்டும். கூட்டெழுத்துத் தொல்லையில்லாமல் நிற்கும் இந்திய மொழி, தமிழ் ஒன்றே. வங்கம், இந்தி, குசராத்தி, தெலுங்கு, மலையாளம் முதலிய பிறமொழிகளெல்லாம் இன்று வடமொழியைத் தழிவி வரிவடிவையும் இலக்கணத்தையும் ஆக்கிக் கொண்டுள்ளன. அவற்றின் எழுத்தைக் கற்பது பெரும் வேலையாயிருக்கிறது. கூட்டெழுத்து மிகவும் தொந்தரையாக இருக்கிறது. தமிழ் முப்பது எழுத்துக் களில் முத்துக் கோத்தாற் போலிருக்கிறது. அதற்கே இன்று கையச்சு ஏற்பட்டு எளிதாக வழங்குகிறது.

''தமிழில் ஒலியில்லை, வடமொழி தமிழில் வழ வழா வென்ருகிறது'' என்று நீர் இழிவுரை பேசு கிறீர். உமது வடமொழியிலும், இந்தியிலும் ஒலிக் குறைவுகள் ஏராளமாக உண்டு. எடுத்துக் காட் டாக, நாம் 'புளி' என்ருல் நீர் 'புலி' என்பீர், 'வாழ்' என்ருல் 'வால்' என்பீர். 'எத்து' என்ருல் 'ஏத்து' என்பீர். மொழிவதிலும் உம்மிடை எத்த னேயோ தொல்லைகள் உண்டு. இந்தியில் ஜீதனு என் றெழுதுவீர்; ஜீத்ன என்று அகரத்தை விழுங்கி ஒலிப்பீர். தேவநாகரியைக் கொண்டு உலக எழுத்

தெல்லாம் எழுதிவிடலாம் என்பர் சிலர். ஆங்கிலத்தை அவ்வாறு எழுதொணுது. F, Z போன்ற ஒலிகளைத் தேவநாகரியில் எழுத முடியுமா? சில அராபி, பார்ஸி ஒலிகளுக்குத் தேவநாகரியில் எழுத்தில்லை. புள்ளிபோட்டுச் சரிபண்ணுகிறார்கள். இப்போது உருது எழுத்திற்கு நேராகத் தேவநாகரி எழுத்தெழுதி, ஹிந்துஸ்தானி நூல்கள் தயாரித்திருக்கிறார்கள். ஹிந்தியில் ண உண்டு. உருதுவில் ண இல்லை. இதற்கென்ன செய்வது?

பிரெஞ்சு, ஆங்கிலம் போன்ற மொழிகளில், எழுத்திற்கும் ஒலிக்கும் வேற்றுமை அதிகம். காதாற் கேட்டுக் கேட்டே சில மொழிகளை மொழிய வியலும். மேலும் ஐரோப்பிய மொழிகளின் உச்சரிப்பைக் கற்பதற்கே பல்லாண்டுகள் செல்லுகின்றன. ஒலியிலக்கணம் கற்றபிறகே நல்ல உச்சரிப்பு வரும். மேனாட்டு மொழிகளில், உச்சரிப்பைப்போல ஏறக்குறைய இரண்டுமடங்கு எழுத்துக்கள் சொற்களிற் புகுந்துள்ளன. சொற்களை எழுத மிகத்தொல்லையாயிருக்கிறது. அதிலும் பிரெஞ்சு, மொழியிலுள்ள எழுத்துக்களுக்கும் உச்சரிப்பிற்கும் உறவேயில்லாமல் இருக்கிறது. எடுத்துக்காட்டாக, 'எரோ' என்ற இரண்டொலிகளுக்கு heureux என்று எழெழுத்துக்கள் எழுதவேண்டி யிருக்கிறது. மேனாட்டு மொழிகளை எப்படி எழுதுகிறோமோ அப்படி இயம்ப முடியாது. எழுத்துச் செட்டில்லாமல் அம் மொழிகள் வளர்ந்திருக்கின்றன. இந்தியிலும் இதே சங்கடம் உண்டு. ரககர் என்று எழுதி 'ரக்கர்' என்று மொழிவர். வங்காளிகள் லக்ஷ்மி என்பதை லொக்கி என்றும் தன்யாவாத் என்பதை தொன்னபாத் என்றும் உச்சரிப்பர். தமிழில் இந்த இடர் கிடையாது. அதை எப்படி எழுதுகிறோமோ அப்படியே மொழிகிறோம்.

பிரெஞ்சு, இலத்தீன், ஆரியம், இந்துஸ்தானி, குசராத்தி முதலிய மொழிகளில், அஃறிணைப் பெயர்களுக்கெல்லாம் பால் வேறுபாடுண்டு. தாரா, பார்யா, கலத்ரம் இம் மூன்றும் **மனைவி** என்ற பொருள்கொண்டன. மனைவி பெண்பால். ஆனால் வடமொழியில் **தாரா** ஆண்பால், **பார்யா** பெண்பால் **கலத்ரம்** ஒன்றன்பால்! இது இயற்கைக்கு எவ்வளவு முரணாயிருக்கிறது! இப் பால் வேறுபாடு முற்றிலும் பொருளற்றது; வீண் தொல்லை தருவது. இதனால் இம் மொழி மாணவர் மிகவும் வருந்துகின்றனர். கல்லும், புல்லும், மேஜையும், நாற்காலியும், ஆடையும், சட்டையும் ஆண்பாலா பெண்பாலா என்று பார்த்துக்கொண்டிருப்பது எவ்வளவு நகைப்பிற்கிடமான வீண் வேலை என்று யாவரும் உணரலாம். இந்தத் தொல்லை தமிழுக்கில்லை. தமிழில் பால்வேற்றுமையை இயல்பாக அறியலாம். சில எழுத்துக்களில், பல பொருள்களை முரணில்லாமல் பகுத்தறிவிற்குப் பொருத்தமாக, எழுதியபடியே உரைப்பது நமது தமிழ். **இதனாலேயே தமிழ் உலகமொழியாகத் தகுதிபெற்றுள்ளது என்று துணிந்து கூறுவோம்.** தமிழர் இதை நன்றாக உன்னிப் பார்க்க வேண்டும். ஓர் அத்லாந்திக் தீவில் நேற்றுதித்த மொழி, இன்று உலகமொழியாவதானால், பதினாயிரம் ஆண்டுகளாக இலக்கிய இலக்கணத்துடன் விளங்கும் தமிழ்மொழி ஏன் உலக மொழியாகக் கூடாது?

மற்ற வரி வடிவங்களில் உள்ள குறைகள் தமிழில் இல்லை. எனினும் பிறமொழி ஓசைகளைத் தமிழில் எழுதுவதாயின், சில திருத்தங்கள் வேண்டும். அதற்காக எழுத்துக்களைப் பெருக்கக் கூடாது. பிரெஞ்சில் ஒலிக்குறிகள் உள்ளதுபோல, தமிழிலும் புள்ளியும்

கோடும் போட்டுப் பிற ஒலிகளை நிரப்பலாம் புள்ளி, கோடு (—.) இரண்டால் இந்தி, வங்கம், மராத்தி, குசராத்தி, வடுகு, கன்னடம், மலையாளம் ஆகிய எல்லா இந்திய மொழிகளையும், ஆரியத்தையும் தமிழிலேயே எழுதலாம். தமிழிடைப் பிறந்த வடுகு கன்னடம், மலையாளம் முதலியவற்றையும் இன்று ஆரியத்துடன் சேர்த்துப் பேசவேண்டிய நிலை வந்தது வருந்தத்தக்கது. தமிழ் ஒன்றே தனிமொழியாக நிற்கிறது. தமிழில் உள்ள சிறப்பெழுத்துக்களான ழகரம், றகரம், ஆய்தம், இவற்றைக் கொண்டு ஆங்கிலம், உருது, பார்ஸி, பிரெஞ்சு, ஜர்மன் முதலிய மொழிகளைத் தெளிவாக எழுதலாம். மேலும், உலக மொழிகளில் எளிதாக எழுதக்கூடியன உருதுக்குப் பிறகு தமிழேயாம். அகரத்திலேயே பிற எழுத்துக்களின் வடிவெல்லாம் அடங்கி யிருக்கிறது. எடுத்துக்காட்டாக, அகரத்தில் எ, ம, க, த, ற, ச முதலிய வடிவங்கள் அடங்கியிருப்பதைப் பார்த்தவுடனே அறியலாம். இன்று மற்றை இந்திய மொழிகளெல்லாம் ஆரிய ஒலிகளைத் தழுவியுள்ளன. ஆதலின் புள்ளியும் கோடுமிட்டு ஆரியவொலிகளை எழுதினால், எல்லா இந்திய ஒலிகளையும் எழுத முடியும். அது எவ்வாறெனஅடியிற் காணும் அட்டவணை விளக்கும். வடமொழியில் வழங்காத எழுத்தொலிகளும் உண்டு. ஓரிரண்டு வார்த்தைகளே கொண்ட எழுத்துக்களும் உண்டு. அனைத்தையும் அட்டவணையிற் காண்க :—

| எழுத்து | குறிப்பு | உதாரணம் |
|---|---|---|
| க | k | கண் |
| க | kh | கட்கம் Khadgam |
| க | g | கங்கை gangai |
| க் | gh | கனம் (ghanam) |
| க்ஷ | Ksha | அக்ஷரம் |
| ங | gna | வங்கம் |
| ச | ch | சர்ச்சை |
| ச | chch | சத்ரம் (chchatram) |
| ஜ | J | ஜலம் |
| ஜ | Jh | ஜங்காரம் |
| ஸ | s | ஸரளம் |
| ஶ | sh | ஶிவம் (shivam) |
| ஷ | sha | ஷண்முகம் |
| ஜ் | ZJ | ஜமீன் Jamin, ஃஜீரோ Zero |
| ஞ் | Jna | மஞ்ஞை |
| ஞ, | ஜ்ஞ | ஞானம் |
| ட | T | டங்காரம் Tan Karam |
| ட | Th | காடினம் |
| ட | D | டங்கா, கடன் |
| ட | DD | டக்கா |
| ண | n | அண்ணன் |
| த | T | தம்பி |
| த | TTh | ஸ்தாபனம் |
| த | Dh | தண்டம் |

| எழுத்து | குறிப்பு | உதாரணம் |
|---|---|---|
| த | DDh | கனம், தனு |
| ந | N | நான் |
| ன | N | அன்னம் |
| ப | P | அப்பன் |
| ப | PPh | பலம் |
| ப | b | பம்பாய் பாண்ட் (Band) |
| ப | bh | பஜனை (Bbajanai) |
| ஃப | f | ஃபக்கீர் (Fakir) |
| | | எஃபெக்ட் (Effect) |
| ம | m | மனிதன் |
| ய | y | யானை |
| ர | r | இரக்கம் |
| ற | Rr | அறம் |
| ரு | r | ருஷி |
| ல | l | இல்லம் |
| ழு | l. | |
| வ | v | வண்டி |
| வ்வ | w | வ்வுமன் Woman |
| ழ | Je | தமிழன் |
| ள | l | வெள்ளி |
| ஹ | H | ஹனுமான். |

## உதாரணங்கள்

ஏகம் ஸத் விப்ரா பஹுதா வதந்தி
(உள்ளது ஒன்றே; அறிஞர் பலவாகச் சொல்வர்).

காமிஹி நாரி பியாரி ஜிமி,
லோபிஹி ப்ரிய ஜிமி தாம,
திமி ரகுநாத நிரந்தர
ப்ரிய லாகுஹு மோஹி ராம.

(காமியைப் பெண்ணும், கருமியைப் பொன்னும் கவர்வதுபோல் ஹே ராமா, ரகுநாதா, எப்போதும் உனது அன்பில் நான் மோகித்திருக்க அருள்).

### வங்காளம் :

அனுகதி விஹனே கார்யஹித்தி கேமனே ஸாதகே கய

(பணிவில்லாமல் ஸாதகன் எவ்வாறு காரிய ஸித்தி பெறுவான்?)

### தெலுங்கு

ஞானமார்கமெருக கடதேரு ஜன்மமு

(ஞான மார்க்க மறிந்தால் ஜன்மம் கடைத் தேறும்)

### ஃப்ரெஞ்சு

Au Divin Je monte sans peur
Il est la flamme de mon coeur

ஓ திவான் ழெமோந்த் ஸான் பேர்
இல் ஏ ல ஃப்லாம் த மான் கர்

(நான் கடவுளின்பால் மேலேறி அஞ்சாது செல்லுகிறேன்; அவனே எனது இதயக் கனல்).

### ஆங்கிலம்

**To thine own self be true**
டு தைன் ஓன் ஸெல்ஃப் பீ ட்ரூ.
**Joy is the zenith of love**
ஜாய் இஸ்தி ஃஜெனித் ஆஃப் லவ்

**Man, Car** இந்த இரண்டு மொழிகளிலும் உள்ள ஆ—வின் உச்சரிப்பு வெவ்வேறு. கார் என்பதைச் சாதாரணமாய் எழுதலாம். ஆவுக்குக் கீழே இந்த அடையாளம் போட்டால் **Man** (மான்), **Can** (க்யான்) என்ற உச்சரிப்புக்களை எளிதாயறியலாம்.

இவ்வழி எளிது. வங்கர், தெலுங்கரெல்லாம் வடமொழியைத் தமது தாய்மொழியைக் கொண்டே எழுதிப் படிப்பர். அதுபோல மேற்சொன்ன வகையாகத் தமிழரும் வடமொழி, ஆங்கிலம், ஹிந்துஸ்தானி அனைத்தையும் தமிழெழுத்தி லெழுதியே படிக்கலாம். அம்மாதிரி நூல்கள் உண்டாக வேண்டும்.

## ௰எ. புதுத் தமிழ்ச் செல்வம்

"**மா**ற்றம், முன்னேற்றம்" என்று கர்ச்சித்துச் செல்கிறது கால வெள்ளம். அறிவாறு பழைய தடைகளை உடைத்துப் புதிய வெள்ளத்துடன் பரந்து விரிந்து செல்கிறது. 'அந்தக்காலம்' வேறு. 'இந்தக் காலம்' வேறு. இராமர் காலத்தில் காடாயிருந்த இடங்களெல்லாம் இப்போது அழகான நகரங்களாயிருக்கின்றன. கால சக்தியின் வீராவேசம், பழங் கொடுமையாகிய பஸ்தீலைத் (Bastille) தகர்த்தெறிந்து, அந்த மண்மேல் சுதந்தரச் சோலையை வளர்க்கிறது. நொடிகளில் இடர்படும் கட்டைவண்டிக் காலம் போய், சொகுசான பாதைகளில் ரயிலும் மோட்டாரும் ஓடுகின்றன. 15000 அடி யுயரத்தில் மனி

தன் ஆகாய விமானமேறிச் செல்லுகிருன். இலக்கியத்திலும் சரி, சமூக வாழ்விலுஞ் சரி, கரடுமுரடான நடைகளைக் காலம் வெறுக்கிறது. திராட்சாபாகமான நடையே இப்போது வேண்டும். ஷேக்ஸ்பியர் ஆங்கிலம் வேறு; ஷெல்லியின் ஆங்கிலம் வேறு. வங்கத்தில் நந்தர் நடை வேறு; தாகூர் நடை வேறு.

சங்ககாலத் தமிழ் வேறு; கம்பர் காலத் தமிழ் வேறு. புகழேந்தியின் தமிழ் வேறு; தாயுமானவர், வள்ளலார் கால நடை வேறு. இன்று நடை முற்றிலும் வேறு. அகநானூறு, புறநானூறு, இறையனுரகப்பொருள் நடை இக்காலத் தமிழ்ச் செவிக்குக் கிரேக்கு, லத்தீன் போல் ஒளிக்கிறது. ஓர் உதாரணம்:

" ஆடுநனி மறந்த கோடுயர டுப்பின்
ஆம்பி பூப்பத் தேம்புசி யுழவாப்
பாஅ லின்மையிற் றேலொடு திறங்கி
யில்லி தூர்த்த பொல்லா வறுமுலை
சுவைத்தொ றழூஉந்தன் மகத்துமுக நோக்கி,
நீரோடு நிறைந்த வீரிதல் மழைக்கணென்
மனையோ ளெவ்வ நோக்கி நினைஇ
நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண

*   *   *   *

இந்த நடை அந்தக் காலத்திற்குச் சரி; இப்போது இவ்வாறு ஒரு புலவர் பேசிக் கொண்டே போனல், சபையோருக்குத் தூக்கந்தான் தலையைச் சுற்றும்.

அடுப்பினை மூட்ட வகையில்லை;
அனலென வெம்பசி பற்றுதே!
கொடுக்க மனைமுலை பாலில்லை;
குழந்தை தன் தாய்முகம் பார்த்திட,

நொடித்தவ ளென் முகம் பார்த்திட,
நுடங்கியுன் பொன்முகம் பார்த்தனன்;
அடுத்தவ ரின்னலை யாற்றுவாய்
அறத்திற் செழித்த குமணனே!

என்றிருந்தால், இக்காலம் விளங்கும். பாரி, ஓரி, காரி, எழினி, பேகன், ஆய், நள்ளி முதலிய பழைய வள்ளல்கள் செய்த ஈகை வேறு. பரிசில் பெற்ற புலவர்கள் சங்க இலக்கியங்களை நிரப்பிய அந்நாள் வேறு. இந்நாளில், கல்வியும் தொழிலும், புதுப் புது நயங்களும், வியன்களும் பெற்று முன்னேறிப் பொலிகின்றன.

ரஸ்கின், எமர்ஸன், தாகூர், விக்தர்ஹ்யூகோ போன்ற புலவர் மாதிரி கம்பீரமான செல்வ நடை தமிழுக்கு வரவேண்டும். ஆங்கிலம், ஃப்ரெஞ்சு, ஜெர்மென் ஆகிய மூன்று நவ நாகரிக மொழிகளும் நடையழகில் மிக மிக முன்னேற்ற மடைந்துள்ளன. இவற்றிர்க்குச் சமமாகத் தமிழை உயர்த்த வேண்டும். அதுவே இரவும் பகலும் எனது முயற்சி. ஒவ்வொரு பெருங்காப்பியத்தையும் பார்த்துப் பார்த்துத் தமிழில் அதன் நயங்களைச் சேர்த்துக் கொண்டிருக்கிறேன். அப்படியே கடன் வாங்கக் கூடாது. அதன் வழியில் **தமிழுக்கே உரிய புது நடை** கற்பிக்க வேண்டும். மேனாட்டுக்கவிகள் எவ்வளவு உயர் நடையில் எழுதப்பட்டாலும், தெளிவாகப் புரிகின்றன. தமிழ்ச் சங்க இலக்கியங்கள் கடினமா யிருக்கின்றன. தாகூர் கவியை ஒவ்வொரு வங்காளி யும் எளிதில் படிக்கிறான். கம்பனை அப்படிப் படிக்க முடிவதில்லை.

இக்காலம் அறிவாளர் புரியும் அறப்பணியே வேறு. மனித மூளை அபாரமான முன்னேற்ற

மடைந்து அற்புதங்கள் செய்யும் இந்நாளில், பணக்காரனிடம் சென்று,

> "..............................ஆற்வமுற்று
> உள்ளி வருநர் உலைவுநனி தீரத்
> தள்ளா தீயுந் தகைசால் வண்மைக்
> கொள்ளா ரோட்டிய நள்ளி"

என்றெண்ணி, சங்க நடையில் வெளுத்துத் தள்ளினல், தொண்டையில் புண்தான் வரும்; அல்லது காளமேகம் போல வசை பாடினுலும் அரம்பாடினுலுந்தான் என்ன? அந்தக் காலம் மலையேறிப் போயிற்று. இக்காலம் வேண்டுங் கவிச்சுவையே வேறு. வெறுஞ் சொல்லடுக்குகள் மட்டும் போதா. காளிதாசனைவிட இப்போது கவிச் சுவையும், கலைச் சுவையும் அதிகம். வங்க, ஆங்கிலக் கவிகள், அருட் சுவையில் தமிழுக்கு ஈடில்லை; எனினும் அழகில் வெற்றி பெற்று விளங்குகின்றன.

கால வேகத்தை வெல்ல வேண்டுமானுல், தமிழ், புத்தணி பூண்டு, புதுமுடி தரித்துப் புத்தழகுடன் பொலிய வேண்டும். பழைமையை உடும்புப் பிடியாகப் பற்ருது, புது நயம் கூட்டித் தமிழைத் தனக்கு இயல்பான பெருமையுடன் பொலிய வைக்க வேண்டும். மடலேறுங் காலம் போயிற்று. காதலர் நேராகக்கண்டு கலந்து இன்புறுங் காலம் வந்துவிட்டது. இப்போது பழைய காதல் துறைகளையே பாடிக் கொண்டிருப்பது வீண் வேலையாகும்.

இதெல்லாம் எதற்காகச் சொல்கிறேனென்ருல், பழந் தமிழை ஒதுக்கவன்று; புதுக்கவே. பழஞ் செல்வம் துருப்பிடியாது புதிய தொழிலில் போட்டுத் தமிழரசிக்கு இன்னும் பெருஞ் செல்வம் சேர்ப்போம் என்னும் ஆர்வத்தால கூறினேன். பழைய நூல்களை

எளிய நடையில் எழுதி விளக்கவேண்டும். அதற்கு மேல், தமிழில் புதுப் புது இலக்கியங்களைக் காலத்திற் கேற்றவாறு உண்டாக்க வேண்டும்.

## 18. தமிழ்க் கழகம்

நாம் இப்போது இருக்கும் நிலையில், தமிழை எவ்வாறு வளர்க்கவேண்டு மென்பதற்கு ஓர் உதாரணம் காட்டுவோம்:

### ஃப்ரெஞ்சு மொழியின் உதாரணம்

ஐரோப்பிய மொழிகளில் ஆங்கிலம், ஜெர்மனி, ஃப்ரெஞ்சு ஆகிய இம் மூன்றும் முதன்மை பெற்றுள் ளன. ஃப்ரெஞ்சு மிகவும் இனிய மொழி. அதன் உச்சரிப்பும், இலக்கணமும் தராசு போல அளந்து அமைக்கப்பட்டுள்ளன. இம் மொழியின் வளர்ச்சி தமிழருக்கு அரிய உதாரணமாகும். ஐரோப்பிய மொழிகளுக் கெல்லாம் தாய் கிரேக்; தந்தை இலத் தீன். பெரும்பான்மையான சொற்கள் இவற்றினின் றும் போந்தனவே. ஆறுகோடி மக்களால் இன்று பேசப்படும் ஃப்ரெஞ்சு மொழி தனிமொழி யன்று. முதலில் பிரான்சிற்கு கால் (Gaule) என்பது பெயர். அதிலிருந்தோர் கால்வாஸ் (Gauloise); அவர்கள் ஒரு வகை கெல்திய பாஷை (Celtique) பேசிவந்தனர். கி. மு. 58-50ல், யூலியகேசரி கால் நாட்டைப் படை யெடுத்து வெற்றி கொண்டான். அவனுடன் வந்த சிப்பாய்கள் அங்கேயே தங்கி ஜனங்களிடையே தாங்கள் பேசிய கொச்சை இலத்தீனைப் புகுத்தினர். இலத்தீனில் அறிஞர் பேசுவது ஒரு வகை; சாதாரண மாகப் பொது மக்கள் பேசுவது ஒரு வகையாம். பொது மக்கள் பேசிய கொச்சை இலத்தீனும் காலில் வசித்தவர்கள்வாய்ப்பட்டுப் பின்னும் கொச்சை

யாகத் திரிந்தது. இக்கொச்சை இலத்தீனே பிரெஞ்சாயிற்று. கசஆம் நூற்றாண்டில்தான் ஃப்ரெஞ்சு மொழி ஓர் உருவடைந்தது. அப்போது அதில் 8000 வார்த்தைகள்கூட இல்லை. பிறகு அறிஞர் பலர் பல துறைகளில் உழைத்துச் சென்றவிடமெல்லாம் ஆங்காங்கு அவ்வம்மொழிகளில் விளங்கும் நயமொழிகளைத் தமது தாய்மொழியில் சேர்த்தனர். அறிஞர் கிரேக்கினின்றும் இலத்தீனிலிருந்தும் இயலறிவுச் சொற்களையும், தாராளமாக எண்ணங்களை வெளியிடுவதற்கு வேண்டிய பல அரும்பதங்களையும் கடன் வாங்கிக் கொண்டனர். குரூசேட் போரின்போது, பல அரபி மொழிகள் பிரெஞ்சு பாஷையில் நுழைந்தன. பல வடமொழிப் பதங்களும் தமிழ்ப் பதங்களுங்கூட ஃப்ரெஞ்சில் அப்படியே வழங்குகின்றன. ஜெர்மெனி, ஸ்பெயினுடனும், ருஷ்யாவுடனும் போர் தொடர்ந்த காலை, அத்தேய மொழிகள் பல பிரெஞ்சில் கலந்து கொண்டன. ஃப்ரெஞ்சில் சமயவறைச் சொற்கள் ஜெர்மன் மொழிகள். கடல், வாணிபம், கப்பல், போர்ச் சொற்கள் இத்தாலியம் அரசியல், வாணிப மொழிகள் ஆங்கிலம். அராபிய சீன மொழிகளும், இந்திய மொழிகளும் ஃப்ரெஞ்சில் தக்கவாறு கலந்துள்ளன. இவ்வாறு, பலமொழிக் கலப்பால் பெருகிய ஃப்ரெஞ்சு மொழி இப்போது 32000 வார்த்தைகள் கொண்டு இன்னும் மிகப் பெருகி வருகிறது. இதைத் தவிரச் சிறப்புப் பெயர்கள் சுமார் 8000 உள்ளன. பிரெஞ்சு மொழி எல்லாத் துறைகளையும் ஆழம்பார்த்திருக்கிறது.

## ஃப்ரெஞ்சுக் கழகம்

இதற்குக் காரணம் **பிரெஞ்சுக்கழகம் (Academie francaise)**. இதையே தமிழருக்கு உதாரணமா

க்க் காட்டுகிறேன். பிரஞ்சுக் கழகம் 1634-ல் (13-ஆம் லூயி காலத்தில்) மந்திரி ரிஷெலு (Richelieu) என்பவரால் ஏற்பட்டது. இந்த ஃப்ரெஞ்சுக் கழகம் எல்லாக் கலைகளையும் வளர்த்து வருகிறது. பெரும் புலவர் மணிகள் (முற்காலத் தமிழ்ச் சங்கம்போல) இதில் விளங்கி, இதன் கொள்கைகளை வெற்றியுற நிறைவேற்றுகின்றனர். பல துறைக் கலைகள் ஒவ்வொன்றும் சுமார் 40 புலவர்களின் தலைமையில் ஆராயப்பட்டு வருகின்றன.

1. **மொழி வளர்ச்சிக் குழாம்** அற்புதமான ஃப்ரெஞ்சு அகராதி ஒன்று படப் பொலிவுடன் வெளியிட்டுள்ளது. லாரூஸ் அகராதி வெப்ஸ்டரை போன்றது. இன்னும் ஆண்டுதோறும் புதுப் புது மொழிகள் அச்சிட்டு அதிற் சேர்க்கின்றனர். உலக வீரர், பெரியார், அறிஞர் வரலாறுகள், இயற்கலை விளக்கம் எல்லாம் கோர்வையாக அழகிய படங்களுடன் ஃப்ரெஞ்சகராதியிற் காணலாம்.

2. **இலக்கணக் குழாம்** ஃப்ரெஞ்சிலக்கணத்தைச் சீர்பெற முறை வகுத்து, திட்ப நுட்பமாக, அரிய உதாரணப் பாடங்களுடன் வெளியிட்டுள்ளது. அது மாதிரித் தமிழிலக்கணம் எழுத வேண்டும்.

3. **இலக்கியக் குழாம்**, கவிதை, உரை நடை ஆகிய இரண்டையும் இரு கண்ணெனப் போற்றுகின்றது. தக்க ஃப்ரெஞ்சுப் புலவர்களுக்கு இக் கழகம் போதிய ஊதியந் தந்து, அவர் புலமையைத் தனதாக்கிக் கொள்ளுகிறது.

## ஆராய்ச்சி

4. இன்னும் இக்கழகச் சார்பில், இயற்கலையாராச்சிக்குழுவில், 72 பேர்கள் கணக்கு, உயிர் நூல்,

சட நூல், பயிர் நூல், தரை நூல், ஒளி நூல் முதலிய எல்லாக் கலைத் துறைகளிலும் உழைத்து, ஃப்ரெஞ்சு மொழியை ஜெர்மன் மொழிக்கு அடுத்தபடி ஒப்பற்ற இயலறிவுக் களஞ்சிய மாக்கிவிட்டனர். இம் மாதிரியே சரித்திர ஆராய்ச்சி செய்கின்றனர். ஓவியம், சிற்பம், இசை முதலிய இன்பக் கலைகள் நாற்பது நுண் கலைப் புலவர் தலைமையில் வளர்கின்றன. இன்னும் தத்துவ, மத ஆராய்ச்சி, அரசியல் ஆராய்ச்சிகள் 40 அறிஞர் தலைமையில் நடைபெறுகின்றன. ஒவ்வொன்றிற்கும் தனித்தனி இலாகாவும், ஒவ்வோரிலாகாவிலும் பல கிளைகளும் உண்டு. ஒவ்வொரு கிளைக்கும் தேர்ந்தெடுத்த புலவர் உள்ளனர். உதாரணமாக இயலறிவுக் கழகத்தைப் பார்ப்போம் (Academie of Sciences) : அதில் கோட்டுக் கணக்கு (Geometry), யந்திர ஆராய்ச்சி, பூகோளம், பௌதிகம், ரஸாயனம், சுரங்க ஆராய்ச்சி, செடியாராய்ச்சி, பொருளாதார ஆராய்ச்சி, உயிர் நூல் ஆராய்ச்சி, மருத்துவம் முதலியவை ஒவ்வொன்றும் முறையே ஆறு புலவர் பார்வையில் நன்கு நடைபெறுகின்றன. இவ்விதமாக **நன்னெறி, அரசியல்** இலாகாவில், தத்துவ நூல், சன்மார்க்கம், சட்டம், அரசியல், பொருளாதாரம், சரித்திரம் ஆகிய இவை முறையே எட்டுப் புலவர் தலைமையில் நன்கு செழிக்கின்றன. இப்புலவர்களுக்கு இருக்க இடமும், பிழைக்கப் போதிய வருமானமும் அரசாங்கமே தருவதால், எக்கவலையுமின்றிப் புலவர் மணிகள் தாய் மொழிக்காகப் பாடுபடுகின்றனர்.

இம் மாதிரித்தான் பாண்டியரும், சோழ மன்னரும் அக்காலம் கலை வளர்த்தனர்.

போல்ஷிவிக் ரஷ்யா ஒரே ஆண்டில், ஒவ்வொரு ரஷ்யக் கரத்தையும், தோளையும், மதியையும் நாட்டின்

முன்னேற்றத்திற்காக வேலை செய்வித்தது. தமிழ்க் கைகளனைத்தும் தமிழாலயப் பணியில் ஊன்ற வேண்டும் தமிழ்க்கலை வளர்ச்சிக்கு ஏராளமான புலவர் மணிகள் முன்வர வேண்டும். அவர்கள் உழைப்பெல்லாம் பொதுவாக வேண்டும். உழைப்பும், பயனும், பொருளும் பொதுமை பெறலே மிக வுயர்ந்த நலமாகும். அதையே உலகு இப்போது வேண்டுகிறது. அஃதாவது ஒரு கவிக்குக் கஞ்சிக் கவலை கூடாது. அவன் பிழைப்பிற்கு வேண்டியதைப் பொதுக் கழகம் தரும். தன் நூல்களை அச்சிட்டு விற்கும் கவலையும் அவனுக்கில்லை. அதுவும் கழகப் பொறுப்பு. இப்படியாகக் கலைவாணர் கவலையற்றுத் தமது கலைத்திறனால் நாட்டை அழகு செய்வர்; கலைக் கழகம் அவர்கள் கலைத்திறனை ஏற்றுப் பேணிப் போற்றி, விளக்கி, வணிகக் கழகத்தின் மூலம் விற்றுப் பொருளாக்கி, அப் பொருளைக் கலை வளர்ச்சிக்கே சேமநிதி யாக்கும்.

தமிழ்க்கலை விரிவடைய வேண்டுமாயின், ஒரு புதிய "**தமிழ்க் கழகம்**" தோன்றவேண்டும். அதில் அடியில் வரும் அருங்கலைக் கிளைகள் அனைத்தும் அமையவேண்டும். (1) இலக்கண இலக்கியப் பகுதி:—கவிதை, நாடகம், கதைகள், கற்பனைகள், புலவராராய்ச்சி, லாரூஸ், வெப்ஸ்டர் மாதிரி கலைக்களஞ்சியம் தயாரித்தல் முதலியன இதன் வேலை. இதற்குச் சுமார் 200 புலவர்கள் வேண்டும். (2) **தொழிற்பகுதி** :—ஓவியம், சிற்பம்; கல் - செம்பு - மரம்—கண்ணாடிகளில் வேலைப்பாடுகள், நெசவு, காகிதம் செய்தல்; இரும்பு, ஈயம், செம்பு, பித்தளை, வெள்ளி, தங்கம், முதலிய உலோகங்களை உருக்கி வார்த்துப் பல தொழில்களியற்றல்; தச்சு, கொத்து, கருமான் தொழில்; சங்கீதம் (இசை), நடனம் (கூத்து) முதலிய கலைகள் இதன்

சார்பில் தனித்தனியாக வளரவேண்டும். இவற்றிற் கெல்லாம் புதிதாக மேனாட்டு நூல்களை ஆராய்ந்து, சாத்திரங்கள் படங்களுடன் எழுதி வெளியிட வேண்டும். இப் பணிக்குச் சுமார் 300 பேர் வேண்டும். எல்லாரும் நல்ல தொழிலாளராயிருத்தல் வேண்டும்.

### வரலாற்றுக் குழு

(3) வரலாற்றுக் குழு, சரித்திரம், பொருளாதாரம், சமயம் முதலியவற்றை ஆராயும். இக் கழகம் தமிழர் சரிதையையும், நாகரிகத்தையும் பரப்பும்; முற்காலத் தமிழ் வீரர் சரிதைகளை ஆராயும்; இக் காலத் தமிழ் வீரர் சரிதையைக் குறித்து வைக்கும்; பல மதங்களை ஆராய்ந்து, தமிழர் பொதுநெறியான அருட் சமயத்தைப் புதுப் பொலிவுற விளக்கும்; பெரியார்களின் அருட்பாக்களை அச்சிட்டும் பரப்பும்; காலப் போக்கிற் கேற்றபடி தமிழர் நாகரிகத்தைச் சீர்திருத்தும்; பொருட் செழிப்பைக் கணிக்கும்; வீண் செலவுகளை ஒடுக்கும்; பத்திரிகைகள் வாயிலாகக் கழக ஆராய்ச்சிகளையும், பொதுநல விஷயங்களையும் நாற்புற நடப்புக்களையும் ஓவியங்களுடன் நல்ல தமிழ் நடையில் வெளியிட்டு, உயர்ந்த அறிவைப் பரப்பி, மக்களின் எண்ணத்தை உயர்த்தும்.

## கக. பத்திரிகைகள்

நமது புதுத்தமிழ் வளர்ச்சியில், நல்ல பத்திரிகைகளுக்குத் தக்க இடமுண்டு; அவற்றின் வளர்ச்சி, சேவையைக் குறித்து இங்கு இரண்டொருவார்த்தை:

பத்திரிகை காலக் கண்ணாடி; பொது மனப் பளிங்கு; மக்கள் வாழ்வை ஒளிபெறத் தூண்டும் உணர்ச்சிக்கோல். குறைகளைத் தடுத்து, நிறை புகுத்தலே பத்திரிகையின் வேலை. பத்திரிகையே சமுதா

யத்தின் நாக்கு. "பாரோர்வாய்ச்சொல் பரமன் வாய்ச்சொல்." பத்திரிகை சமுதாயக் கடவுளின் உள்ளமாகும். நீதியைப் போற்றியும், அநீதியைத் திருத்தியும், பத்திரிகைகள் நீதிபதியாய் விளங்குகின்றன. பத்திரிகை ஜனசமூகத்திற்குப் பலதுறையறிவைத் தரும் ஆசானாக விளங்குகின்றது. பத்திரிகையின் நோக்கம் மிகவும் மேலானது. அது மனித வர்க்கத்தின் ஒற்றுமை, அறிவு, நலம், செல்வம், ஊக்கம் முதலியவற்றை ஓங்கச்செய்கிறது. எண்ணங்களின் போக்கு வரவை நடத்தும் பெரிய சாதகம் பத்திரிகைகளே. நாட்டின் முன்னேற்றம் பத்திரிகையின் வாயிலாக நிகழும். ஒரு பத்திரிகை ஜனசமூகத்தை எப்படி வேண்டுமெனினும் மாற்றலாம். மனித சமூகத்தின் நலத்தைக் காட்டுவோன் பத்திராதிபன். அவன் ஒவ்வொரு நேர்மையான காரியத்திற்கும் தோழன்; வறுமை, மடமை, அடிமைப்பிணிகளைப் போக்குவோன்; தேசப்பெருமையும், தேச நலத்தையும் முன்னேறச்செய்பவன்; தேச ஒற்றுமையை வளர்ப்போன்; தேச உரிமையைக் காப்போன்; தீமை செய்வோரைக் கண்டிப்போன்; இரகசியமாக நடக்கும் தீமைகளையெல்லாம் பொது ஜனங்களின் நன்மைக்காக வெளியிடுவோன்; அக்கிரமம், அடிமைத்தனம் ஆகிய இவற்றின் பெரும் பகைவன்; தாழ்த்தப்பட்டோர், எளியோர், அநாதைகளுக்காகப் பரிந்து பேசுவோன்; எல்லாப் பிழைகளையும் சரிப் படுத்துவோன்; செய்திகளைக் குறிப்போன்; எண்ணங்களையும், செய்திகளையும் விளக்கிக் கூறுவோன், ஜனங்களைச் சுதந்தரப்படுத்தும் வீறு அவனிடமுண்டு. அவன் புதியவற்றை விளக்குவான்; பழையவற்றை நினைப்பூட்டுவான்; எதிர் காலத்தை அறிவிப்பான்; சுதந்தரத்தைக் காத்து, ஜன

சுயாட்சிக்குப் பெருந்துணையாய் நிற்பான். அவன் சமூக வாழ்வைச் சீர்திருத்துவான்; கல்வி, கலை, அறிவு முதலியவற்றை மக்களிடை ஓங்கச் செய்வான்.

பத்திரிகையால் நமது மக்களுக்கு அறவுணர்ச்சியும், தமிழன்பும், தொழில் மாண்பும், உரிமை வேட்கையும், ஒற்றுமையும் பெருகும். சகிப்புத் தன்மையும், அன்பும், நீதி நெறியும் வளரும்படி பத்திரிகைகள், வாழவேண்டும். சாதாரணமாகப் பத்திரிகைகள் தற்காலத்தில் அடியில் காணும் முக்கியமான விஷயங்களைப் பற்றி எழுதலாம்:—

1. நாட்டு, உலக வரலாறு, தமிழர் வரலாறு, சமுதாயச் சீர்திருத்தம்.

2. முற்காலத்து ஆட்சிமுறை, செல்வப் பெருக்கு, ஒழுக்க மேன்மை, நல்லறிவு முதலியவற்றை எழுதி, மக்களுக்குப் புத்துணர்வு பிறக்கும்படி செய்யலாம்.

3. சிறந்த உலக வீரர்களின் வரலாறுகளையும், பெரியோர் திருவாக்குகளையும் வெளியிட்டு, நாட்டில் வீரவுணர்ச்சியை ஓங்குவிக்கலாம்.

4. மனித வர்க்கத்தைத் தூய்மைப்படுத்தி, அறவுணர்ச்சி யெழும்படி, சீரிய சமயக் கட்டுரைகளை ஏராளமாக வெளியிடலாம். தேவாரம், திருப்புகழ், திருவாசகம், திருவாய்மொழி போன்ற அருள் நூல்களை விளக்கலாம்.

5. சுவை பொருந்திய சிறு கதைகளாலும், கட்டுரைகளாலும், நாடகங்களாலும், கற்பனைகளாலும், ஜன சமூகத்தின் ஊழல்களைக் காட்டி, அவற்றைத் திருத்த முயலலாம்.

6. நிகழ்காலக் குறிப்புகளை எழுதி, ஜனங்களின் அறிவை வளர்க்கலாம்; எதிர்கால உலகையும் தோற்றுவிக்கலாம்.

7. கிராமங்களின் சீர்திருத்தத்தைப் பற்றி விரிவாக எழுதலாம். கட்குடி, புகைக்குடிகளை யொழிக்கலாம்.

8. இந்து முஸ்லீம் ஒற்றுமை, இந்திய சமூக ஒற்றுமை, தன்னுதவி, எளிய வாழ்வு, உயர்ந்த நோக்கம் முதலியவற்றைப் பத்திரிகைகள் வற்புறுத்தலாம்.

9. அறிவு நூலுக்குரிய மொழிகளைத் தமிழாக்கி உலகிற்குத் தரலாம். "நாம் தமிழர்" என்னும் ஒற்றுமை உணர்ச்சியை வளர்க்கவேண்டிய வேலைகளைச் செய்யலாம்.

10. போர்களற்று, பொறுமையும், சுத்தமும், சுதந்தரமும், சமத்துவமும் பொலியும் ஒரு சாந்த உலகைக் காலம் எதிர்பார்க்கிறது. அக்காலத்தை நமது ஆத்ம சக்தியால் அருகில் கொண்டு வரும் வழிகளைப் பத்திரிகைகள் செய்யலாம்.

11. மக்களறத்தையும், மன்னறத்தையும் புகட்டி அறம் வளர்ப்பதே பத்திரிகைகளின் நோக்கம்.

இன்னும் எத்தனையோ நலங்களைப் பத்திரிகைகள் செய்யலாம்.

பத்திரிகை நடத்துவோன், உலகிற்குத் தான் கண்டு, நடந்து, அறிந்து, தரக்கூடிய ஒரு நோக்கும் வாக்கும் (Mission ahd Message) உடையனாக இருக்க வேண்டும். அத்தகைய நோக்குடன் சில பத்திரிகைகள் வேலை செய்தாற்கூட உலகை எவ்வளவோ முன்னேற்றமடைவிக்கலாம்.

அன்றன்று உலகில் நடப்பதைத் தினசரிப் பத்திரிகைகள் வெளியிடுகின்றன. அவற்றில், பொதுஜன வாழ்வைப் பெரிதும் சார்ந்த ஒன்றைப்பற்றி நடுக்கண்ட நீதி யுரைக்கலாம். ஓர் அநீதியைக் கண்டிக்கலாம். நல்லதைப் போற்றலாம். வரம்பு கடந்து மஞ்சட் கண்களால் பிறரைக் குறுகுறுவென்று குறித்து, நகையும் பகையும், இழிவும் வசையும் கொட்டுவது பத்திரிகை யறத்தைப் பழிப்பதாகும். நல்ல தமிழில் தெளிவாக நிகழ்ச்சிகளை மட்டும் காட்டினும் போதும். வாரப் பத்திரிகைகள், நாள் நிகழ்ச்சிகளை வடிகட்டி, இரத்தினச் சுருக்கமாக இரண்டொரு பக்கங்களில் ஈந்து, மீதிப் பக்கங்களில் தமிழர் முன்னேற்றம், தமிழ்க் கலை வளர்ச்சிக்கேற்ற கதைகள், கட்டுரைகள், பாக்கள், படங்கள், பல நாட்டுப் புலவர் மொழிகளை வெளியிடலாம். மாதப் பத்திரிகைகள் கழக ஆராய்ச்சிகள், அருங்கலை நுட்பங்கள், இயலறிவு ஆராய்ச்சிகள், அருங்கவிகள், ஓவியங்கள், தொழிலாளிகளுக்கு வேண்டிய குறிப்புகளுடன் பொலிந்து கண்குளிர வெளிவர வேண்டும். ஒவ்வொரு பத்திரிகைக்கும் பின்னே, ஒரு குறித்த நோக்கம் இருக்கவேண்டும். பத்திரிகைகள் சுயநல வம்பைப் பெருக்காமல், பொதுநலச் செழிப்பிற்கே உழைக்க வேண்டும்.

## உ௰. தமிழ்நாட் டமைப்பு

**பே**சும் மொழிப்படி மாகாணங்களைப் பிரித்தலே நலமென்பது அனைவரும் ஒப்புக்கொண்டதே. நம்நாட்டில் பல மொழிகள் வழங்கப்படுகின்றன. ஒவ்வோரிடத்திலும் ஒவ்வொரு மொழி பெரும்பாலும் வழங்கப்படுகிறது. ஒரே மொழி வழங்கும் பல ஜில்லாக்களை ஒன்றுகூட்டி, ஒரு நாடாக வரை

யறுத்து ஆளுவது ஆளுவோருக்கும் எளிது; ஆளப் படுவோருக்கும் நல்லது. சென்னை இராஜதானி, பம்பாய் இராஜதானி என்பதற்குப் பதிலாக, ஆந்திரம் தமிழகம், வங்கம், என்றிருப்பதுதான் பொருத்த மானது. ஒரு மொழியின் வளர்ச்சிக்கும் அம் மொழியாளரின் முன்னேற்றத்திற்கும் நாடு இருக்க வேண்டுவது இன்றியமையாதது. வங்காளிகள் தங்கள் நாட்டை வங்க தேசம் என்று பெருமை யாகப் பேசிக்கொள்ளுகின்றனர். அதற்கு உரிய மொழி வங்காளம். ஆந்திரர் தம் மொழி பேசும் ஜில்லாக்களை 'ஆந்திர தேசம்' என்று பெருமையுடன் சொல்லிக் கொள்ளுகின்றனர். ஆந்திர தேசம், ஆந்திர மொழி என்பதில் ஆந்திரருக்கு ஒரு வீர வுணர்ச்சி பிறக்கிறது.

"தமிழ் நாடு, தமிழ் மொழி" என்பதிலும் நந் தமிழருக்கு ஓர் அளவுகடந்த அன்பு பிறக்காவிடில், நம் மொழியும், நாடும் எங்ஙனம் முன்னேற்றமடை யும்? நம் பெரியார், தமிழ் நாட்டிற்கு எல்லை வகுத் திருக்கின்றனர். தமிழைத் தமிழரசர் கண்போலக் காத்துவந்திருக்கின்றனர். அத்தகைய தமிழ், தமிழ் நாட்டில் தழைத்து வளரும் என்பதில் ஐயமுண்டோ?

திருநெல்வேலி, மதுரை. திருச்சி, தஞ்சை சேலம், கோவை, வடஆற்காடு, தென்னாற்காடு, சித்தூர், சென்னை, செங்கற்பட்டு முதலியன தமிழ் வழங்கும் ஜில்லாக்கள். இவற்றை யெல்லாம் ஒன்று சேர்த்து ஒரு 'தமிழ்நாடு' ஏற்படுத்தல் வேண்டும். அத் தமிழ்நாட்டிற்குத் தனியாட்சி வேண்டும். அவ் வாட்சி தமிழரால் தேர்ந்தெடுக்கப்பட்ட 'தமிழவை' யால் நடத்த வேண்டும்.

## தமிழ் அவை

தமிழ் கிராமத்தின் ஒவ்வொரு தமிழ்த் தெருவும் தன் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கவேண்டும். இப்படி எல்லாத் தெருக்களிலும் சேரும் பிரதிநிதிகளில் ஐவர் தேர்ந்தெடுக்கப்பட்டுக் கிராமச் சபையாக ஏற்படுவர். இவர்களில் ஒவ்வொருவரும் மக்கள் முன்னேற்றத்திற்கு இன்றிமையாத கல்வி, தொழில், சுகாதாரம், காப்பு, நீதிமுதலிய ஐந்தொழில்களுக்கும் தகு முறையில் பொறுப்பாயிருப்பார். ஒவ்வொருவரும் தங்கள் கடமையை ஏற்ற ஊழியரைக்கொண்டு செய்வர். உதாரணமாக நீதித் தலைவருக்கு ஒரு பஞ்சாயத்துத் துணை செய்யும். சுகாதாரத் தலைவருக்கு ஒரு சுகாதாரச் சங்கம் உதவும். கல்வித் தலைவருக்கு ஒரு கல்விச் சங்கம் துணை செய்யும். இப்படி ஒவ்வொரு பாகுபாட்டிற்கும் ஒவ்வொரு சபை ஏற்படும். இச்சபையும் கிராம மக்களாலேயே தேர்ந்தெடுக்கப்படும். ஒரு தாலுகாவிலுள்ள கிராமத் தலைவரெல்லாம் கூடி 5 தாலுக்காத் தலைவரை தேர்ந்தெடுக்கலாம். தாலுகா தலைவர் எல்லாம், ஜில்லாத் தலைவர் ஐவரைத் தேர்ந்தெடுப்பார். ஜில்லாத் தலைவரெல்லாம் கூடி, மாகாணத் தலைவர் ஐவரைத் தேர்ந்தெடுப்பார்கள். இம்மாகாணத் தலைவரே தமிழ் நாட்டுத் தலைவர். இவர்களே தமிழ் நாட்டுக் கல்வி, தொழில், சுகம், காப்பு, நீதி முதலியவற்றிற்குப் பொறுப்பாளியாவர். இவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட முறையிலேயே கிராமக் கல்விச் சங்கம், தாலுக்காக் கல்விச் சங்கம், ஜில்லாக் கல்விச் சங்கம், தமிழ்நாட்டுக் கல்விச் சங்கம் அல்லது "தமிழ்ச் சங்கம்" முதலியன தேர்ந்தெடுக்கப் படும். இம்மாதிரியே தமிழ் நாட்டின் காப்பிற்காக "கிராமத்தமிழர் சங்கம்," "தாலுகாத் தமிழர்

சங்கம்,'' '' ஜில்லாத் தமிழர் சங்கம்,'' '' தமிழர்சங்கம்'' முதலியன ஏற்படும். அம்மாதிரியே சுகாதாரச் சங்கமும், தொழிற் சங்கமும் ஏற்படும். தொழிற் சங்கத்தில் பயிர்த்தொழில், கைத்தொழில், வாணிபம் முதலியன அடங்கும். " இவ்வைந்தன்முறை '' ( ஐந்தைந்தாய்த் தேர்தல் ) மிகவும் திறமையுடன் வேலை செய்யும். இம்முறையால் கிராமத்திலுள்ள ஒவ்வொருவரும் தமிழ் நாட்டின் ஆட்சியில் ஈடுபட்டு உழைப்பர். இஃது உண்மையான தமிழர் ஆட்சியாக மலரும். தமிழ்க் கல்வி வளர்ச்சிக்கும், தமிழ் நாகரிக முதிர்ச்சிக்கும் ஒவ்வொரு தமிழனும் தன்னாலானதைச் செய்யலாம். தமிழ்நாட்டுக் கைதொழில், விவசாயம், வாணிபம், சுகாதாரம் முதலியன தமிழராலே நன்கு கவனிக்கப்படும்.

இம்முறையால் தமிழ்நாட்டிலுள்ள தீமைகளை வெகு எளிதாக ஒழிக்கலாம். உதாரணமாக, கட்குடியை விலக்கச் சுகாதாரச் சங்கம் தீவிரமாக உழைக்கும். தீண்டாமையை ஒழிக்கத் தமிழர் சங்கம் உழைக்கும். குடிசைத் தொழில்கள் பெருகத் தொழிற் சங்கம் முயலும். நாட்டின் காப்பிற்குத் தமிழர் சபையே தொண்டர் படையாக உதவும். ஒவ்வொரு கிராமத்திலும் உடற் பயிற்சி மன்றம் ஏற்படுத்தி, தமிழ் நாட்டில் வீரர்களை உண்டுபண்ணத் தமிழர் சங்கம் வேண்டியவாறு முயலும். இவ்வகையாக, ஒரு நாட்டின் கல்வி, தொழில், சுகாதாரம் முதலியன நல்ல வளர்ச்சி பெறும்.

"நான் தமிழன்; எனது நாடு தமிழ்நாடு. என் மொழி தமிழ் மொழி. தமிழ்மொழியாளரெல்லாம் என் உறவினர். என்சமூகம் தமிழர் சமூகம். என் சாதி தமிழினம்,

சாதி, தமிழர் சாதி. தமிழர் நலமே என் மதம். என் கடமை தமிழ்நாட்டு ஊழியம். என் தெய்வம் தமிழணங்கு. என் மந்திரம் தமிழ். என் தோத்திரம், "எந்தாய் வாழ்க" என்று தமிழ்நாட்டில் பிறந்த ஒவ்வொரு வனும் தலைநிமிர்ந்து கர்ஜிக்கட்டும்.

## உக. வங்க இலக்கிய வளர்ச்சி

தற்கால இந்திய மொழிகளில் மிகவும் வளர்ச்சி பெற்றது வங்கமொழி. காவியம் வசனம் இரண்டிலும் அம்மொழி கலை வெற்றி பெற்றிருக்கிறது. உலக மொழிகளுக்கிடையே வங்க மொழிக்கு நிலைப்பான, மதிப்பான இடம் ஏற்பட்டுவிட்டது. வங்க இலக்கியங்கள் பன்மொழிகளில் வழங்குகின்றன. தமிழிலும் ஏராளமான வங்க நாவல்கள் வந்து பரவியுள்ளன. புத்தர் மகாவீரர் முதலிய அருளாளர் பேசிய காமதி மொழியிலிருந்து வங்கம் உண்டானது. அதில் பாதிக்கு மேல் சமுஸ்கிருதம்; ஏராளமான அரபி, பார்ஸி மொழிகள் கலந்திருக்கின்றன. காலத்திற் கேற்ற ஆங்கில மொழிகளையும் வங்காளிகள் கூசாமல் சேர்த்துக் கொள்கிறார்கள். பல மொழிகளின் சேர்க்கையால் வங்கமொழி வளம் பெற்று விளங்குகிறது. வங்க ஸாஹித்ய பரிஷத் தாய் மொழியை அமோகமாக வளர்த்து வருகிறது; அருமையான வங்க நூல்களை உலக மொழிகளில் மொழி பெயர்த்துப் பரப்புகிறது.

சுமார் முன்னூறாண்டுகளுக்கு முன்பே தலை தூக்கிய இம்மொழி எப்படி இவ்வளவு வளர்ச்சிபெற்றது? முயற்சியினாலேதான். வங்க நாட்டையும் மொழியையும் வளர்த்தது முதன்மையாகத் தாயன்பு, ஸ்வதேச பக்தி. அடுத்தபடி ஐரோப்பியக் கலையறிவு.

படித்த வங்காளிகள் நீண்டகாலம் ஆங்கில மோகம் பிடித்துத் தாய் மொழியையும் தேசாசாரத்தையும் கைவிடுத்திருந்தனர். பங்கிம் சந்திரர், அசுதோஷ் மூகர்ஜி, தாகூர் போன்ற புலவர் எழுந்து, அன்னிய மோக மொழித்துத் தாய்மொழி அன்பை ஒவ்வொரு வங்காளியின் உள்ளத்திலும் நிலைநாட்டினர். பங்கிம் சந்திரரை வங்க சந்திரர் என்றும், ரவீந்திரரை வங்க ரவி என்றும் சொல்லலாம். சந்திர சூரியர் போலவே இவர்கள் வங்க மொழிக்கு ஒளியீந்தனர். பங்கிம் சந்திரர் பிறந்து நூறுண்டுகள் ஆயின. அதன் ஞாபகார்த்தமாக அவர் எழுதிய நூல்களை யெல்லாம் சொக்கழகாகப் பெரிய எழுத்தில் வெளியிட்டிருக்கிறார்கள். அவற்றுள் பங்கிம் சந்திரர் வங்க மொழி வளர்ச்சியைப் பற்றி எழுதிய கட்டுரைகள் உள்ளன. அவை தமிழருக்குப் பயனுகும். கட்டுரைக் கருத்தை இங்கே தருகிறேன் :—

வங்க தேசத்திற்கு வங்க இலக்கியமே முதன்மை: இப்போது படித்தவர்கள் ஆங்கில இலக்கியங்களிலேயே மயங்கிக் கிடக்கிறார்கள். சிலரே வங்க நூல்களைப் படிக்கிறார்கள். கேட்டால் ஆங்கிலம் போலப் படிக்கத்தக்க ஆழ்ந்த நூல்கள் வங்கத்தில் இல்லை என்கிறார்கள். ஆங்கிலம் கற்றவர் சிலர்; கோடானு கோடிப்பேருக்கு இன்றும் தாய்மொழியே தாரகமாயிருக்கிறது. அவர்கள் உள்ளத்தைத் தாய்மொழியே தொடமுடியும். நாம் ஆங்கிலத்தில் விடிய விடியப் பேசினுலும் எழுதினுலும் பயனில்லை. தாய்மொழியில் ஒரு வார்த்தை சொன்னல் அது ஜனங்களின் உள்ளத்தில் உடனே உறைக்கும். அதனுலேதான் பொது ஜனங்களுக்குத் தாய்மொழி இலக்கியங்களை எழுதி வழங்க வேண்டுமென்கிறேன். பழங்கவிகள் கீதகோவிந்தம்போல ஆரியத்தில் பாடினர்; தத்துவ

நூல்களை யெழுதிக் குவித்தனர்; நீதி சாஸ்திர மெழுதினர்; வியாக்கியானக் கிரந்தங்களை எழுதினர். புத்தக மூட்டைதான் பெரிது. பாஷை வளரவில்லை. கலை வளரவில்லை. பண்டிதர் சிலர் சமுஸ்கிருத நூல்களைப் படிக்கிறார்கள். பொதுஜனங்கள் ஹுக்காவும் காதல் பாட்டுமா யிருக்கிறார்கள். இப்போது படித்தவர்களுக்கு ஆங்கிலப் பித்தம் பலமாயிருக்கிறது. பண்டிதர்கள் வயற்றுப் பிழைப்பிற்காகப் பேனைப் பிடிக்கிறார்கள். வேறு வேலையில்லாதவர்கள் ஏதோ காமா சோமா வென்றெழுதுகிறார்கள். தகுந்த கல்விமான்கள் ஆங்கில மோகம் கொண்டிருக்கிறார்கள். இங்லீஷ்காரன் போல இங்லீஷ் பேசுவதே அவர்கள் ஆசை. வங்காளத்தில் கடிதம் எழுதுவது கூடக் குறைவு. பிறர் கண்டால் அவமானமென்று சிலர் ஒளிவு மறைவாக வங்க நூல் எழுதித் தமது பெயர்போடாமல் திருட்டுத்தனமாக வெளியிடுகிறார்கள். நன்றாக ஆங்கிலம் கற்றவர் சிலர் இப்போது நல்ல வங்க நூல்கள் புது முறையில் எழுதுகிறார்கள். ஆனால் அவை போதா.

மற்றொன்று; நல்ல விமர்சகர்கள் இன்னும் உண்டாகவில்லை. தமக்குப் பிடித்தவரா யிருந்தால், புத்தகம் பளபளப்பாயிருந்தால், ஏதோ சுமாராக விமர்சனம் எழுதுகிறார்கள். சிலர் தாறுமாறாக எழுதி நல்ல நூலாசிரியர் மனம் புண்பட்டு "ஏனிந்த பேனைப் பிடித்தோம்" என்று எண்ணும்படி செய்துவிடுகிறார்கள். ஒரு பிரபல ஆசிரியர் சொந்த மனஸ்தாபத்தால் ஒரு நல்ல ஆசிரியரையோ நூலையோ தாக்குகிறார், அலட்சியம் செய்கிறார். ஜனங்களுக்கு அவர் வார்த்தை ஏறுகிறது. நல்ல ஆசிரியர் மதிப்பிழக்கிறார். அவர் பேனை செய்யவேண்டிய மகத்தான காரியம் தடைப்படுகிறது. விமர்சனக் கலை இலக்கிய

முன்னேற்றத்தைத் தூண்டும்படியாயிருக்க வேண்டும்.

மற்றொன்று. சிலர் எதெடுத்தாலும் "நடை கடினம். யாருக்கு விளங்கும்" என்ற பல்லவியைப் பாடுகின்றனர். சிறு பிள்ளைத் தனமாக எழுதுகின்றனர். பெரிய விஷயங்களை கம்பீரமான நடையில் எழுதினால், "இது யாருக்கும் பயனில்லை" என்று கூச்சலிடுகின்றனர். உலக அற்புதங்கள் ஐரோப்பிய ஆராய்ச்சிகள், சிறந்த ஆத்ம தத்துவங்கள், உயர்ந்த சிந்தனைகள் இவற்றைத் தாய் மொழியில் கொண்டுவர வேண்டும். நூல்களில் ஆழ்ந்த கருத்திருக்க வேண்டும். அதனாலேதான் புத்தி விசாலிக்கும். நாம் மேன்மேலும் அறிவின் உயர்வை எட்ட வேண்டும். கலையின் ஆழத்தைக் காணவேண்டும். நல்ல நூல்களைப் பரப்ப கிராமங்கள் தோறும் புத்தகசாலை இருக்க வேண்டும். தொண்டர்கள் தெருத் தெருவாகக் கொண்டு சென்று நூல்களை விற்க வேண்டும். பயனுள்ள நூல்களை எல்லாரும் வாங்கத் தக்க விலைக்குக் கொடுக்க வேண்டும்.

நீண்ட காலமாக சம்ஸ்கிருத பண்டிதர் நூல்களையே நம்மவர் கொண்டாடினர். ஜயதேவரின் கீத கோவிந்தமே அக்காலத்தில் சிறந்த பாடலாயிருந்தது. அக்பர் காலத்தில் கவிகங்கணர் சண்டி கீர்த்தனம் பாடினார். பிறகு வித்யாபதி கண்ணன் காதலில் சொக்கி, அரிய கீதங்களைப் பாடினார். இவற்றை பைராகிகள் பாடுகிறார்கள். சைதன்யர் காலத்தில் பக்திரச கீர்த்தனங்கள் பல உண்டாயின. சைதன்ய சரிதாமிருதம் எழுந்தது. காசிதாஸ் மஹாபாரதம் எழுதினார். கிருத்திவாஸ் ராமாயணம் எழுதினார். நுதியா மன்னர் ஆதரவில் பாரத சந்திரர் போன்ற காதல் கவிகள் விளங்கினர். ஆனால் இன்னும்

உண்மையான கவிகள் உண்டாகவில்லை. பழங் குப்பைகள் பயனில்லை. [பிறகு வசைக்கவிகள் வந்தனர். நையாண்டி செய்து பாடினர். யார் நையாண்டி பலமாயிருக்கிறதோ, அவர்களைப் பாமர ஜனங்கள் மெச்சினர்.]

இப்போது ஏராளமான நூல்கள் வெளி வருகின்றன. அச்சு வாகனம் கக்கும் குப்பைகளே அதிகம். அறிவு முதிர்ந்த ஆசிரியர்கள் சிலரே. பலர் கத்துக் குட்டிகள். சமுஸ்கிரத பாணியில் சிலர் எழுதிகிறார்கள். சமுஸ்கிரத நடைக்காரர் பழைய வழியிலே தான் போய்க் கொண்டிருக்கிறார்கள். பழைய சரக்குகளையே ஏலம் போடுகிறார்கள்:— அதே மன்மதன், பஞ்ச பாணம், வசந்தம், அதே ஒருதலைக் காமம், சந்திரன் எரிகிறதே, தென்றல் குத்துகிறதே என்ற புலப்பம்; சந்திர முகம், தாமரைக்கண், மேகக் கூந்தல், கோவை மூக்கு—என்று அதே பெண் வர்ணனை, திருப்பித் திருப்பி அதுதான்! நடையா, எல்லாம் கரடு முரடான சமுஸ்கிரத பதங்கள்! ஜனங்களுக்கு எளிதான பேச்சு நடை கலந்தால் பண்டிதர் கூப்பாடு போடுவர்!

இந்த சமுஸ்கிரத வெறியை ஒழித்து, எல்லாருக்கும் எளிதாக விளங்கும் வங்க நடை எழுத இப்போது சில அறிவாளர் எழுந்துள்ளார்கள். அவருள் காளிப்ரஸன்ன சிங் சிறந்த நாவலர். தீனபந்து மித்திரர் நாடகப் புலவர்; மைகேல்மது ஸூதனதத்தா சிறந்த கவி. ஈசுவர சந்திர வித்தியாசாகரர் பெரிய அறிவாளி; புலவர்; கைம்பெண் மறு மணத்திற்கு அரிய தொண்டு செய்தவர்; பள்ளி மாணவருக்கு நல்ல பாட புத்தகங்கள் எழுதினவர். ஷேக்ஸ்பியரின் ப்ராந்தி விலாஸம், சீதா வனவாசம், சகுந்தலம், வேதாளக் கதைகள், மஹாபாரதத்தில் ஒரு பகுதி

இவற்றை அவர் மொழி பெயர்த்திருக்கிறார். பண்டிட் ராம நாராயண தர்க்கரத்னரும் மாலதீமாதவம், சகுந்தலம் முதலிய பல நூல்களை மொழி பெயர்த்திருக்கிறார். ஆனால் இந்த மொழி பெயர்ப்புகளெல்லாம் படாடோபமான பண்டித பாஷையிலிருக்கின்றன. மொழி வளர்ச்சிக்கு இம் மொழிபெயர்ப்பு மட்டும் போதாது. புதிய இலக்கிய நடை, பழம் பண்டிதர் நடையுமின்றி, வெறும் கொச்சையுமின்றி, இனிய எளிய மாசற்ற சொற்களால் அமையவேண்டும். மைக்கேல் மது சூதனர் அரிய கவிகளும் நாடகங்களும் ஏராளமாக எழுதியிருக்கிறார். அவருடைய புதிய நடையையும், வெண் கவிதைகளையும் எதிரிகள் கடுமையாகக் கண்டித்துத் தூற்றினர். இருந்தாலும் அவருடைய புகழ் பெரிது. அவர் மேகநாத வதம், திலோத்தமை சம்பவம் என்னும் இரண்டு மஹா காவியங்கள் எழுதினார். இரண்டும் வெற்றுக் கவிதைகளே. மேகநாத காவியமே அவரது சிறந்த நூல். வங்க மொழியிலேயே சிறந்த மஹா காவியம். அஃது இந்திரஜித்து வதத்தைப் பாடுவது. திலோத்தமை, சுந்தானு சுந்தர் வதத்திற்காக பிரம்மா திலோத்தமைய்யைப் படைத்த சம்பவத்தைச் சொல்வது. அவரது நாடகங்களில் "சர்மிஷ்டை" உயர்ந்தது. எனினும் வங்க நாடகம் இன்னும் வளர்ச்சி பெறவில்லை. மைகேல் மதுசூதனர் "இதுவா நாகரிகம்?" என்றொரு நாடகம் எழுதியிருக்கிறார். அதில் ஆங்கிலம் படித்தவர் செய்யும் இடம்பமும், களியாட்டமும், குடியும், கூத்தும், அடிமைத் தொழிலும், அட்டகாசமும் பொருத்தமாக வர்ணிக்கப் பெற்றுள்ளன! வங்க இலக்கியத்தில் கவிதை, நாவல், நாடகம் பலவுள்ளன. அனைத்தும் படிப்பவர் உள்ளத்தில் சிறந்த கலையுணர்ச்சி எழுப்புவன. கடவுளுணர்வு தருவன.

பம்கிம் சந்திரருக்குப் பிறகு பல மேதாவிகள் வங்க இலக்கியத்தை அலங்கரித்தனர். இராம கிருஷ்ண பரமஹம்சர் சீடரான கிரீஷ்சந்திரகோஷ் பல அரிய நாடகங்கள் எழுதி நடித்தார். திவிஜேந்திர குமாரர் வீர நாடகங்கள் பல எழுதினர். எத்தனையோ அருட் புலவர் தோன்றி வங்காளத்தை உலகம் வணங்கும்படி செய்தனர். அவருள் நால்வரை நாம் மறக்க முடியாது. (1) வேதாந்த முழக்கத்தால் உலகை வென்ற விவேகானந்தர்.

(2) வீர முழக்கத்தால் அரிய தேச சேவை செய்த சித்தரஞ்சன தாசர். (3) யோகச் சுடரான அரவிந்தர். (4) உலகைக் கலைவெற்றிகொண்டு குரு தேவராக விளங்கிய தாகூர். இவர்களால் பாரத நாடே பெருமை பெற்றது. இவர்கள் செய்த காரியத்தை நமது தமிழர் தமிழுக்காகச் செய்ய வேண்டும். வங்கக் கலை உலகம் வியந்து போற்றும் படி முன்னேறியிருக்கிறது. பாரத நாட்டை அறிய உலகம் வங்காளிகள் எழுதிய இலக்கியங்களையே முதலில் படிக்கிறது.

தமிழர் தமிழால், உலகின் முன் தமிழ் நாடு சிறக்க, அருட் பணி புரியவேண்டும். தமிழ்க் கலை வாணி உலகு போற்ற முன்னேறவேண்டும். அந்நாளை விரைவில் எதிர்பார்ப்போமாக!

## ௨௨. புதிய தமிழ்ப் புரட்சி

(ரேடியோப் பேச்சு)

**ந**மது தமிழ், வருங்காலத்தில் கலை முடி தாங்கப் போகிறது. நாம் ஒரு நவயுகத்தில் இருக்கிறோம். நம்மைச் சுற்றிலும் மறு மலர்ச்சித் திருவிழா நடக்கிறது. அந்த மறுமலர்ச்சியில் இரண்டு சக்திகள் சேர்ந்துள்ளன. ஒன்று **ஐரோப்பியக் கலை** வேகம்;

இரண்டாவது நமது நாட்டிற்குரிய அருளுணர்ச்சி! இரண்டும் உடலும் உயிரும்போலச் சேர்ந்தே வருங் காலக் கலையை அமைக்கும்.

5000 ஆண்டுகளாகக் கால வெள்ளத்தில் தத்தளித்து வந்த நமது தமிழ், இன்று புதிய இளமை யுடன் விளங்குகிறது. ஆங்கிலப் பயிற்சி நம் எண்ணங்களை விசாலப்படுத்தியது; வேறுபாடுகளை ஒழித்தது; பழைய மாமூல் கட்டுப்பாடுகளைத் தகர்த் தது. நமது மனம் உலகளவு விரிந்தது. உலகம் எப்படி முன்னேறுகிறது, ஆங்கிலம், ஃப்ரெஞ்சு, வங்காளம் போன்ற மொழிகள் எப்படி முன்னேறு கின்றன என்பதை நாம் இன்று நன்ருக அறிந்து கொண்டோம். அந்த மொழியிலுள்ள அரிய இலக் கியங்களெல்லாம் — தமிழில் வந்து குவிகின்றன. அதனுல், நம்து உணர்வில் பல நாட்டு மனப்பான்மை களும், புலவர் மேதையும் வந்து ஐக்கியமாகின்றன. அத்துடன் நமது தமிழ் **கம்பனையும்**, **வள்ளுவரையும்**, **தாயுமானவரையும்** தந்தது. அஃது எந்த மொழிக்கும் இளைத்ததில்லை. முறையாக வளர்த்தால் அது கலை யுலகை ஆளும் என்ற தைரியம் நமக்குப் பிறந்திருக் கிறது. சென்ற பத்தாண்டுகளாகத் தமிழ் வளரும் வேகத்தையும், போட்டி போட்டுக் கொண்டு தமிழை வளர்க்க முன் வரும் எழுத்தாளர்களையும் பார்த்தால் தைரியம் அதிகமாகிறது.

தமிழ் மறு பிறப்பு எடுத்துள்ளது. இனிப் பழைய வழிக்குத் திரும்பாது. சில பழம் பாடல்களை வைத்துக்கொண்டு, "எமது தமிழே பெரிது" என்ருல் உலகம் ஒப்பாது. 'சிவனைத் தூதனுப்பியதும், முதலை விழுங்கிய பாலனை அழைத்ததும், எலும்பைப் பூங் கோதை யாக்கியதும், கல்லைத் தெப்பமாக்கியதும் எமது தமிழ்தானே' என்று புராணம் பேசும் காலம்

போய் விட்டது. மொஹஞ்சதாரோ சரக்குகளும் நவநாகரிகத்திற்குப் பதில் சொல்லமுடியாது. குமரிக் கண்டப் பேச்சும் பயனில்லை. முதுநாரை முதுகுருகு முதலிய எத்தனையோ சாத்திரங்கள் தமிழில் இருந் தன. அத்தனையும் அந்தப் பாழும் கடல் அள்ளி விழுங்கியது. ஐயோ என்று தலையில் கை வைக்கவும் காலமில்லை. இறந்த காலத்திற்கு அந்தக் கடலிலேயே முழுக்குப் போட்டு, தற்பெருமைத் தம்பட்டங்களைக் கட்டி வைத்து, இனி வருங்காலத்தில் தமிழ் உலகில் தலை நிமிர நாம் பாடுபட வேண்டும். "தொல்காப் பியர் முதல் கம்பர் வரையில் மாணிக்கவாசகர் முதல் வள்ளலார் வரையில் எத்தனையோ அருட் புலவர் இருந்தனர். கரிகாலன், செங்குட்டுவன், இராஜராஜன் போன்ற மன்னாதி மன்னர்கள் இருந் தனர். எமது தமிழுக்குச் சமானமா?" என்று மார் தட்டித் தூங்கும் பழக்கமும் இனிக் கட்டுடன் கூடாது; காலம் மாறிப்போனது.

முன்னே வடவேங்கடமும் தென்குமரியும் தமிழ் எல்லைகளாயிருந்தன. இப்பொழுது அங்கே தெலுங் கும் இங்கே மலையாளமும் இரண்டிற்கும் நடுவே தமிழும் இருக்கின்றன. எழுத்திற்கும் பேச்சிற்கும் சம்பந்தமே யில்லாமல், ஜில்லாவுக்கு ஒரு மாதிரியா யிருக்கிறது. மதுரையில் 'இழுத்துச் சென்றது' சென்னையில் 'இஸ்துகுனு போறது.' ஆங்கிலமும் இந்தியும் கனவேகமாகப் பரவுகின்றன. அவற்றின் எண்ணங்கள் நம் எண்ணங்களிற் கலந்து வருகின் றன. இன்று நாம் பேசும் தமிழோ ஒரு கதம்பம். அதில் வடமொழி, தெலுங்கு, கன்னடம், மகாராஷ் டிரம், உருது, பார்ஸி, அரபி, ஆங்கிலம் ஆகிய பல மொழிகள் கலந் திருக்கின்றன. கலப்பில்லாத மொழியே உலகில் கிடையாது. 'தனதே, தனக்கே'

என்று எதையும் இனி மூடிவைக்க முடியாது. மனித வாழ்வு பாசிக் கூட்டமன்று. அது சல சலத்தோடும் ஜீவநதி போன்றது. அதில் பல அருவிகள் கலக்கும். தமிழில் உள்ள வேதாந்த சித்தாந்தச் சொற்களெல்லாம் வடமொழி—ஆத்மா, பந்தம், முக்தி, சிவம், கல்யாணம், யோகம், ஞானம், கைவல்யம், சச்சிதானந்தம், பரப்பிரம்மம் முதலியன உதாரணங்கள். நமது அரசியல் விவகாரச் சொற்கள் உருது, ஆங்கிலம்—வக்காலத்து, இஸ்தியார், முன்சீப், வக்கீல், ஸமன், படி மெமோ, அபிடவிட், பைஸல், தாக்கல் முதலியவை உதாரணம். நமது தின்பண்டங்களில் கூட வடநாட்டு மொழி புகுந்து வயிற்றில் தினம் ஜீரணமாகிறது. லட்டு, ஜிலேபி, ஹல்வா, பூரி, மிட்டாய், கீர், ரவாகேசரி, போண்டா, ஷர்பத்...இத்தியாதி. ஆதலால் இன்று தனித் தமிழ் முயற்சி மட்டும் போதாது. நமது மொழிக்கே உரிய வார்த்தைகளைப் பிரித்தெடுத்துத் தருவோர் தருக! அவர்களை நாம் வெறுக்கவில்லை.

ஆனால் இன்று கட்டுக்கோப்புடன் தமிழ் வளர்க்கும் இளம் எழுத்தாளரை யாரும் பிரதிவாதிகளாக எண்ணக் கூடாது. தமிழில் இன்னும் ஆயிரக்கணக்கான வார்த்தைகள் வரவேண்டும். ஒரு நல்ல புத்தகசாலைக்குச் செல்லுங்கள். பீரோ பீரோவாக ஆங்கில நூல்கள் பள பளக்கின்றன. தமிழ் ஒரு மூலையில் உறங்குகிறது. அடடா! எத்தனை நாவல்கள், கதைகள், கட்டுரைகள், மகா காவியங்கள், பாடல்கள், நாடகங்கள், கலை விளக்கங்கள், கணித-பௌதிக-ரசாயன-தாவர-பூமி சாஸ்திரங்கள், தத்துவ நூல்கள், ஞான நீதிகள் அந்த ஆங்கில பாஷையில் மலை மலையாகக் குவிந்து கிடக்கின்றன... அச்சு வாகனம் கலையருவி பொழி

கிறது! அதை மொழிபெயர்க்க வார்த்தையில்லாமல் திண்டாடுகிறோம். பள்ளிப்பிள்ளைகளுக்கு ஸயன்ஸ் நூல் ஒருவாறு எழுதலாம். ஆனால் ஒரு பெரிய பௌதிகரசாயன சாஸ்திரத்தையோ, கணித யந்திர நூல்களையோ ஷேக்ஸ்பியரையோ மொழி பெயர்க்கும்போது நமது வார்த்தையில்லாத் திண்டாட்டம் வெட்டவெளிச்ச மாகிறது. எஸ்கிமோ பாஷையிலிருந்து கடன் வாங்கியாவது, நாம் இக் காலத்திற்கேற்றபடி இலக்கியங்களை பெருக்கவேண்டும். ஓர் ஆங்கிலப் பெரும் பேரகராதியை இன்றுள்ள தமிழில் மொழி பெயர்க்க முடியாது. ஆயிரக்கணக் கான புதிய பதங்கள் கண்டுபிடிக்கவேண்டும். உலகம் ஒரு பாஷையை மதிக்க வேண்டுமானால், அஃது உலகைப் புறக்கணித்துத் தனிச் செருக்குடன் வாழக் கூடாது. அதில் உலகம் மதிக்கும் படியான அறிவுச் செல்வம் நிரம்பி யிருக்க வேண்டும். இன்று ஆங்கிலம், ஃப்ரெஞ்சு முதலிய மொழிகளை உலகம் பாராட்டிக் கற்பதன் இரகசியம் இதுவே. ஆங்கிலம் இன்று உலகின் பொதுவுடமையா யிருக்கிறது. அதைப்போலத் தமிழையும் உலகின் பொதுச் செல்வ மாக்கி, அதில் பல மொழி நயங்களும் வந்து தாராள மாகச் சேர இடந்தர வேண்டும். இலக்கிய உலகில் இன்று ஒரு ஜனநாயகம் நடக்கிறது. பழம் பண்டிதர் கையிலிருந்து, இலக்கியம் பொது ஜனங்களின் கைக்கு வந்து விட்டது. ஆசிரியனுக்கும் பொது ஜனங்களுக்கு மிடையே விமர்சகன் இருக்கிறான். அவன் பொதுஜனவாக்கின் பிரதிநிதியாகவே பேனா வோட்டுகிறான்.

பொதுஜன சம்மதம் பெறாத எதுவும் இனி மதிப்படையாது. தமிழைத் தமிழர் மட்டுமின்றி ஐரோப்பியரும் வளர்த்திருக்கிறார்கள். வீரமாமுனி

வர், போப், கால்ட்வெல் போன்ற பாதிரிமார், பெரிய தமிழ்ப் புலவராக விளங்கினர். சங்கத் தமிழ் புரியாமல் திண்டாடிய காலத்தில், இந்த பாதிரிமார்களே எளிய வசன மெழுதி வழி காட்டினர்கள். அவர்களே அச்சு யந்திரத்தையும் நமக்குத் தந்தார்கள். உமர் புலவர், மஸ்தான் சாயபு போன்ற இஸ்லாமியரும் நமது தமிழை வளர்த்தார்கள். சங்ககாலத்திலேயே ஏராளமான பௌத்த சமணப் புலவர் தமிழில் மகா காவியங்களை எழுதினர். நன்நூலும், சூளாமணி நிகண்டும், சிந்தாமணியும், சிலப்பதிகாரமும் சமணர் தந்த செல்வங்களே. சைவத்திருமுறைகள், வைணவர் திருவாய்மொழி, வள்ளுவர் குறள், திருப்பாணர் பாசுரம் எல்லாந்தாம் நமது மொழியை வளர்த்தன. ஆதலால் இன்று தமிழ் ஒரு சாதிக்கோ, மதத்திற்கோ, வகுப்புக்கோ உரியதன்று. அஃது உலகின் இலக்கியச் செல்வம். இந்த விசாலமான நோக்கத்தைக் கொண்டு' இனி நமது தமிழ் அமோகமாக முன்னேறும் வழியைக் காண்போம்:

இந்தி, ஆங்கிலம், வங்கம் போன்ற மொழிகளுக்கு நிகராகத் தமிழ் வளர வேண்டும் என்ற ஆவல் எல்லாருக்கும் இருக்கிறது. அதற்கேற்றபடி நாம் தமிழில் சில திருத்தங்கள் செய்தே தீர வேண்டும். அது காலதேவதையின் கட்டளை. அதை யாரும் மறுக்க முடியாது. தமிழ் எழுத்துக்களில் இனி மாறுதல் உண்டாகும். உலக பாஷைகளையெல்லாம் தமிழிலேயே எழுதவேண்டும். இப்போதுள்ள நிலையில் ஸம்ஸ்கிருதத்தைக் கூடத் தமிழில் எழுத முடியாது. கசடதபக்களில் இரண்டு மூன்று நான்காம் எழுத்து நமக்கில்லை. ஆங்கிலம் உருது எழுதவேண்டுமானால் **F, Z** போன்ற ஒலிகள் இந்திய பாஷையிலேயே இல்லை. இதற்காக இப்போதிருக்

கும் எழுத்தை உருக்குலைக்க வேண்டாம். புள்ளி, கோடு, ஆய்த எழுத்து மூன்றையும் கொண்டே உலக பாஷைகளை யெல்லாம் தமிழில் எழுதும் வகை இதே நூலில் விளக்கப் பெற்றுள்ளது. மற்ற இந்திய மொழிகளெல்லாம், வட மொழியை அனுசரித்தே எழுத்தும், இலக்கணமும், அமைத்துக் கொண்டுள்ளன. வங்காளம், குஜராத்தி, மராத்தி, தெலுங்கு, கன்னடம், மலையாளம், எதை எடுத்தாலும் பாதிக்குமேல் ஸமுஸ்கிருதமே. ஸமுஸ் கிருதம் இந்த மொழிகளிற் புகுந்து சிரஞ்சீவியாயிருக் கிறது. "தமிழில் 'பாவம்' பாவமாகிறது. 'சர்வம்' சருவமாகிறது" என்று பிறர் கேலி செய்கின்றனர். வருங்காலத்தில் அந்தந்த பாஷைகளிலிருந்து வந்த மொழிகளை, அப்படி யப்படியே எழுதவும் உச்சரிக் கவும் செய்வர். ரேடியோவை இரேடியோ என்னுர். பரமேஸ்வரனை பரமேசுவரன் என்னுர். ஆங்கிலத்தில் அச்செழுத்து, கையெழுத்து, சிறிய எழுத்து, பெரிய எழுத்து என்று நாலுவகையுண்டு. இந்திய பாஷைகளி லெல்லாம் கூட்டெழுத்துக்கள் அதிகம். இவையின்றித் தமிழ் எழுத்துக்கள் முத்துக் கோத்ததுபோலத் தனித் தனியாயிருக்கின்றன. வடமொழி, ஆங்கில ஒலிகளை நிரப்பப் புள்ளியும் கோடும்போட்டு வகை செய்தால், தமிழ் எழுத்துக்கள் உலகின் கருத்தைக் கவரும். தமிழில் பால் விகுதிகள் இயல்பா யுள்ளன. இந்தி, உருது, இலத்தீன், ப்ரெஞ்சு மொழிகளில் அஃறிணைப் பொருள்களுக்கெல்லாம் ஆண் பெண் பார்க்கவேண் டும். இந்தியில் "மிட்டாய் தித்திக்கிருள்; பட்சணம் தித்திக்கிருன்" என்பர். தமிழில் இந்தச் சிக்கலில்லை.

* * *

இனித் தமிழ் இலக்கணத்தில் ஒரு புரட்சி உண்டாகும். அச்சுப் புத்தகங்கள் இல்லாத காலத் தில் மனப்பாடம் செய்ய எளிதாக, முற்காலம்

சூத்திரங்கள் ஆசிரியப்பாக்களாக அமைந்தன. இக் காலம் பிரெஞ்சு ஆங்கில மொழிகளில் உள்ள இலக் கணங்களைப் பார்த்தால், அவற்றிற்காகவே பாஷை கற்க வேண்டுமென்று தோன்றும். தமிழ் இலக்கணம் என்றால் பலருக்குத் தலைவலியாயிருக்கிறது. பழைய தமிழில் எழுதிய எழுத்தும், சொல்லும், பொருளும், யாப்பும், அணியும் புதுத் தமிழ் உலகிற்கு வேப்பங் காயாயிருக்கின்றன. எளிய வசனத்தில் கதை களுடனும், ஆராய்ச்சிப் பாடங்களுடனும் இலக்க ணம் இனி வெளி வரும். வடமொழிப் பதங்களை வடமொழி போலும், ஆங்கிலப் பதங்களை ஆங்கிலம் போலுமே உச்சரிப்பர். சந்தியிலக்கணத்தில் பல மாறுதல்கள் ஏற்படும். 'நற்றா டொழாரெனின்' என்று இனி எழுதமாட்டார்கள். 'நல்தாள் தொழார் எனின்' என்றே எழுதுவர். இப்படிப் பதம் பிரித்து எழுதுவதால் பொருள் தெளிவாகிறது. இதற்குத் திருவாய் மொழியைத் தொகுத்த நாதமுனிகளே வழி காட்டியிருக்கிறார். இப்போது தனித் தமிழ்ப் புலவர் கூடப் பதம் பதமாகவே செய்யுள் எழுதக் காண்கி றோம். கருவி + ஆதி என்பதைக் கருவியாதி என்று எழுதினால், இக்காலம் எல்லாரும் சிரிப்பர். அங்கு சென்றான் என்பதை அங்குச் சென்றான் என்றார். கைநீண்டது என்பதைக் கைந் நீண்டது என்றார். மண்குடம் மட்குடமாகாது. பொன்தகடு, பொற்றகடு ஆகாது. தொண்டு செயல் துறவு என்பது, தொண்டு செயறுறவு என்று வழங்காது. கறபுறுக்களெல்லாம் ஒழிந்து போம்.

* * *

செய்யுள் இலக்கணத்தில், தேமாங்காய், புளி மாங்காய், கூவிளங்காய் கருவிளங்காய் எல்லாம் ஒரு புறம் இருக்கும். தற்கால வேகத்திற்கு இந்தக் கட்டுப்பாடு எதிர் நிற்க முடியாது. இக்காலம் கலைச்

சுவை அபாரமாகப் பெருகியுள்ளது. முற்காலத்தை விட இப்போது கவிச் சுவையும் ரசிகர் கூட்டமும் அதிகம். பெரிய பெரிய புலவர்களெல்லாம் விமர்சகன் பேனு முனையால் குத்து வாங்குகிருர்கள். போகப் போக, மனித மூளை கூர்ந்து, பரந்து, விரிந்து, ஆழ்ந்து செல்லுகிறது. இனிச் செய்யுட்கள் சுதந்தரமாக அமையும், இசைச் செல்வம் பெருகும். ராக தாளங்களும் மனோ பாவனைகளுமே பாட்டை ஆளும். வங்காளத்தில் மேனுட்டு வேகம் நிறைவாக உள்ளது. மேனுடு தனது யாப்பிலக்கணத்தைச் சிக்கலின்றி அமைத்துக் கொண்டிருக்கிறது. ஆங்கிலத்தில் தத்தா தத்தா தத்தா என்று செய்யுள் நடக்கும். பிரெஞ்சில் தத் தத் தத் என்று நடக்கும். வடமொழியில் கூட எதுகை மோனைக் கட்டுப்பாடுகள் கடுமையாயில்லை. தமிழிலேதான் செய்யுள் கடினம். அதிலேதான் எல்லையற்ற இன்பங்களும் அதிகம். வருங்கால யாப்பு மிகவும் எளிதாகும். அதற்கு அருணகிரி நாதரே வழிகாட்டினர். 'தனனதன தான' என்ற தானச் சத்தங்களால் அவர் அற்புதமான திருப்புகழ் செய்தார். அவரை யொட்டி அண்ணமலை ரெட்டியாரும் 'தனததானதனதான' என்ற சந்தங்கொண்டு காவடிச் சிந்துகள் பாடினர். இனி வரும் செய்யுட்களும் பாடல்களும் இந்த மாதிரியே சிக்கல்களில்லாமல் நடக்கும். கவிதை என்பது சாதுரியமான சொல்லடுக்கன்று. கவிதையென்பது உள்ளுணர்வின் ஒலிவடிவமே யாகும். எதுகை மோனை தளைகளெல்லாம் அதன் பணிப்பெண்களேயாம். ஷேக்ஷ்பியரும் மைக்கேல் மதுசூதனரும் பழங்காலச் சங்கப் புலவரும் எதுகையில்லாமலே வெண் கவிகள் (Blank verse) எழுதினர்கள். அவற்றை உச்சிமேல் வைத்துக் கொண்டாடுகிறோம். எதுகைமோனை விதிகள் பிரெஞ்சு மொழியில் மிகக்

கடுமையானவை. அதுவே இன்று இந்தக் கட்டுப் பாடுகளை உடைத்தெறிந்து சுதந்தரக் கவி (Vers, Libres) எழுதத் துணிந்துள்ளது. பதினாலாம் லூயி காலத்தைவிட இப்போது அந்த மொழியில் பத்துப் பங்கு கவிச்சுவை அதிகம்.

தமிழ் எழுத்தில் இன்று நடக்கும் புரட்சிதான் புதிய தமிழை ஆக்கும். பேச்சுத் தமிழே இனி எழுதுந் தமிழாகும். படிகம்போலத் தெளிவான நடையே பொதுஜன சம்மதமாகும். பேச்சிலும் இப்போதுள்ள கொச்சைகள் ஒழிந்து, ஒரு தெளிவு ஏற்படும். இனிப் பேச்சுக்கும் எழுத்துக்கும் விர சமான வித்தியாசம் இராது. இது பத்திரிகை யுகம். காலம் இதழாசிரியர் பேனு முனையில் ஆடுகிறது. இனி இப்போது நடக்கும் பத்திரிகைத் தமிழே பேச்சிலும் எழுத்திலும் வழங்கும். இலக்கியத்திலும் பேச்சு நடையே அதிகமாகக் காணும்.

ஒருமொழி நல்ல வளர்ச்சி பெறவேண்டுமானல், இரண்டு காரியங்கள் அவசியமாகும். ஒன்று உலகில் வளர்ச்சி பெற்ற மொழி நயங்களையெல்லாம் கொண்டு வந்து சேர்ப்பது. இது மொழி பெயர்ப்பாலும் தழு வலாலும் இயலும். மற்ருென்று தாய் மொழிக்கே உரிய கவிதைகளையும், இலக்கியங்களையும், சாத்திரங் களையும் உண்டாக்குவது. இதில் எத்தனை தனித் தமிழ்ப் பதங்கள் என்று இனி எண்ண மாட்டார்கள். இந்த மொழியில் உள்ள அறிவும் ஆராய்ச்சிச் செல் வமும் மனித சமுதாயத்திற்கு எவ்வளவு பயனுள் ளது என்றே உலகோர் மதிப்பிடுவர். தொல்காப் பியர் காலம் முதல், தற்காலப் புலவர் வரையில் உண் டான நூல்களெல்லாம் கவிதை இலக்கியம் இரண்டே. இவை போதா. ஆங்கில மொழியை ஷெல்லியும், ஷேக்ஸ்பியரும் மட்டுமே வளர்க்கவில்லை. ஆங்கிலப்

பேரகராதி இவ்வளவு அற்புதமான விரிவடைந்ததற்குக் காரணம், அந்த மொழியில் தோன்றிய விஞ்ஞானப் புலவர்களேயாவர். நியூடன், கெல்வின், மாக்ஸ்வெல், எடிஸன், ஃபாரடே போன்ற சாத்திரப் புலவர்கள் தம் ஆராய்ச்சிகளை உலகிற்கு விளக்கப் புதிய புதிய பதங்களை உண்டாக்கினார்கள். மேரி கூரி ரேடியம் கண்டுபிடித்த பிறகு, எத்தனையோ புதிய வார்த்தைகள் உண்டாயிருக்கின்றன. ஓர் ஆர்க்ரைட் நெசவு யந்திரம், கண்டுபிடித்த பிறகு, அதற்குரிய பல பதங்கள் உண்டாயின. நேற்று ஒரு மார்க்கோனி ரேடியோ கண்டுபிடித்ததும் அதை யொட்டி ஆயிரக் கணக்கான பதங்கள் உண்டாயின. நமது தமிழ் இனி உலக மதிப்பைப் பெற வேண்டுமானால், இந்தச் சாத்திரச் சொற்களை யெல்லாம் கூசாமல் ஐக்கியப் படுத்திக் கொள்ளவேண்டும். கலைச் சொற்கள் உலகிற்குப் பொதுவா யிருப்பதே நல்லது. அல்லது இந்தியா முழுதிற்குமாவது பொதுவான கலைச்சொல் அமைக்க வேண்டும். உலகம் கலந்து வருகிறது. மனித வாழ்வில் ஒரு பிரளயம் உண்டாகப் போகின்றது. தமிழர் பிறநாட்டாருடன் கலந்தே இனி வாழ நேரிடும். ஆதலால் முடிந்தமட்டும் சிறப்புச் சொற்கள் பொதுவானால் ஐக்கிய வாழ்க்கை எளிதாகும். நாமும் முயன்றாலும் இப்போதுள்ள ஸயன்ஸ் அதிசயங்களுக்குரிய சொற்களை யெல்லாம் தனித் தமிழாக்குவது சாத்தியமில்லை. ஒவ்வொரு யந்திரத்திற்கும் உரிய சொற்கள் பல உள்ளன.

## புலவர் சங்கங்கள் அமைக்க

வங்கம், ஆந்திரம், இந்தி முதலிய மொழிகள் புலவர் சங்கம் அமைத்து வேலை செய்கின்றன. தமிழுக்கும் புதிய புலவர் சங்கம் ஒன்று வேண்டும்.

நாட்டிலுள்ள பலதுறை வித்வான்கள் அதில் அங்க மிருக்க வேண்டும். அவரவர்க்கு இயன்ற கலைகளை ஆராய்ந்து படங்களுடன் நூல் எழுதி மாணவருக்குப் பயிற்ற வேண்டும். இந்த மாதிரியே பிரெஞ்சு மொழி யும் ஜப்பான் மொழியும் அபாரமாக வளர்ந்தன. ஜப்பானியத்தில் எல்லா நவீன சாத்திரங்களும் உள் ளன. இலக்கியம், காவியம், நாடகம், சங்கீதம், சித்திரம், சரித்திரம், கணிதம், பௌதிகம், ரசாயனம், தாவரம், வைத்தியம், பூகோளம், சோதிடம், தத் துவம், யந்திரம், அரசியல் முதலிய எல்லாச் சாத் திரங்களும் புலவர் சங்கத்திலிருந்து வெளிவர வேண் டும். உயர்ந்த தமிழ் நூல்களை உலக மொழிகளில் மொழி பெயர்த்து வழங்க வேண்டும். வங்காளம் அந்த வழியில் புகழ் பெற்றிருக்கிறது.

தமிழுக்கு நல்ல காலம் பிறந்து விட்டது. நாட் டில் தமிழுணர்ச்சி வீராவேசமாகக் கிளர்ந்துள்ளது. தமிழ் பரவ நமக்குப் பல நவீன சாதனங்களும் கிடைத்துள்ளன. தமிழர் வீறுபெற்றெழுக! புதுமை பெறுக, முன்னேறுக! எந்தாய் வாழ்க! எந்தமிழ் வெல்க!

### புது வாழ்வு

[புது டில்லியில் நடந்த இந்திய இலக்கிய மகாநாட்டில் முழங்கிய சொற்பொழிவு]

## உரு. சுதந்தர இந்திய மணிகள்

புது வாழ்வு பூத்தது! பல ஆண்டுகள் கண்ணீரும் புண்ணீரும் விட்டு வளர்த்த சுதந்தரக் கொடி இன்று இன்ப மலர் குலுங்குகிறது! கட்டும் கவலையு

மான காரிருள் ஒழிந்தது; அடிமை விலங்குகள் முறிந்தன; சிறைகள் தகர்ந்தன; இன்று சுதந்தர வசந்த வனத்தில் சுயேச்சையாக நடக்கிறோம்.

## இலக்கிய மாண்பு

இந்த உரிமையைத் தூண்டி, நம்மை வெற்றிக்கு நடத்திய சக்திகளில் **இலக்கியம்** ஒன்று. இலக்கியம் என்றால் பேச்சு, எழுத்து இரண்டையுமே குறிக்கிறேன். உலக வரலாற்றிலேயே நாவும், பேனாவும் அற்புதமான புரட்சிகளைச் செய்திருக்கின்றன. மனித சமுதாயம் இன்று பெற்றுள்ள நன்மையெல்லாம் இவற்றால் இயன்றன. வாளும், குண்டும், அரசியற் சூழ்ச்சிகளும் நாசம் செய்யும் தேசங்களுக்குப் புலவர் சொல்லும் எழுத்தும் ஆறுதல் அளித்தன.

மஜினியின் யங் இதாலி, கட்டுண்ட நாட்டிற்கு உரிமை யுணர்ச்சியும், கடமைத் திறனும் அளித்தது; கரிபால்டியின் வீர மொழிகள் ஆவேசமளித்தன; சுயேச்சாதிகாரக் கொடுங்கோலால் வருந்திய பிரான்ஸிற்கு வால்தேர் ரூஸோ முதலிய எழுத்தாளர், புதிய சுதந்தர சக்தியளித்தனர்; ரூஸோவின் சமுதாய ஒப்பந்தம் அமெரிக்காவின் விடுதலை வேகத்தையும் தூண்டியது. ஸர் தாமஸ் மூரின் யுடோபியா இங்கிலாந்தில் ஒரு ஸமதர்ம வேகத்தைத் தூண்டியது. அதுவே காரல் மார்க்ஸ் போன்ற சம தர்மிகளுக்கு ஆவேசமளித்தது. தோல்ஸ்தாய், லெனின், மாக்ஸிம் கோர்க்கி, புஷ்மான் போன்ற எழுத்தாளர் இலக்கியங்கள் கொடிய முடியரசைக் குமைத்து, எல்லாரும் ஒரு நிகராக வாழும் குடியரசை அமைத்தன. அரசியல் துறையில் மட்டு மன்று; சமயம், கலை, சமுதாயம், பொருளாதாரம் முதலிய எந்தத் துறையிலும்,

மனித வாழ்வின் ஒவ்வொரு மூலை முடுக்கிலும், இலக்கியம் புகுந்து, நன்மை செய்கிறது; நம் உடலின் ஒவ்வொரு மயிர்க் கண்ணிலும் இரத்த ஓட்டம் துடிக்கிறது. அதுபோல் உலக வாழ்வின் ஒவ்வொரு அணுவிலும் இலக்கியம் புகுந்து ஊக்கமும் ஆக்கமும் அளிக்கிறது.

## புலவர் வாக்கு

ஒரு நாட்டைவிட அதன் இலக்கியம் பெரிது. இங்கிலாந்தே போனாலும், ஷேக்ஸ்பியர் நாடகங்களுக்கு அழிவில்லை; அவை இருக்குமட்டும் ஆங்கிலப் பெருமை விளங்கும்; ஜெர்மனி போர்ப் புயல் வீசிச் சிறுமை யுற்ற போதும் கெத்தே, பெதோவன் முதலிய புலவர் பெயரைச் சொல்லிப் பெருமையடைகிறது. இத்தாலிக்கு தாந்தேயும் விர்ழிலும் அமரத் தன்மை யளிக்கின்றனர். கிரீஸ் பழைய மாண்பை இழந்தாலும், ஹோமரை இழக்கவில்லை. இதே மாதிரியே ஒவ்வொரு நாடும் புலவர்களால் புகழ் பெற்று விளங்குகிறது; புலவர் வாக்கே உலகம்...

## இந்திய இலக்கியம்

இந்தியாவிற்கு வருவோம். இந்தியர் உயிர்நாடி ரிஷிகள் வாக்கு; இந்து சமுதாயம், வேதம், உபநிடதம், கீதை, திருக்குறள், தேவாரம். திருவாசகம், திவ்யப்பிரபந்தம், சிலப்பதிகாரம், அருட்பா போன்ற பெரு நூல்களின் ஆவேசத்தால் உருவாகித் திருவோங்கி வளர்கிறது. மற்றெந்த நாட்டினும், ஆசிய ஜோதியான இந்தியா தனது வாழ்வையே கர்ம—ஞான—பக்தி யோகமாக்கித் தர்ம பலத்தால், ஆத்ம சக்தியால் வாழ்கிறது; இந்தியாவின் தார்மீக சக்தியே கண்ணன், புத்தன், சங்கரர் போன்ற

மஹான்களாக அவதரித்து, உலகிற்கு ஒளி காட்டியது. லெளத்ஸன், கொன்புத்ஸன் போன்ற சீன ஞானிகள் உரைகளில் புத்தர் உள்ளம் துடிக்கிறது. ஜாதுஷ்டிராரின் ஜெந்த வஸ்தாவில் வேத நரம்பு ஓடுகிறது; யூதரின் பழைய ஏற்பாட்டிலும், கிறிஸ்துவின் புதிய ஏற்பாட்டிலும் உபநிஷத்தின் உயிர் நாடி துடிக்கிறது. பாரத சக்தியே ஆசிய ஞான சக்தி; அதன் சுடரில் ஏற்றிய அருள் விளக்குகளே உலகின் இருளை ஒழித்தன: அலெக்சாந்தர் படையெடுப்பு வந்தது முதல், எத்தனையோ படையெடுப்புகளால் பாரதமாதா உடல் வலி குன்றிக் கவலைக் கண்ணீர் வடித்து, இன்று விடுதலை பெற்றாள்.

எனினும் அவள் மனவலி குன்றவில்லை; அவளுக்கே உரிய ஆத்மசக்தி தளரவில்லை. அழிவில்லாத சுத்தாத்ம ஞானத்தில் வேரூன்றி, நிஷ்காம்ய கர்மத்தில் கிளைகள் விரிந்து, சர்வாத்மப் பிரேமையாக மலர்ந்து, பேரின்பக் கனி குலுங்கும் பாரத நாகரிகம், காலப் புயலை எதிர்த்து நின்று, இன்று புதிய கற்பகச் சோலையாக விளங்குகிறது. வேதம், வேதாங்கம், மனு பராசர ஸ்மிருதிகள், சாரக சுஸ்ருதர்களின் ஆயுர்வேத சாஸ்திரங்கள், வராஹ மிஹிரரின் வான நூல், சாணக்கரின் அர்த்த சாஸ்திரம், கண்ணன் கீதை, வியாச பாரதம், வால்மீகி ராமாயணம், சுக பாரதம்—முதலிய எத்தனையோ ஆரிய நூல்கள் இந்தியர் வாழ்வில் ஊறி, இந்திய நாகரிகத்தின் இதயத் துடிப்பாக விளங்குகின்றன.

## தமிழன் பெருமை

இந்த நாகரிகப் பணியில் தமிழின் பங்கு மிகப் பெரிது; தமிழின் பெருமையை நான் சொன்னால், தற்பெருமை என்று நினைக்காதீர்கள். காலச் சுழல்

தமிழைத் தென் கோடியில் ஒதுக்கிவிட்டாலும், தமிழின் ஆற்றல் இன்னும் வளர்ந்து கொண்டே போகிறது. ஆரியம், செந்தமிழ் இரண்டுமே இந்திய ஞானத்தின் சேம நிதிகள். இந்தியாவுக்குப் பெருமை யளிக்கும் அருட் பாடல்களெல்லாம் இந்த இரண்டு மொழிகளிலேயே அடங்கியுள்ளன — தொல்காப் பியம், புறநானூறு, குறுந்தொகை, சிலப்பதிகாரம், சிந்தாமணி, மணிமேகலை, நாலடியார், திருக்குறள், திருவாசகம், அப்பர் பாடல், ஆழ்வார் பாசுரங்கள், தாயுமானுர் உபநிஷத்துக்கள், அருட்பா வேதம், திருப்புகழ் நாதம்—கணக்கற்ற இசைப் பாடல்கள் எல்லாம் தமிழ், உலகிற்குத் தந்த இலக்கிய மணிகள். இந்திய மனப் பண்பையும் கலைப் பண்பையும் அறிய இந்நூல்கள் அரிய சாதனங்களாகும். இந்திய வர லாற்றிற்கு இந்நூல்கள் பெரிய ஆதாரங்களாகும். இப்போதுள்ள இந்திய சரித்திரம் பெரும்பாலும் வட இந்தியச் சரித்திரமே. அசோகனைப் புகழும் அந்நூல், திருமாவளவன் பெயரையே அறியாது. ஹர்ஷனை அறிந்த சரித்திரக்காரர், மனுநீதி கண்ட சோழனையோ நெடுஞ்செழியனையோ அறியார்.

## தமிழன் உரிமை

இனிவரும் இந்திய சரித்திரத்தில், தமிழகத்திற்கு உரிய இடத்தையும் மதிப்பையும் தர வேண்டும். தென்னுடு ஆரிய—திராவிட நாகரிகத்தைப் பாதுகாத் தது; வேதக் கலையைக் காத்தது ; ஹிந்து தர்மாசரியர் களான பகவான் சங்கரர், இராமானுஜர், மாத்வர், மெய்கண்டார், திருமூலர், அப்பர், சம்பந்தர், மாணிக்கவாசகர், வள்ளலார் முதலியோர் தென் னுட்டுச் சுடர் மணிகளே. உலக இலக்கியத்திலேயே ஒப்பற்று விளங்கும் அருட்பாடல்கள் நமது தமிழகத்

திலேதான் எழுந்து முழங்கின. வட நாடு படையெடுப்புகளால் அல்லற்பட்டு இன்றொரு அரசு, நாளையோர் அரசாயிருந்த போது, தமிழகத்தில் சுதந்தரக் கொடி பறந்தது. செங்குட்டுவன், கரிகாலன், ராஜராஜன், இளஞ்செழியன் முதலிய மன்னர் சாம்ராஜ்யாதிபதிகளாக விளங்கி, இமயமலைமீதும் தமிழ்க் கொடி பொறித்தனர். இந்து சமுத்திரத் தீவுகளிலும் கொடி நாட்டினர்; வட நாட்டைப் படை யெடுத்த யவனரும், சோனகரும். பாண்டி மன்னரின் வாயிற் காப்பாளராயிருந்தனர்; பாண்டி நாட்டுக் கப்பல் சரக்குகளை வாங்கிச் சென்று பிழைத்தனர். இங்கிலாந்தின் பெயரே உலகிற்குத் தெரியாத காலத்தில் நமது தமிழகம் ஒரு வள்ளுவரையும், இளங்கோவையும், கம்பரையும் ஈன்றது. அக்காலம் உண்டான தமிழ் இலக்கியங்கள், இன்றும் புலவர் விருந்தாக விளங்குகின்றன. நாடு அரசியல் கொந்தளிப்புகளால் அல்லற்பட்ட போதும் அதன் இலக்கிய வளர்ச்சி குன்றிப் போகவில்லை; வடக்கே துளசிதாஸ், கபீர்தாஸ், மீரா போன்ற பக்த சிகாமணிகள் ஹிந்தியில் பாடினர். தமிழகத்தில் ஆழ்வார்களும், நாயன்மார்களும், பாரதியார்களும் ஏராளமாகப் பாடிக் குவித்திருக்கிறார்கள். நேற்று தேசாவேச பாரதியார் இயற்றிய வீரப்பாடல்கள், நாட்டன்பை ஊக்கி, மின்சாரக்கனல் பாய்ச்சிப் புதிய தமிழகத்தை ஆக்கின. இன்றும் தமிழகத்தில் அரிய கவிகளும், எழுத்தாளரும் இருக்கிறார்கள். கம்பனுக்குப் பிறகு இன்றும் பாரத சக்தி என்ற மகாகாவியம் தமிழகத்தில் உதித்திருக்கிறது.

## தமிழ் நடை

ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இலக்கண இலக்கியச் செல்வத்துடன் விளங்கியது தமிழ்மொழி;

அதன் நடை வரவர அழகும் தெளிவும் கலைச்சுவை யும் பெற்று முன்னேறுகிறது. தொல்காப்பியரைப் பின்பற்றிய சங்க நடை சிலப்பதிகாரத்துடன் சரி; திருக்குறளின் திட்ப நுட்பமான நடை வேறு; கம் பனின் இனிய, ஆழ்ந்த கலை நடை வேறு; புகழேந்தி யின் தெள்ளிய நடை வேறு; மீனாட்சி சுந்தரம் பிள்ளை யுடன் பழைய நடைப் பண்பிற்குக் கோடு கிழித்து விடலாம். சென்ற நூற்றாண்டில் அருட் ஜோதி ராமலிங்கம் புதிய எளிய, தெள்ளிய இசைநடையைக் கையாண்டு, உலகிற்கே புதிய சமரஸ சன்மார்க்க வேதத்தை அருளினார். வேதநாயகம்பிள்ளை பழ மொழிகளும் எதுகை நயமும் நிரம்பிய எளிய நடை யில் இசைப் பாடல்களைச் செய்தார். இனிய உரை நடை நூல்களையும் தந்தார். இவர்கள் தமிழில் புதிய கலைப் பண்பைத் தோற்றினார்கள். இவர்களுக்குப் பின் வந்த இலக்கியங்களெல்லாம் எளிய நடை பயின்றன.

## கவிக் குயில்

எல்லாவற்றிற்கும் சிகர ஜோதியாக விளங்கியது கவிக்குயில் பாரதி பாடல்; தமிழகத்தைத் தட்டி யெழுப்பிப் புதிய உணர்ச்சி தந்தது பாரதி பாடல். உபநிஷத்தின் ஆவேசத்தில் எழுந்த ரவீந்திரரின் வரம் பெற்ற கவிதை, வங்கத்தில் புதிய கலையை வளர்த்து, உலகப்புகழ் பெற்றது. தேசாவேசத்தில் எழுந்த பாரதியார் பாடல், பழைய மாமூல்களை யெல்லாம் உடைத்தெரிந்து, அச்சப் பேயைத் துரத்தி, அடிமைத் தளையை முறித்துப் புதிய தமிழகத்தை ஆக்கியது. திலகர், சிதம்பரம்பிள்ளை, அரவிந்தர், காந்திஜீ ஆகிய நால்வர் உள்ளமும் பாரதி வாக்கில் துடிக்கும். தமிழி லக்கியம் பாரதியார்வந்ததும் மறுமலர்ச்சியடைந்தது.

—பேசும் தமிழால் நாட்டைத் தலை நிமிர்ந்து பேச வைத்தார் பாரதியார். இலக்கணச் சிறையை உடைத் தெறிந்து, உள்ளுணர்ச்சிக்குத் தாராளமான சொல் லுரிமை யீந்தார் பாரதியார்.

## ஐயர்

இன்று தமிழர் பேசுவதும், எழுதுவதும் பாரதி —தமிழே. பாரதியாரை நினைக்கும் போது வீதி விளக்கு வ. வே. சு. ஐயரையும் நினைக்க வேண்டும். ஐயர் கலைக்கற்பகம்; மேற்கும் கிழக்கும் இணைந்த பெரும் புலவர்; கம்பரும், வள்ளுவரும், மில்தனும் தவழும் நாவலர். அவர்கதை யிலக்கியத்திற்குப் புதிய ஒளியீந்தார். அவர் தமது கலைக்கனவுகளை யெல்லாம் என் உள்ளத்தில் பதிய வைத்து மின்னென மறைந் தார். எனது ஆயுட் காவியமான பாரத சக்திக்கும் தேசிய கீதங்களுக்கும், சன்மார்க்கப் பாடல்களுக் கும் ஆக்கமும் ஊக்கமும் அளித்தார் ஐயர். நான் தமிழுக்குச் செய்த கலைப்பணிகள் ஐயர் கூட்டுறவிலே தான் மலர்ச்சி பெற்றது, ஐயர், பாரதியார்— ஆகிய இருவரும் புதிய தமிழகத்தை ஆக்கித், தமிழர் வீறு பெற்றுத் தலைநிமிர்ந்து நடக்கச் செய்தனர்.

## மறுமலர்ச்சி

அவர்கள் புண்ணியத்தால் இன்று சுமார் எழு கவிகளும் நூறு அரிய எழுத்தாளர்களும் தமிழிலக்கி யத்தை அலங்கரிக்கின்றனர். இன்று தமிழ் மொழி இனிய எளிய, தெள்ளிய, நேரியநடை பெற்றிருக் கிறது. டாக்டர் சாமிநாதையர் போன்ற சங்கப் புலவர்கள் கூட மறுமலர்ச்சிக் கேற்ற எளிய நடை யெழுதிச் சென்றனர். நெஞ்சில் உணர்ந்ததை அப் படியே உயிர்ததும்ப எழுதும் எழுத்தாளர் இன்று

தமிழகத்தில் இருக்கிறார்கள்-உதாரணமாகக், கல்கி கிருஷ்ணமூர்த்தி, மகா புத்திமானாகிய ராஜாஜீ, ரசிக மணி சிதம்பரநாதர், பி. ஸ்ரீ, திரு. வி. கலியாண சுந்தரர், சேதுப்பிள்ளை, புதுமைப் பித்தன் வ. ரா. முதலியோர் தமிழ் நடை உள்ளத்தை அள்ளும் பண்புடையது.

இன்று தமிழ் ஒரு புதியலாகவத்தைப் பெற்று விட்டது; இன்று கண்கண்டதையும், காது கேட்டதையும் மனம் உணர்ந்ததையும் எழுத்தாளர் அழகாக வர்ணிக்கின்றனர். நவரசச் சித்திரமாகத் தீட்டுகின்றனர். கதை கட்டுரை இரண்டும் நல்ல வளர்ச்சி பெற்றுள்ளன. கதை இலக்கியத்தில் தமிழே இன்று முன்னணியி லிருக்கிறது.

## தமிழ் வளர்ச்சி

ஆனால் புதிய உலகில் தலைநிமிர்ந்து நடக்க வேண்டுமானால், நாம் செய்ய வேண்டிய முயற்சிகள் எத்தனையோ உள. ஒரு பெரிய நூலகத்தை நோக்கினால், ஆங்கில இலக்கியங்கள் மலைமலையாகக் குவிந்து கிடக்கின்றன; தமிழ், வடமொழி இரண்டிலும் ஆத்ம ஞானம் நிரம்பியிருக்கிறது; இன்று நமக்கு வேண்டியது ஆங்கிலத்தில்பொங்கித் ததும்பும் விஞ்ஞானமே. பூதபௌதிக, ரசாயன, கணித, யந்திர சாஸ்திரங்களெல்லாம் நமது தாய் மொழியில் வழங்கிப் பொது ஜனங்களுக்கு விஞ்ஞான உணர்ச்சியும், எழுச்சியும் உண்டாக வேண்டும். அதற்கென்று இந்திய விஞ்ஞானிகளும் புலவர்களும் ஒத்துழைத்துக் கலை நூல்களை ஆக்கி மாணவர்களைப் பயிற்றி, அறிவைப் பரப்ப வேண்டும். கதைகளிலும் கட்டுரைகளிலும் விஞ்ஞானச் சுவை யேற்ற வேண்டும். நம்மிடையே ஆயிரக் கணக்கான ஜகதீசரும்,

ராமரும், எடிசனும், கூரியும், ஃபாரடேயும், மாக்ஸ்வெலும், நியூடனும், மார்கோனியும் தோன்ற வேண்டும். உலகம், மின் சக்தியிலிருந்து, அணுச் சக்திக்குத் தாண்டி விட்டது. நாம் அதற்குமேல் பரமாணு சக்தியை எட்டிப் பிடித்து, விஞ்ஞானப் புதுமைகளால் புது உலகிற்குப் புத்தொளிதர வேண்டும்.

## கலைச்செல்வம்

நமது நாட்டிற்குரிய இசை, சிற்பம், சித்திரம், காவியம் முதலிய பல கலைகளுக்கும் இலக்கணம் வகுத்து, உலகிற் பரப்பவேண்டும். இனிவரும் கவிகள் வறட்டுத் துறவையே வற்புறுத்தாமல்' மனித வாழ்வையே அமரானந்தக் கற்பகமாக்கும் சக்தி மின்சாரத்தைப் பாய்ச்ச வேண்டும். காளிதாசன் போன்ற சொல்லழகு, கம்பன்போன்ற கலையழகு, ஷேக்ஸ்பியரின் காட்சிப் புலமை, மில்தனின் ஆவேச வேகம், வள்ளுவரின் ஆழம், கெதேயின் தெளிவு, தாகூரின் ஆதர்சம், அருட்பாவின் தெய்வச் சுவை நிரம்பிய புதிய கவிகள் நமக்கு வேண்டும். மொழி பெயர்த்தால் உலகம் வியக்கும் இலக்கிய மதிப்பும், கலையின்பமும் அதில் இலகவேண்டும். இனி வரும் வசனம் வெறும் கட்டுக் கதையாகவே யிராமல், வாழ்விற்குப் பயனுகி உலகை வளஞ் செய்யும் பொருள் நிரம்பிய கலைச் செல்வமா யிருக்கவேண்டும். தமிழ் உள்ளம் இதெல்லாம் அறிந்துள்ளது. இன்று தமிழகத்தில் கலைக் களஞ்சியம் எழுந்துள்ளது. சுதந்தர இந்தியாவின் பொது மொழியான இந்தியுடன், இந்தியாவின் முன் மொழியும் தொன் மொழியுமான தமிழும் எட்டு வைத்து வெற்றிக்கு வெற்றி நடந்து, வாகை சூடுக! எந்தாய் வாழ்க!

முன்னேறும் தமிழையும் எழுத்தாளரையும் கண்ட எவரும் வருங்காலததில் நம்பிக்கை கொள்வர். முயற்சி மேலோங்குக! தமிழ் சிறந்தோங்குக!

## உச தமிழ் வாழ்க!

என்னருமைத் தமிழர்களே, ' தமிழ்'' என்னும் போது என்னுள்ளம் சிலிர்க்கிறது. எனது நரம்புகளில் ஒரு மின்சார சக்தி பாய்கிறது. "தமிழர்" என்னும்போது, என்னுள்ளம் அன்பு வெறிகொள்ளுகிறது. தமிழ்ச் சமுதாயமே, எனது அன்பினுல் உன்னைத் தழுவி முத்தமிடுகிறேன். என் ஆர்வத்தால் உன்னைக் கொஞ்சுகிறேன். நீ உலகில் தலை நிமிர்ந்து நில்! தமிழ் நாடே, நீ உலகின் திருக்கோயிலாக விளங்கு; எல்லையற்ற கலைக்கோயிலாக, தொழிற் கோயிலாக விளங்கு!

தமிழர்களே, சுற்றியுள்ள நாடுகளைப் பாருங்கள்! நமக்கடுத்துள்ள ஆந்திரரின் வீராவேசத்தைப் பாருங்கள்! வடநாட்டாரின் அபாரமான முன்னேற்றத்தைப் பாருங்கள்! சென்ற நானூருண்டுகளாக நமது நாடும் சமுதாயமும் அடிமை யிருளில் ஆழ்ந்திருக்கின்றன. இன்று நமது சமுதாயம் ஒரு புதிய உணர்ச்சி பெற்றுள்ளது. இரண்டாவது நூற்ருண்டில், கடைச்சங்கக் காலத்தில் நமது சமுதாயம் எல்லா வகையிலும் வெற்றித் திறனுடன் விளங்கியது. முற்சிறப்புகள் பல இருக்கலாம். அவற்ருல் நமது புதிய உணர்ச்சி ஆவேசம் பெறவேண்டும்; இப்பாரத நாட்டில் தமிழருக்குள்ள உரிமையை நாம் அறிய வேண்டும். தமிழியக்கத்தை உலகளாவிய ஒரு கலையியக்க மாக்கவேண்டும். நூறு பண்டிதர்கள் சபை கூடிச் சில தீர்மானங்களைச் செய்துவிட்டுப் பிரிந்தாற் போதாது. கல்வி, கலை, கவிதை, இசை

நாடகம், சிற்பம், சித்திரம், அரசியல், சன்மார்க்கம் அனைத்திலும் தமிழ் சிறப்புற்று, உலகில் மதிப்புற வேண்டும். தமிழ்க்கலை வடக்கிலும், மேற்கிலும், கிழக்கிலும் கதிர் விரிந்து பரவவேண்டும். அருளும், பொருளும், அறிவும், அறமும், தொழிலும், செல்வமும், கலையும், கல்வியும் செழித்த புதிய தமிழ்நாடு தோன்றவேண்டும். வங்க வாலிபர் தமது கலைத் திறமையை உலகில் அரங்கேற்றிப் புகழ் பெறுகின்றனர். என்னருமைத் தமிழர்களே! உங்களுக்கு அத் திறமையில்லையா?

உலகை வெல்லும் வீரக்கனல் உங்களுக்கு உண்டாகட்டும். ஓர் உதாரணம் பாருங்கள்: அருட்சோதி வள்ளலாரும், பகவான் பரமஹம்ஸரும் ஒரே காலத்தவரே. பின்னவருக்கு ஒரு விவேகானந்தர் தோன்றினார். முன்னவர் பெருமை ஒரு நூற்றாண்டிற்குப் பிறகு அருட்பா வடிவமாகச் சில தமிழர் கையிலிருக்கிறது. அவ்வளவுதான். இரண்டாண்டுகளுக்கு முன்பு, வட நாட்டுப் பத்திரிகை யொன்றில் மஹாத்மா ராமலிங்கம் என்ற ஒரு கட்டுரை ஆங்கிலத்தில் எழுதினேன். ஹிந்தி கல்யாணியிலும் அதன் மொழி பெயர்ப்பு வெளி வந்தது. மறுவாரமே "ஹிந்தி அல்லது ஆங்கிலத்தில் வள்ளலார் நூல்கள் இருந்தால் அனுப்ப வேண்டும்" என்று ஏராளமான கடிதங்கள் வந்தன. அதன் பிறகு வள்ளலார் வரலாற்றையும், சமரஸ சன்மார்க்க விளக்கத்தையும் முதன்மையான அருட்பாக்களையும், வள்ளலார் உபதேசங்களையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து, "மஹாத்மா ராமலிங்கம்" என்னும் நூலாக வெளியிட்டேன். இப்போது உலக மஹாத்மாக்களில் நம் வள்ளலாரையும் சேர்த்துப் பெருமை செய்கின்றனர் வடநாட்டார். அவ்வாறே சில மேனாட்டாரும் வள்ள

லாரைப் பெருமை செய்கின்றனர். அதே மாதிரி முயன்று, கம்பர், வள்ளுவர், ஆழ்வாராதிகள், நாயன்மார்கள் பெருமையும் இப்போது வடநாட்டாருக்கு நன்கு தெரிந்திருக்கிறது. கற்ற கலையை உலகரங்கில் ஏற்றிப் புகழ் பெற வேண்டும். நமது தென்னாட்டில் எத்தனையோ நடிகர், நடனர், கவிகள், ஓவியர், இசைப் புலவர் இருக்கின்றனர். இவர்கள் வடக்கும், மேற்கும், சென்று உலகப் புகழ் பெற வேண்டும்.

என தருமைத் தமிழர்களே, நம் பெரியார் கண்ட அருட் சமயத்தின் பெருமைதா னென்ன! தமிழரின் அருட் செல்வம் உலகிற்குப் பயன்பட வேண்டும். ஔவை, வள்ளுவர், திருமூலர், கம்பர், சேக்கிழார், அப்பர், நம்மாழ்வார், மாணிக்கவாசகர், தாயுமானவர், அருணகிரி, வள்ளலார் முதலிய பெரியார் நமக்களித்துள்ள அருட்செல்வத்தைப் பயின்று, தேர்ந்து உலகளாவப் பரப்புவோம். இதை நினைக்கும் போது என் உள்ளம் சிலிர்க்கிறது. நம் அருட் புலவர் செஞ் சொல் கேட்கிறது. "இறைவன் ஒருவன்; அவன் உயிர் மேனியன்; உலகம் அவன் கோயில்; மாந்தர் அக்கோயிற் பணியாளர்; வாழ்வெல்லாம் வழிபாடு; கையில் முயற்சியும் கருத்திற் கடவுளுமாக வாழ்க! வாழ்வைத் திருவருள் விளக்கமாக்குக!" என்று செந்தமிழ்ச் சித்தர் கணம் பேசுகிறது. தமிழின் அருட் செல்வத்ைதை உலகளாவ வளர்க்க ஓர் அறவோர் குழுதோன்றுக!

அருமைத் தமிழர்களே, உங்கள் மேலுள்ள பாசத்தால், சுற்றிலும் முன்னேறும் நாடுகளைப் போல நீங்களும் முன்னேறி ஆளாகவேண்டும் என்னும் ஆர்வத்தால், சில மொழிகளைச் சொன்னேன்.

அவற்றை நன்கு ஆராய்ந்து பாருங்கள்; அவரவருக்கு இயன்ற கலைகளைப் பயின்று பணி செய்யுங்கள். எல்லாரும் எல்லாத் துறைகளிலும் ஈடுபட முடியாது. எல்லாம் வல்ல இறைவனுக்கே எல்லாம் இயலும். ஒவ்வொருவருக்கும் ஏதாயினும் ஒரு துறையிலேதான் புலமை அதிகமாயிருக்கும். அப் புலமையைக் கொண்டே அவரவர் நிலையினின்று தமிழுக்கு ஆவன செய்யுங்கள்.

**தமிழ் வாழ்க! தமிழர் வாழ்க!! தமிழகம் வாழ்க!!!**

## புதிய தமிழுலகைத் தோற்றுவோம்

தமிழின் பெருமைகளைப் பேசுவோம்—பழந்
தமிழிற் புதியவொளி வீசுவோம்
தமிழர் ஒருகுலமாய் வாழுவோம்—இளந்
தமிழர் தமிழ் விரதம் பூணுவோம்
புதிய தமிழுலகைத் தோற்றுவோம்—புவி
புகழக் கலைத்திறமை காட்டுவோம்.
முதிய நலங்களெல்லாம் போற்றுவோம்-இன்று
மூளைக்கும் அருஞ்சுவைகள் கூட்டுவோம்
சாதிமத வேற்றுமையைப் போக்குவோம்—சுத்த
சமரஸ வொற்றுமையை ஊக்குவோம்
சோதனைசெய் இடர்களைத் தாண்டுவோம்—மனந்
துணிந்து வீரவொளி தூண்டுவோம
சுற்றியுள்ள நாடுகளை நோக்குவோம்—அங்கே
சொக்கும் புதுமைகம தாக்குவோம்
வெற்றிமுர சுலகெல்லாம் சாற்றுவோம்—நாம்
விண்ணுயர ஜயக்கொடி யேற்றுவோம்
ஆற்றலை மறந்தின்னும் தூங்கவோ—செல்வம்
அளவற் றிருக்கப்பிச்சை வாங்கவோ
நாற்றிசையும் தமிழிசை நாட்டுவோம்—இங்கே
நாமும் மனிதரெனக் காட்டுவோம்.

எந்தாய் வாழ்க!

**சுத்தானந்த பாரதி**

